


# 8. மரபு வழக்குகளும் செறிவுத் தொடர்களும்

## (Idioms and phrases)

### மரபு வழக்குகள்

அச்சில்லாக் காசு - முத்திரை இல்லாத காசு; செல்லாத காசு. முத்திரையில்லாக் காசு போலப் பயனற்றது என்பது குறிப்பு. எனக்கு வாழ் முதலாகிய பெருமானே! உன்னைப் பெற்று வைத்து இனி ஓர் அச்சில்லாக் காசாய்ப் போனால் போகட்டும் என்று உன்னை விட்டுவிடுவேனோ? என்கிறார் நம்மாழ்வார். 10.10.8-24,36.

அஞ்சாறு குளிக்கு நிற்றல் - சில காலம் வரை இருத்தல். பெருமான் ஒருமுறை அணைத்துவிட்டால் அவன் மார்பிலிருந்து தங்கள் மேற்படும் கோயிற் சாந்தின் மணம் அஞ்சாறு குளிக்கு நிற்கும் என்கின்றனர் பாவை நோற்கும் மகளிர். பாவை, 10-3.

அஞ்சினான் புகலிடமாய் இருப்பவன் - இக்கட்டில் காப்பவன். இராவணன் அரக்கர்களுக்கெல்லாம் வழியடித்துப் புக்கு ஒதுங்கலாம்படி அஞ்சினான் புகலிடமாய் இருந்தான். பெ.தி.5.1.4.

அடிக்கழஞ்சு பெற்றுச் செல்லல் - ஓர் அடிநிலம் ஒரு கழஞ்சு தங்கத்திற்குச் சமமாக இருத்தல்; மேன்மை பெற்றுச் செல்லல் மிகச் சிறந்ததாய் அமைதல் என்பது குறிப்பு. இறைத் தொண்டில் அடிக்கழஞ்சு பெற்றுச் செல்லக் கடவ காலத்தை வீணாகப் போக்கினேன். பெ.தி.1.6.2. திருவரங்கத்தில் வாழ்வது அடிக்கழஞ்சு பெற்றுச் செல்லாநிற்கும். தி.மா.3.

அடுகவளம் தடைப்படுதல் - அடு கவளம் தடைப்படுதல் என்பதன் சிதைவாகத் தோன்றுகிறது. ஈட்டில் இதனை யடுத்து 'அவன் ஸ்வாதந்தர்யம் தலையெடுத்ததோ

தன்னூணை இழக்கிறான்' என வருதல் காண்க. அடப்பட்ட சோறு தடைப்படுதல் என்பது நேர்ப்பொருள். பக்குவமாக இருக்கும் அருள் தடைப்படுதல் என்பது குறிப்பு. பெருமானுக்குச் சுவாதந்தரியம் தலையெடுத்ததாகில் நப்பின்னைப் பிராட்டியின் அருள் தடைப்படும்போலே காணும் என்று அஞ்சுகிறாராம் நம்மாழ்வார். இதனை அவன் ஸ்வாதந்தர்யம் தலையெடுத்ததாகில் அடுகுவளம் தடைப்படும்போலே காணும் என்று குறிக்கிறது ஈடு. 10.4.3-36.

அந்தப்புர விருத்தாந்தம் - முக்கியமான ரகசியங்கள். தீர்ந்த அடியவர் தம்மை அர்ச்சிராதி நெறியிலே திருநாட்டுக்குக் கொண்டுபோதல் தொடக்கமான இறைவனுடைய அந்தப்புர விருத்தாந்தங்களைப் பிதற்றுவோரது புகழைக் கூறுபவர்களே எம்மை உய்யக் கொள்கின்ற நம்பர் என்கிறார் நம்மாழ்வார். 3.3.3-36.

அம்மான்பொடி - கள்வர் குழந்தைகளைக் கவருவதற்காக அவர்கள் மேலே அம்மான் என்று சொல்லி ஒருவகைப் பொடியைத் தூவினால் அந்தப் பிள்ளைகள் அவர்கள் பின்னே 'அம்மான்', 'அம்மான்' என்று சொல்லிக்கொண்டு போவார்கள்; அந்தப் பொடி என்பது நேர்ப்பொருள். மயக்கும் பொருள், கவரும் அழகு என்பவை குறிப்பு. இறைவனுடைய அழகு, சீலம் முதலியன அடியாரை மயக்கும் அம்மான் பொடிகளாகும். 3.3.3-36; இறைவன் முகம் அம்மான் பொடி என்பது பலரும் அறிந்ததொன்று. பாவை, 9-6.

அமணக் கூத்தடித்தல் - வெட்கமற்ற செயல். உயிர்கள் முன்னைய நிலை, நடுவில் நிற்கிற நிலை, மேல் போக்கடி ஆகிய அறியும் இறைவன் முன்பே இருந்து நெஞ்சமே, அமணக் கூத்தடியாதே கொள்ளாய்-பெ.தி.11.8.2. பெருமானே, நீ உடனிருக்கவோ நான் இவ் அமணக் கூத்தெல்லாம் அடித்தேன் என்கிறார் தொண்டரடிப் பொடியாழ்வார். தி.மா.34.

அறுகாதப் பயணம்போதல் - நெடுந்தூரம் செல்லல். பெருமான் அறுகாதப் பயணம் போய்ப் பரமபதத்திலே காணவிராமல் திருமெய்ய மலையில் வந்து அணியன் ஆனான். பெ.தி.11.7.5.

ஆட்டத்து வெளியிலே யானைக் காலிலே துகையுண்ணல் - அரசர்க்குரிய வையாளி வெளியிலே யானைக் காலிலே சிற்றரசர்கள் துகையுண்ணல் என்பது பொருள்.

அபிமானம் அற்றுத் தொழுதல் என்பது குறிப்பு. பெருமான் திருவடி திருத்தோளில் ஏறிப் புறப்படுங்கால், சிவன் முதலான வாணவர் ஆட்டத்து வெளியிலே யானைக் காலிலே துகையுண்ணா நிற்பர்கள். 2.2.10-36.

ஆலத்தி வழிக்க வேண்டும்படியான* - பார்வைக் குற்றம் கழிக்க வேண்டும்படியான பொருள். மிக்க அழகுடைய பொருள் என்றபடி. கண்டார்க்கு ஆலத்தி வழிக்க வேண்டும்படியான தலைமகளின் கண்கள் இரவும் பகலும் கண்ணீர் சிந்தின. 2.4.10-24.

ஆளிட்டு அந்தி தொழுதல் - தான் சந்தியாவந்தனம் செய்ய முடியாதபோது தனக்காக மற்றொருவரை அமைத்துத் தொழுதல். தனக்காகப் பிறரை அமைத்தல் என்றபடி. திருமால், அடியவர்களை ஆளிட்டு அந்தி தொழாதே தானேயோடி அவர்கள் துன்பங்களைத் தீர்ப்பவன். நான்.தி. 88.

ஆனைக்காலிட்டுத் துகைப்பித்தல் - பெரிதும் வருத்துதல். நாட்டுக்கு அரசனேயாகிலும் அந்தப்புரத்தை (தன் தேவியரை) ஆனைக் காலிட்டுத் துகைப்பித்துச் சேர்ந்து இன்பந்துய்த்தல் ஒண்ணாது. 6.2.0-36.

ஆனைக்குக் குதிரை வைத்தல்* - யானையின் வேகத்தைச் சோதிப்பவர்கள், குதிரையை முன்நடத்தி யானையைப்பின் நடத்துவார்கள்; யானையும் துதிக்கையாலே குதிரையைத் தொடும்படி நெருங்கிச் சென்று பின்னையும் தொட மாட்டாதே ஒழியும். அதுபோலப் பிடிகொடுப்பது போல இருந்து பிடிகொடாது மேம்பட்டிருத்தல் என்றபடி. திருமால் கலவியில் திருமகளுக்கு ஆனைக்குக் குதிரை வைக்கவல்ல அறிவு மேம்பாட்டை உடையவன். 1.1.1-36; 3.10.8-24; 5.5.8-36; பெ.தி. 5.5.8; 7.6.8.

ஆனைத்தாளாயிருக்கை - சன்னலாக இருக்கை; காணும் வாயிலாக இருத்தல். பெருமானின் பங்கயக் கண்கள் அக வாயில் தண்ணளிக்கு ஆனைத்தாளாய் அமைந்திருக்கின்றன. 3.7.1-24.

ஆனைத்தொழில்கள் - மனித முயற்சிக்கு அப்பாற்பட்ட அருஞ் செயல்கள். பிரமன் முதலானோர் மேற்கொண்ட செயல் களை அவர்கள் வழியாலே நடத்தியும், தான் மேற்கொண்ட

செயல்களைத் தானே நடத்தியும் வருகையாலே அவனுடைய ஆனைத் தொழில்கள் எங்கும் காணக்கூடியனவாய் இருக்கும். 2.8.3-36. பெருமான் வராகமாய்த் தோன்றி எப்பொருளும் அசையாதவாறு பூமியை எடுத்துப் பெரிய ஆனைத்தொழில் செய்தான். 7.4.3-36. பெ.திருவந். 42.

இடக்கை வலக்கை வாசியறியாதவர்கள் - இடக்கையின் செயலும் வலக்கையின் செயலும் அறியாதவர்கள் என்பது நேரடிப் பொருள்; அறிவொன்றுமில்லாதவர் என்பது குறிப்பு. கண்ணன், ஐந்து லட்சம் குடியில் இடக்கை வலக்கை அறியாத இடைச்சிகள் கையெடுத்துக் கூப்பிடும்படி வெண்ணெயை அமுது செய்தான். பெ.தி. 4.10.1.

இடு சிவப்பு - மருதாணி முதலியவை இடுவதால் வரும் சிவப்பு என்பது நேர்ப்பொருள். செயற்கை என்பது குறிப்பு. இடைப் பெண்கள், பெருமானை நோக்கி 'இப்போது மேன்மை உனக்கு இடுசிவப்பு, பரிவே (வாத்சல்யமே) இயல்பு என்று உன்னைக் கண்டவாறே நிலையிட்டோம்' என்கிறார்கள். பாவை, 26-6.

இடைச்சுவர்* - இடையில் தடையாக இருக்கும் சுவர்; தடை. இராமபிரான் பிராட்டியை அடைவதற்கு இடைச்சுவரான வில்லை முறித்தான். தி.நெ.தா. 13.

இரண்டடியாக இடுதல் - எளிதாகத் திரிவிக்கிரமன் இரண்டடியால் மூவுலகினையும் அளந்தான்; எளிதாகச் செய்தல். இராமபிரான், இராவணனை நின்ற இடத்திலே நின்று பூவலர்ந்தாற் போலே இரண்டடியாக இடமாட்டாது கொடிய காட்டில் பரற்கற்கள் பாய நடந்து சென்று அழித்தான். பாவை, 24-6.

இராமடம் ஊட்டுவாரைப் போலே - தன் கண் எதிரே வாராது கண்டபடி திரியும் தம் மக்களை அவர்கள் அறியாதவாறு இரவில் மடத்தில் உணவு அருந்தும்படி செய்யும் தாய்மார் போலே, யார் என்று அறியாவண்ணம் மறைந்திருந்து உதவி செய்தல். இறைவன் திருப்பெயர் இராமடம் ஊட்டுவாரைப் போலே முகம் தோற்றாதே நின்று உதவுகிறது. அதனை அறியாத மனிதன் தானே செய்துகொண்டானாக நம்புகிறான். தி.மா. 1.

இருவிலங்காகக் கிடத்தல் - பெரிய விலங்கு போல வழியின் குறுக்கே மறைத்துக் கிடத்தல். பெண்கள் இங்கிருந்தால் தானே மிறுக்குகள் செய்வான் என்று சோலையைவிட்டு ஒருவர் ஒருவராகப் போகத் தொடங்கியபோது பெருமான் ஒற்றையடிப்பாதையில் இருவிலங்காகக் கிடந்தான். 6.2.8-36.

இலையகலப்படுத்தல் - இலையை விரித்துவைத்துச் சோற்றிற்குக் காத்திருத்தல். பெருவிருப்போடு எதிர்நோக்கியிருத்தல் என்பதுகுறிப்பு. இராமபிரானோடு தனியே இன்பம் நுகரலாம் என்று இலையகலப் படுத்திக்கொண்டு வந்த பிராட்டியைப் பிரிந்து அவன் பத்துத் திங்கள் இருந்தான். 6.10.10-36.

இவரைப் பாடுவித்த முக்கோட்டை - முக்கோட்டை என்பது மலைநாட்டிலுள்ளதோர் அம்பிகையின் தலம். அதனை நினைத்தால் கவிஞர்களுக்குக் கவிதை ஊற்றெடுக்கும் என்பது பண்டைய நம்பிக்கை. திருமாலிருஞ்சோலைமலை நம்மாழ்வாரைப் பாடுவித்த முக்கோட்டை ஆகும். 10.7.5-36.

இவருடைய ஸ்ரீமைத்ரேய பகவான் - ஸ்ரீபராசரர், மைத்ரேயர் மேலும் மேலும் வினாக்களைக் கேட்டதனால் தத்துவங்களை விரிவாகக் கூறினார். மைத்ரேயர் போலத் தூண்டுகோலாக இருப்பதனை ஸ்ரீமைத்ரேய பகவான் என்பர். நம்மாழ்வார் அவா மேலிட்டால் திருவாய்மொழி ஆயிரம் பாடினார். நம்மாழ்வாருடைய ஸ்ரீமைத்ரேய பகவான் அவா என்பர். 10.10.11-36.

உச்சிவீடு விடாதே* - வேலை செய்வோர் உச்சி வேளையில் வேலையை விடுத்து ஓய்வு கொள்வர்; அவ்விடுப்பும் கொள்ளாமல் என்பது நேர்ப்பொருள்; இடைவிடாமல் என்பது குறிப்பு. திருவேங்கடத்தாயன் திருவடிகளைப் போற்றினால் இதற்கு முன்பு உச்சிவீடும் விடாதே சென்ற பிறப்பு இறப்புகள் இனி ஓயும் 3.3.9-24, 36. தென்திருப்பேரெயில், திருநாள் உச்சி வீடு விடாதே செல்லும் ஊர். 7.3.3-24.

உதிரக் கூறை காட்டல் - அடிபட்டவன் குருதிக்கறை படிந்த ஆடையைக் காட்டுவது போலே தன் துயரநிலையினைக் காட்டல். நம்மாழ்வார் பொய்ந்நின்ற ஞானமும் பொல்லா

வொழுக்கும் அழுக்குடம்பும் என்று இறைவனுக்குத் தம் உதிரக் கூறையைக் காட்டுகிறார். தி.வி.1.

உரிகூறை கொள்ளல் - நிறையை அழித்தல். பெருமான் தன் பரிவால் குதறிச் சிவந்த கண்ணாலே தன்னை உரிகூறை கொண்டான் என்கிறாள் பராங்குசநாயகி. 5.3.2-24.

உழுதுபால் - குழம்புப்பால் என்பது நேரடிப்பொருள். அந்தப் பால்போல் சுவை மிக்கதாய் இனிமை நிறைந்ததாய் இருக்கும் பொருள் என்பது குறிப்பு. பெருமான் நோக்காலே படுகுலை யடிக்கிலும் விடமுடியாதவாறு உழுதுபாலாக அவனது தோள் இருக்கின்றது. பாவை, 4-6.

உன்மத்தங்காய் தின்னப்பண்ணல் - மயங்கச் செய்தல். நம்மாழ்வார் தாம் உறுவது அறியாதபடி சிற்றின்பப் பொருள்களைக் காட்டித் தம்மை இறைவன் உன்மத்தங்காய் தின்னப் பண்ணினான் என்கிறார். 7.1.4-36.

ஊட்டியாக நெரித்தல் - கழுத்தோடு நெரித்தல். மாடுகளின் கழுத்தை ஊட்டி என்று குறிப்பது நாட்டுப்புறப் பேச்சு. உணவாகக் கருதி நெரித்தல், இன்பமாக நெரித்தல் என்றும் பொருள்படும். கண்ணன் நப்பின்னையோடு அணைகைக்குத் தடையாகையாலே எருதுகள் ஏழையும் ஊட்டியாக நெரித்தான். பெ.தி.1.2.3.

ஊமத்தங்காய் - மயங்கச் செய்யும் பொருள். தலைமகன் தலைமகளாகிய இருவரும் இருவர்க்கும் ஊமத்தங்காயானால் தெளிய விரகில்லை. 6.7.0-36.

எட்டாப்பூ - கிட்டுதற்கு அரிய பொருள். எல்லார்க்கும் எளியனாய் இருக்கும் இறைவன் எனக்கு மட்டும் எட்டாப் பூவாய் இருக்கிறான். தி.நெ.தா.29.

எட்டுப்புரியும் கட்டல் - விதையினைக் கோட்டை கட்டுவோர் எட்டுப்புரி கட்டுவார்கள். பொதிந்து வைத்தல் என்பது குறிப்புப் பொருள். தொண்டரடிப் பொடியாழ்வார் பொய்களையெல்லாம் எட்டுப் புரிகட்டித் தாம் வைத்த தாகச் சொல்லுகிறார். தி.மா.33.

எட்டுமிரண்டும் அறியாதவர் - ஒன்றுமறியாதவர். ஆயர் சிறுமியர் கண்ணன்பால் எட்டுமிரண்டும் அறியாத தங்கள் பருவத்தினைப் பார்க்குமாறு வேண்டினர். பாவை, 16-6.

எத்தனை குளிக்கு நிற்கும் - எவ்வளவு காலத்திற்கு நிற்கும். குருகூர்ச் சடகோபனை மதுரகவி மேவிநிற்றல் எத்தனை குளிக்கு நிற்குமென்று வினவினால், காலமெல்லாம் நிற்கும் என்கிறார். க.நு.சி.2, நஞ்சீயர்.

எத்திறம் என்னப் பண்ணல் - நம்மாழ்வார் கண்ணன் வெண்ணெய் களவு கண்ட செயலை நினைத்து எத்திறம் என்று மோகித்தார், அதனையொட்டி 'எத்திறம்' என்பதனை மயங்க வைப்பதனையும் வியப்படையச் செய்வதனையும் குறிக்கப் பயன்படுத்துகின்றனர். இறைவன் சீர் முற்றறிவினரையும் 'எத்திறம்' என்னப் பண்ணும் தன்மையுடையது. பாவை, 27-3. தலைமகள் தலைமகன் பேச்சினைக் கேட்டு எத்திறம் என்கிறாள். தி.வி.15. இவருடைய எத்திறம் இருக்கிறபடி . க.நு.சி.1, நஞ்சீயர்; அம.1.பெரி; பாவை, 5-3.

எதிரம்பு கோத்தல் - பகைத்தல். இறைவன் உலகில் இராமன் தொடக்கமான அவதாரங்களை மேற்கொண்டு வந்தபோது இராவணன் முதலானோர் எதிரம்பு கோத்து நின்றனர். தி.மா.0.

எருது கெடுத்தார்க்கும் ஏழே கடுக்காய் - எதிர்பாராமல் பயன் தருதல். எருதினை இழந்தவன் அதனைக் கண்டுபிடித்தற்கு வழி என்ன? என்று ஒருவனைக் கேட்க, அவன் விளையாட்டாக "ஏழு கடுக்காய் சாப்பிடு" என்றான். அவனும் மெய்யென்று அதனைத் தின்று குளக்கரையிலே இருக்க, அங்கே எதிர்பாராமல் எருதும் வந்தது. அதனை அவன் ஓட்டிக் கொண்டு வீட்டிற்கு வந்தவாறே, ஒரு மலடி "என் மலடுநீங்க வழிசொல்" என்றாள். அவன் "நான் அறியேன் எனக்குச் சொன்னவனைக் கேள்" என்றான். அவளும் அங்கே போய்க் கேட்க, அவனும் "நாளாப் பெண்டிர்க்கும் ஏழே கடுக்காய்" என்றான். அவளும் கடுக்காய் உண்ண அவள் வயிற்றில் இருந்த அழுக்குகள் நீங்கிக் கருவுற்றாள். இதனை ஒட்டி வந்த மரபுதொடர் இது. வீடணன்தனது சரணாகதி இராமலக்குவரிடம் பயன் தந்தது கொண்டு எருது கெடுத்தார்க்கும் ஏழே கடுக்காய் என்னும் கணக்கில் பெருமாளுக்குக் கடலைச் சரணம்புக அடுக்கும் என்றான். தி.வி.42.

எல்லாக் குளிக்கும் நிற்கும் - காலமெல்லாம் நிற்கும். தொண்டரடிப் பொடியாழ்வார் இறைவனை வணங்கும் தனது தன்மை எல்லாக் குளிக்கும் நிற்கும் என்கிறார். தி.மா.35.

எலி எலும்பர் - புல்லிய ஆற்றலுடையவர். எலி எலும்பரான நாம் நம்முடைய செயலால் பாவத்தைப் போக்குவது அரிது. பெ.திருவந். 31.

எழுதிக் கொள்ளல்* - அடிமையாக் கொள்ளல். கண்ணன் நம்மாழ்வாரைத் தன் வடிவழகாலே எழுதிக்கொண்டான். 2.5.5.36.

ஏறிப் பாயாத மேடு - பரவாத இடம். சக்கரவர்த்தி திருமகனார் ஆண்பிள்ளைத்தனம் ஏறிப்பாயாத மேடு இல்லை. பெ.தி.2.8.2.

ஒருகலத்தில் உண்டு எதிர்த்தல் - மிகவும் ஒன்றுபட்டு எதிர்த்தல். பகைவர்கள் எல்லோரும் ஒரு கலத்தில் உண்டு எதிர்த்தாலும் விரல் நுனியாலே அழிக்கும் ஆற்றல் பெற்றவன் கண்ணபிரான். தி.பல்.1.

ஒரு குடநீரோடே போகும் உறவு - எளிதில் ஒழித்துக்கொள்ளக் கூடிய தொடர்பு. ஆய்ச்சியர்கள் தங்களுக்கும் கண்ணனுக்கு மிடையே உள்ள உறவு ஒரு குடநீரொடே போகும் உறவன்று என்றார்கள். பாவை, 28-3,6.

ஒரு குலையில் காய் - ஒரு கூட்டத்தில் உறுப்பினர். திருமங்கையாழ்வார் சம்சாரிகளில் ஒருவரான தம்மை நாமும் ஒரு குலையில் காயன்றோ? என்று எண்ணி ஐயுற்றுத் தாம்படுத்த படுக்கையைத் தடவிப் பார்த்தார். பெ.தி.2.6.1.

ஒரு பயணம் எடுத்துவிடல் - ஒரு பயண தூரம் கடந்து வருதல். ஒரு நிலை கடந்து வருதல் என்பது குறிப்பு. திருநாட்டில் வீற்றிருக்கும் பெருமான் ஒரு பயணம் எடுத்துவிட்டுக் கேசவனாக அவதரித்தான். 1.5.6.36.

ஒரு மஹாபாரதம் - மகாபாரதம் என்னும் இதிகாசம் பல சுலோகங்கள் கொண்டது. மிகுதி, பல என்பது குறிப்புப் பொருள். யான் செய்த தீவினைகள் சில அல்ல; ஒரு மகாபாரதம். 6.1.9-24;36. பெருமான் செங்கனிவாயின் அழகு பேசத் தொடங்கின், ஒரு மஹாபாரதத்துக்கு வரும். 7.3.8-24.

ஒரு மார்வெழுத்தாக்கிக் கொள்ளல் - அடிமைப்பட்டவர்கள் தம்மை அடிமையாகக் கொண்டவன் பெயரை மார்பில் எழுதிக் கொள்வர்; அடிமையாக்கிக் கொள்ளல் என்றபடி.

பெருமாளும் இளையபெருமாளும் தம் குணத்தாலே நாட்டையெல்லாம் ஒரு மார்வெழுக்தாக்கிக் கொண்டிருந் தார்கள். 5.10.0-36.

ஒருவர் கூறை எழுவர் உடுக்கும்படி - கலங்கும்படி. இராமன், மதிளையுடைத்தான இலங்கை ஒருவர் கூறை எழுவருடுக்கும் படி கைக்கெட்டிற்றோர் அம்பை விட்டான். பெ.தி. 4.3.6.

ஒரு விழுந்தான் கிடக்கை - புகழற்ற பொருள். கைகேயி அயோத்தியில் பிறந்தவளாகில் பெருமாளுக்குத் தீங்கு செய்திருக்கமாட்டாள். அவள் எங்கோ பிறந்த ஒரு விழுந்தான் கிடக்கை. 7.5.1-36.

ஒவ்வோக் குழியிடாதே இருத்தல் - ஒ, ஓ என்று மணலில் குழி குழியாக எழுதி, அதில் பிள்ளைகள் விரலால் எழுதப் பழகுவது ஒவ்வோக் குழியிடல். அடியெடுத்து வையாத நிலை என்பது குறிப்பு. இறைவனைப் பற்றி ஒவ்வோக் குழி யிடாதே இருப்போர்கள் உலகில் பலராவர். 5.6.2-36.

ஓட்டையோடத்தோடே ஒழுகல் ஓடம் - ஓட்டையோடம் பெரிய துளையுள்ளது. ஒழுகலோடம் சிறுதுளையுடையது. இரண்டும் பயனற்றவை என்பது குறிப்பு. திருவிண்ணகர்ச் சேர்ந்த பிரானைத் தவிரப் பிற தெய்வங்கள் ஓட்டையோடத் தோடே ஒழுகல் ஓடமாய்க் கழுத்துக்கட்டியாய் இருப்பவை யாகும். 6.3.7-24.

ஓலக்க வார்த்தை - அவையில் கூறும் போலியாக (டம்பமாக)ச் சொல்லும் வார்த்தை, உறுதியற்ற பேச்சு. நெஞ்சே! இராம பிரானைப் பரம்பொருள் என்று அறிந்து அவனை வணங்கு என்று யான் சொல்வதை ஓலக்க வார்த்தையாகக் கருதாமல் திண்ணமாக எண்ணுவாயாக என்கிறார் நம்மாழ்வார். 2.7.10-36.

ஓலைப்புறத்தே கேட்டுப்போதல் - நூல்களால் அறிதல். பெருமான், நாராயணன் என்னும் சொல்லின் பொருளை நாராயணாநுவாகமாகிற ஓலைப்புறத்தே கேட்டுப் போகாதே கண்ணாலே கண்டு அனுபவிக்கலாம்படி வாமனனாய் அவதரித்தான். தி.நெ.தா.5.

கடலோசையாதல் - பொருளற்ற ஒலியாதல். இராமன் இருடிகளுக்குப் பண்ணிய உறுதிமொழி கடலோசையாகாமல் அதனைச் செய்து தலைக்கட்டுகையில் எண்ணங்கொண்டான். தி.நெ.தா.21.

கடலோடல் - கடல் கடந்து செல்லல். தொல்லைப்பட்டு நெடுந்தொலைவு செல்லல் என்பது குறிப்பு. இன்துணையான சேவலின் காற்சிவப்பு, பேடை பக்கத்து வயலை விடுத்துக் கடலோட வேண்டும் என்றாலும் அதனைச் செய்யலாம்படியான அழகுடன் விளங்கியது. பெ.தி.9.6.3.

கண்ணில் மணல் தூவினபடி - கண்ணிலே மணலைத் தூவுதல்; ஏமாற்றியபடி. பெருமான் எப்போதும் தன்னைப் பார்த்துக் கொண்டே இருக்கும் விண்ணோர் கண்ணில் மணல் தூவிக் கண்ணனாய் வந்து பிறந்து வெண்ணெய் திருடி உண்டான். தி.வி. 21; 5.3.5-36.

கண்ணிலே வெண்ணெயிட்டுக்கொண்டு நோக்குதல் - விழிப்போடு நன்கு நோக்குதல். இறைவன் மூவுலகினையும் படைத்துத் தாயைப் போலக் கண்ணிலே வெண்ணெயிட்டுக் கொண்டு நோக்குகிறான். 7.6.1-36.

கதிர்பொறுக்குதல்* - தேடிச் சேகரித்தல். ஏழைகள் அறுவடைக்குப் பின் வயலில் சிந்திக் கிடக்கும் கதிர்களைப் பொறுக்கிச் சேர்ப்பர். அதுபோலத் தேடிச் சேகரித்தல். கதிர் பொருக்க - பெ.தி.8.1.6, கதிர் பெறுக்கி. பெரி.தி.4.8.9, பாவை, 24-6 ஆகியன கதிர்பொறுக்கி என்பதன் சிதைவு. பெருமான், தானே விழைந்து காட்டக் கண்ட அனுபவத்திற்குப் பிரமன் முதலியோர் கதிர்பொறுக்கிக் கண்ட அனுபவம் ஈடாகாது. நான். தி.82.

கதே ஜலே ஸேது பந்தமாதல் - சென்ற வெள்ளத்திற்கு அணை கட்டுதல். அதுபோலக் கடந்த நிகழ்ச்சி குறித்து வருந்துதல். பின்னர் கதே ஜலே ஸேது பந்தமாகாமே, நான் வாழும் போதே அவன் இருக்கும் திருப்பேரெயிற்கு என்னை அழைத்துச் செல்லுங்கள் என்கிறாள் தலைமகள். 7.3.5-36.

கப்படங் கட்டிக்கொண்டு செல்லல் - அழுக்குத் துணி கட்டிச் செல்லல்; அதாவது இரத்தல். தேவர்கள் திருமாலிடம்

கப்படங் கட்டிக்கொண்டு சென்று தம்குறைகளைச் சொல்ல அவன் கண்ணனாய் வந்து அவதரித்தான். 6.4.5-36.

கருமாரி பாய்தல் - காஞ்சி மாநகரத்தின் நடுவே குளத்திலே நட்டிருக்கும் இரண்டு வயிரக்குச்சு நடுவே உயரே இருந்து குதிக்கை, அரிய செயல் செய்தல். நப்பின்னைப் பிராட்டியின் அழகினையும் இனிமையினையும் நோக்கும்போது கருமாரி பாய்ந்தாலும் தகும் என்னும் எண்ணம் தோன்றும். 5.10.2-36.

கரைப் புரட்சி - மிகுதி. பெரியாழ்வாருக்கு மன அனுபவத்தினுடைய கரைப் புரட்சியாலே இராம கிருட்டின அவதாரங்களை நன்றாகக் கண்டதாகவே தோற்றுகிறது. பெரி.தி. 4.1.0.

கரைமரம் சேர்தல் - மரக்கலத்தைக் கரை சேர்த்தல். உய்வித்தல் என்பது குறிப்பு. பெருமான் மனிதனைக் கரைமரஞ் சேர்த்தற்காகத் தன் அருளினால் உடல் முதலான உறுப்புகளை அவனுக்குத் தருகின்றான். க.நு.சி. 0, அழகு.

கழுத்துக்கட்டியாதல் - தடையாதல். பெருமானைத் தவிர ஏனைய தெய்வங்கள் கழுத்துக்கட்டிகளாதலால் அவனே பற்றத் தகுந்தவன். நான்.தி.8.

கறுப்புடுத்துப் புறப்படல் - மாறுவேடமிட்டு மறைவாகச்செல்லல். அக்காலத்தில் அரசர்கள் தங்கள் காதலியரைச் சந்திக்கக் கறுப்புடுத்துச் சென்றனர். தி.நெ.தா.23.

காட்டிலெறி(றி)த்த நிலாவாய்ப் போதல் - வீணாதல். திருத்தாயார் தலைவியின் கண்ணநீர் காட்டில் எரி(றி)த்த நிலா வாய்ப் போக நீ வெறுர்கலாகாது என்று பெருமானிடம் கூறுகிறாள். 2.4.10-24.

காணவந்த சோழர் - இதற்கு அரசுரிமை காரணமாகத் தம் நாட்டில் எங்காவது நடக்கும் வைஷ்ணவர்களின் வழிபாட்டுக் கோஷ்டியைக் காண வந்த சோழர் என்று பொருள் காண்பார் வில்லிவலம் நாராயணாசார்ய ஸ்வாமி. (ஸுதர்சனர் பதில், முதல் சதகம், 53 ஆம் வினாவின் விடை) நாடகத்தில் காதல் விளையாட்டுக்களைக் காண வந்த சோழ அரசன் என்று பொருள் காண்பர் புத்தூர் எஸ். கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார். இத்தொடர் தி.வி.6,

பெ.தி.3.1.9, பெரி.தி.4.9.10, க.நு.சி.11, நஞ்சீயர் உரைகளிலும் வந்துள்ளது. ஸர்வேச்வரன் காண வந்த சோழரைப் போலே இருக்க எதிரிகளை முடிக்கும் ஆற்றல் உடையது கருடன் - திருவிருத்த உரை. பாரதப் போரானது காண வந்த சோழர்க்கும் தங்களை நோக்குகைக்குக் கையிலே ஓர் ஆயுதம் பிடித்துக்கொண்டு நிற்க வேண்டும்படி அச்சத்தைத் தோற்றுவிப்பதாக இருந்தது - பெரிய திருமொழி உரை. அசுர அரக்கர்களோடு பெருமான் போரிடும் இடத்தில் அந்தப் போரைப் பெரிய திருவடி தானே நடத்தப் பெருமான் காண வந்த சோழரைப் போல அதனைக் கண்டுகொண்டு அவன் தோளிலே இருப்பான் - பெரியாழ்வார் திருமொழி மணவாள மாமுனிகள் உரை. இவற்றின் அடிக்குறிப்புகளில் போரைக் காணவந்த சோழர் என்னும் விளக்கம் காணப்படுகிறது.

கண்ணி நுண் சிறுத்தாம்பு உரையில் நஞ்சீயர், மதுரகவிகள் காண வந்த சோழரைப் போல இருக்க அவருடைய அன்பே பாசுரங்களை அருளிச் செய்தது என்கிறார். இதில் போர்க்களமோ நாடகமோ இடம் பெறவில்லை.

இவ்விளக்கங்கள் அனைத்தையும் ஒப்பு நோக்கும்போது காண வந்த சோழர் என்பதற்குப் போர்க்களத்தையோ நாடகத்தையோ காண வந்த என்று பொருள்கொள்வதைக் காட்டிலும் மரியாதை நிமித்தம் காண்பதற்கு விருந்தினராக வந்த என்று பொருள்கொள்வது சிறப்பு. "உங்களைக் காண வந்தேன்" என்று பேச்சு வழக்கிலும் வருவது கருதற்குரியது. காண்பதற்கு வந்தவர் நிகழ்ச்சியில் பங்கு பெறாமல் வறிதே ஒதுங்கி நிற்றல் போல நிற்பது என்பது பொருளாகும்.

காதக்குதிரை கட்டி வருதல் - ஓடிவருதல். பெருமான் பெரியாழ்வார் நெஞ்சத்தில் தங்குவதற்குத் திருப்பாற்கடலைவிட்டுக் காதக்குதிரை கட்டி வந்தான். பெரி.தி. 5.4.9.

கார்த்திகைக்கு ஒரு பொய் சொல்லல் - எப்போதோ ஒருமுறை பொய்கூறல். நாட்டார் கார்த்திகைக்கு ஒரு பொய் சொல்ல வேண்டினால் அவர்களும் தன்பக்கல் வந்து கேட்டுப்போம்படி பொய்யெல்லாம் பொதிந்துகொண்ட போழ்க்கனாகத் தாம் இருந்ததாகக் கூறுகிறார் தொண்டரடிப்பொடியாழ்வார். தி.மா.33.

காலன்கொண்டு மோதிரமிடுமாபோலே - கால புருஷ தானம் வாங்கி அந்தத் தங்கத்தைக்கொண்டு மோதிரமிடுவது. இயல்புக்கு மாறாக வருவது என்பது குறிப்பு. திருமங்கை மன்னன் காலன்கொண்டு மோதிரமிடுமா போலன்றிக்கே தம் தன்மைக்குத் தகுந்த பேற்றினை இறைவன் தரவேண்டு மென்று விண்ணப்பிக்கிறார். பெ.தி.5.8.6.

கிடந்தானைக் கண்டேறுமாபோலே - (கிடந்த ஆனை கண்டு ஏறுமாபோலே) சூர்ப்பணகை போலே கிடந்தானை கண்டேறாமல், முறையோடு நம்மாழ்வாரைப் பற்றி அவர் விரும்பிய காரணத்தால் பெருமானை விரும்புகிறார் மதுர கவிகள். க.நு.சி.3, நம்பிள்ளை.

கிழங்கெடுத்தல்* - அடியோடு அழித்தல். இராவணவனைக் கிழங் கெடுத்த சிறப்பு இராமனைச் சாரும். பெ.தி.6.3.5.

கிழிக்குறை - நிறைந்திராமல் குறைந்திருக்கிற பணப்பை; இங்கு நிறைவின்மையைக் குறிக்கும். இராமனுக்குப் பரதனோடும் சத்துருக்கனனோடும் கூடப் பெறாத கிழிக்குறையாலே, கூட நிற்கிற இளையபெருமாளோடும் கூடியிருப்பதாய்த் தோற்ற வில்லை. 2.4.0-36.

கீழ்வயிற்றுக் கழலை அறுக்க வருதல் -'கீழ்வயிற்றில் எழுந்த கட்டியைப் போன்று துன்புறுத்த வருதல். பரத்துவாச முனிவர், கைகேயியின் மகனான தான் கீழ்வயிற்றுக் கழலை அறுக்க வந்துள்ளதாக நினைக்கிறார் என்று பரதன் எண்ணி னான். 1.1.3-36.

கீழ்விழியாலே பார்த்தல் - ஆசை தோன்றப் பார்த்துப் போதல். பெருமாள் காட்டிற்குப் புறப்பட்டபோது நாட்டின்மீது விருப்பத்தால் கீழ்விழியாலே பார்த்துப் போனார் என்று கூறுவது தவறுடைத்தாகும். தி.வி.51.

கீழோலையிடல் - மறைவாக ஒத்துழைத்தல். பரதன், கைகேயி பண்ணின குற்றத்திற்கு நாமும் கீழோலையிட்டோம் என்று நாட்டார் நினைத்திருப்பதொன்றுண்டு. அக்குற்றம் நம்பால் இல்லை என்று அறிவிக்க வேண்டும் என்று விழைந்தான். 6.7.3-36.

குசை தாங்குதல் - வேகத்தில் செல்லும் குதிரையைக் கடிவாளத்தை இழுத்துப் பிடித்து நிறுத்துவது போல

நிறுத்தல். திரிவிக்கிரமன் தனது திருவடிகளைப் பூமியை அளக்கப் பயன்படுத்திக் குசை தாங்கின அருமையினைத் திருமங்கை மன்னன் கொண்டாடுகிறார். தி.நெ.தா.21. பெருமான் தன் பாத பங்கயத்தை நிமிர்த்தது போல அதனைப் பூமியளவிலே குசை தாங்கினபடியும் வியப்புக் குரியது. 9.2.2-24.

குடநீர் வழிந்து போகை - நீங்குதல், வழிதல். உலூபி என்பவள் தன்னுடைய இயற்கைப் பண்புகளான நாற்குணங்களும் குடநீர் வழிந்து போக, அருச்சுனனை மணந்து தனது நகரம் அடைந்து இன்பமாக வாழ்ந்தாள். பெ.மடல்.கண்ணி, 57.

குடநீர் வார்க்கும்படி - தொண்டு செய்யும்படி. நப்பின்னைப் பிராட்டி புருவம் நெறித்த இடத்திலே குடநீர் வார்க்கும்படி அவள் நினைவே தன் நினைவாக இருப்பவன் கண்ணன். பாவை, 19-6.

குதறியிருத்தல் - கலங்கிச் சிவந்திருத்தல். பெருமான் கண்கள் செல்வத்தாலும் குதறி இருந்தன. பாவை, 1-3.

குமர் இருந்து போதல் - பயனின்றிக் கழிதல். பெருமான் தலைமகளின் வடிவழகிலே துவக்குண்டு அவள் உயிர்க்குணத் தளவும் செல்லமாட்டாதவன் ஆயினான். அதனால் அவளுடைய உயிர்க்குணங்கள் குமர் இருந்து போயின. 2.8.1-36.

குமர் கிடந்து போதல் - குமரியாய் மூத்து அனுபவிக்கத் தகுதியில்லாதே கழிதல். தலைமகளின் கண்ணில் பெருமானும் அவனுடைய உடைமைகளும் ஒரு மூலையிலே அடங்கிக் கிடக்க, அவள் கண்ணின் ஏனைய பரப்பும் பருவமும் குமர் கிடந்து போயின. 6.7.10-36.

குமிழி நீர் உண்ணல் - அமிழ்ந்து போதல். தலைமகளின் பேச்சு, அவனுடைய ஆபரண அழகிற் போன்று திருப்புலியூர்ச் சோலையிலும் அவ்வூரிலும் குமிழி நீர் உண்டாளாய் இருத்தலைக் காட்டியது. 8.9.2-36.

குராலாயம் ஏறி ஓடி இருத்தல் - மங்கலான நிறமாக இருத்தல். பிரம உருத்திரர்கள் மயிர்போலே குராலாயம் ஏறி ஓடி இருக்கையன்றிக்கே பெருமான் திருக்குழல் கண்டவர்

கண்களிலே அஞ்சனம் எழுதினாற்போலே இருக்கிறது. தி.நெ.தா. 21, பட்டர்.

குருகுலவாஸம் பண்ணல் - கற்றல். திருமால் தன் எளிமைப் பண்பினைத் திருமகளிடம் குருகுல வாஸம் பண்ணிப் பெற்றான். பாவை, 9-3.

குளப்படியாய் இருத்தல் - சிறிதாய் இருத்தல். பெருமானின் அன்புக்கு முன்னே தங்கள் அன்பு குளப்படியாய் இருத்தலை இடைப்பெண்கள் உணர்ந்தனர். பாவை, 26-6.

குறங்கு குத்த உறங்குதல் - சிறு குழந்தைகளின் தொடையில் தட்ட அவை சுகமாக உறங்கத் தொடங்குகின்றன. அது போலச் சுகமாக அமைய என்பது குறிப்பு. பாவைப் பெண்கள் உறங்கும் ஒருத்தியை நோக்கி, "எங்கள் பாட்டுக் குறங்கு குத்த உறங்குகிறாயோ?" என்று வினவுகின்றனர். பாவை, 7-3.

குறைக்கொள்ளி - எரிந்த கட்டை. இடைப்பெண்கள் விரகந்தின்ற குறைக்கொள்ளியான தங்கள் உடலைக் கண்டு கண்ணன் புண்படும்படி அவனிருந்த இடம் சென்று காட்டுவோம் என்றனர். பாவை, 8-3.

குனியக் குறுணி பற்றுங் காலம்* - எளிதில் பெரும்பயன் கிட்டும் காலம். தலைமகள், "பெருமான் அவதரித்து எல்லோர்க்கும் எளியனாய்க் குடக் கூத்தாடின காலம் குனியக் குறுணி பற்றுங் காலம்; அக்காலத்தில் அவனை நாடாது வாளா இருந்தேனே" என்று வருந்துகிறாள். சி.மடல், கண்ணி, 57.

கூட்டுப்படையாகக் கொள்ளல் - துணையாகக் கொள்ளல். பெருமான், திருத்துழாயைத் தனக்குக் கூட்டுப்படையாகக் கொண்டு தன்னை நலிவிக்கிறான் என்று தலைவி கவல்கின்றாள். தி.வி. 51.

கூட்டெழுத்து - சேர்த்து எழுதப்பட்ட எழுத்து. அதனைப் படிப்பது அரிது. அதுபோல எளிதில் உணர முடியாதது என்பது குறிப்பு. இடைப்பெண்களை நோக்கிக் கண்ணன் "நீங்கள் என்பால் அன்புடையவர்கள் என்கிறீர்கள். யான் அறிவேனோ அக் கூட்டெழுத்தை?" என்கிறான். நா.தி.1.7.

கூடு கட்டல் - உள்ளே அடைத்து வைத்தல். அருச்சுனன் கண்ணனிடம் கட்டுக் கடங்காக் காற்றைப் பிடித்துக் கூடுகட்டி

னாலும் தன் நெஞ்சைப் பிடித்துத் தடுத்து நிறுத்த முடியாது என்றான். பெ.தி. 1.1.4.

கைக்குறியாப்பை வாங்குதல் - அகப்பையாலே கடன் வாங்குதல்; ஒரு பொருளைக் கடன் வாங்குகிறவர்கள், "கைக்குறியாக (கையளவாக)த் தாருங்கள்; அகப்பைக் குறியாய்த் தாருங்கள்" என்பர்; இங்குக் கடன்வாங்குதல் என்பது பொருள். இறைவன் அருள் என்னும் குணத்தினைக் கைக்குறியாப்பை வாங்குவது திருச்சக்கரத்தினிடமிருந்தே யாகும். 1.4.6-36.

கைப்பறி பறிக்கை - மரத்திலுள்ள பழம் முதலியவற்றைத் துறட்டியின் துணையின்றிக் கையாலே முடிந்த அளவு எட்டிப் பறித்தல்; தானே முயன்று அறிதல் என்பது குறிப்பு. பந்தோடு என்னும் பெரிய திருமொழியைக் கைப்பறி பறிக்கையன்றிக்கே ஆசாரியர்களிடம் கற்றவர்கள் திருநாட்டில் இன்பம் நுகர்வர். பெ. தி.5.5.10.

கையோலை செய்து கொடுத்தல் - அறுதியிட்டுக் கொடுத்தல். பேற்றினை அறுதியிடுகிற சமயத்தில் திருமுகத்தைப் பார்க்கில் உறுதி குலையும் என்று நம்மாழ்வார் கவிழ்ந்திருந்து கையோலை செய்து கொடுக்கிறார். 2.9.4-36.

கைவழி மண் - குயவன் கையில் உள்ள மண் அவன் விருப்பப்படி குடமாகவும் சட்டியாகவும் மாறுதல் போலத் தலைவன் விருப்பப்படி நடத்தல். அரக்கர்கள், இராவணனுக்குக் கைவழிமண்ணான அடியவர்களாய் அவன் சொன்னதைச் செய்துவந்தார்கள். க.நு.சி.4, அழகு.

கொண்டைக்கோல் நாட்டுதல் - மடுக்களில் பள்ளங்களுக்கு அடையாளமாகக் கொண்டைக்கோல் நாட்டுதல் வழக்கம்; இங்கு அடையாள மிடுதல் என்பது பொருள். திருமங்கை மன்னன் தம் பாட்டில் வாமனனுடைய வெற்றியில் தமக்குண்டான மிகுந்த விருப்பத்தால் அளக்கும் இடத்திற்குக் கொண்டைக்கோல் நாட்டுகிறார். தி.நெ.தா.5.

கொண்டை மேலே காற்றடிக்கத் திரியப்பெறுதல் - சுகமாக இருத்தல். இறைவனைப் பற்றியவர் உலகில் எக்கவலையுமின்றிக் கொண்டை மேலே காற்றடிக்கத் திரிவர். தி.வி.23.

கொம்பது பருத்தியாக அங்காடி பாரித்தல் - செடியிலே பருத்தி இருக்கும்போதே புடைவையானதாகக் கருதி விற்கக்

கடைபரப்ப நினைத்தல். ஒன்றைக் குறித்து அதிகமாகக் கருதுதல் என்பது குறிப்பு. பெருமான் கொம்பது பருத்தியாக அங்காடி பாரித்துத் தீவினையாராகிய தம் நெஞ்சில் பரமபதத்தைக் காற்கடை கொண்டுவந்து தங்கினான் என்கிறார் நம்மாழ்வார். 9.7.5-36.

கொள்கொம்பு மூடுதல் - இதற்கு, "கொள்கொம்பானது நட்டுக் கொண்டிருக்குமாபோலே, வணங்காதிருக்கையாய் 'நநமேயம்' என்றிருக்கையைச் சொல்லுகிறது" என்பது அப்பு அரும்பதம். இது சரியன்று. கொள்கொம்பு - சுள்ளிக்கால்; பற்றுக்கொம்பு. மூடுதல் - சூழ்ந்து மறைத்து நிற்றல். கொடியைச் சுற்றி அது படர்தற்கு ஊன்றப்படும் கொம்பு மறையுமாறு கொடி தழைத்து மறைத்தல் என்பதே பொருள். "மிகும் தேவும் - தன்னோடே விகல்பிக்கலாம்படி கொள்கொம்பு மூடப் படர்ந்த தேவ ஜாதியையும்" (2.2.5-24)மிகுதல் என்று பொருள் காட்டுவது காண்க. இலங்கை, அரண்கள் மிகுந்து கொள்கொம்பு மூடிக் கிடந்ததால் அதனை அருகே தங்கி வெற்றிகொள்ளக் கருதித் திருப்பிரிதியை இடமாகக் கொண்டான். பெ.தி.1.2.2.

கோல் விழுக்காட்டாலே - தற்செயலாக. பெருமான் பிராட்டி முகத்தைப் பார்த்துப் புன்முறுவல் செய்ய அது கோல் விழுக்காட்டாலே இன்ப விளையாட்டாக முடிந்தது. 3.10.7-36.

கோற்கீழ்க் கன்றாய் நடக்கை - அடக்கமாய் நடக்கை. கண்ணன் நந்தகோபன்முன் கோற்கீழ்க் கன்றாய் நிற்பான். பாவை, 1-6.

சமிதை பாதி சாவித்திரி பாதியாக - (ஸமிதை பாதி ஸாவித்ரி பாதியாக என்பது உரையில் காணப்படும் வடிவம்). உபாகர்மாவின் பிற்றைநாள் பிரம்மசாரிகள் காயத்திரி மந்திரத்தை ஆயிரத்தெட்டுத் தடவை சொல்லி ஆயிரத்தெட்டுப் பலாசமரத்தின் சுள்ளிகளை நெருப்பில் ஓமம் செய்தல். (சமிதை - பலாசமரத்தின் சுள்ளிகள்; சாவித்திரி - காயத்திரி மந்திரம். 2.7.1-36. புருஷோத்தம நாயடு அடிக்குறிப்பு). அரை குறையாக என்பது குறிப்புப் பொருள். சமிதை பாதி சாவித்திரி பாதியன்றிக்கே நாராயணனுடைய அருளாலே தம்மைச் சேர்ந்தார் கீழும் மேலும் உள்ள ஏழ்ஏழ்

பிறப்புகளிலும் இறைவனுக்குத் தமரானார் என்று நம்மாழ்வார் கூறுகிறார். 2.7.1-36.

சரக்குக் கட்டிப் புறப்பட்டு நிற்றல் - தயாராக இருத்தல். பெருமான் ஆழ்வாருக்கு முன்னே சரக்குக் கட்டிப் புறப்பட்டு நின்று 'ஆழ்வீர் வாரீரோ வாரீரோ' என்று பதறாநின்றான். 10.6.3-36.

சிங்க விளக்கெரித்துக் கொல்லல் - தலையிலே சாணியை வைத்து விளக்கு ஏற்றுதல்; வாலிலே பந்தம் கட்டி எரித்தல். கொடுமையாகத் தண்டித்துக் கொல்லல் என்பது குறிப்பு. பிராட்டி இராவணனிடம் 'உன்னைச் சிங்க விளக்கெரித்துக் கொல்லாதே நற்கொலையாகக் கொல்லும்போதும் நீ இராமபிரானைப் பற்றவேண்டும் என்பதனை அறிவாய் என்றாள். 8.1.1-36.

சிறு விரலாதல் - முதலில் நிற்றல். திருமங்கை மன்னன் பாவிகளை எண்ணத் தொடங்கும்போது தாம் சிறு விரலானதாகக் கூறுகிறார். தி.கு.தா.14.

சினையாறுபடுதல் - பொசிதல். இறைவன் திருக்குழலில் ஒரு வாடல் மாலையைக் கொண்டு வந்து வைத்தாலும் அது செவ்வி பெற்று மது நிரம்பிச் சினையாறுபட்டு வார்ந்து வெள்ளமாய்ப் பெருகும். 1.6.2-36.

சுழியாறுபடுகை - 1. ஆறு சுழித்துச் செல்வதுபோல் சுழித்துச் செல்லுகை. பெருமான் அழகாலும் சீலத்தாலும் காஞ்சிபுரம் முழுவதும் நிரம்பிச் சுழியாறுபடும்படி திருவூரகத்திலே நின்றருளினான். தி.நெ.தா.8. 2. ஆழ்ந்து போதல். பூதத்தாழ்வார் கிருட்டினனாய் வந்த திருத்தோற்றத்தில் சுழியாறுபடுகிறார். இ.தி.29.

செங்கற் சீரை கட்டல் - துறவுக் கோலம் பூணல். தலைமகள் செங்கற் சீரை கட்டிக் கூப்பிட்டாகிலும் பெறவேண்டும்படி பெருமான் வடிவழகும் படுக்கையும் இருந்தன. தி.வி.62.

செங்கொடு குட்டைகள் - செவ்வையாகக் கொடுக்கிற நாழி என்பது நேர்ப்பொருள்; தாம் கொண்ட கொள்கை விடாதவர்கள். "சொரூப ஞானம் பிறந்து தரும்பு நறுக்கலாகாது என்றிருக்கும் செங்கொடுகுட்டைகளுக்கு என் நிலைமை சொல்வேனோ? யாருக்குச் சொல்வேன்?" என்கிறாள் தலைமகள். 9.9.6-36.

செடி சீய்த்தல் - வழியில் தடையாக உள்ள செடிகளை அழித்தல். தடைகளைப் போக்கி, இடையூறுகளைப் போக்கி என்பது குறிப்பு. பெருமான், உலக மக்களில் தாழ்ந்தவனான தம்மோடு கலப்பதற்குச் செடிசீய்த்து வந்து தம்மைத் தனக்காக்கிக் கொண்டான் என்கிறார் நம்மாழ்வார். 2.3.1-24.

செப்பேடாக வருதல் - அடையாளமாக, சான்றாக வருதல். பெருமான், ஆபத்தே செப்பேடாக அடியார்பால் வந்து உதவும் இயல்பினன். 2.4.1-36.

செருப்புக் குத்தக் கற்றவோபாதி - பயனற்றது. இறைவனை யொழியக் கற்ற பிறவெல்லாம் செருப்புக் குத்தக் கற்ற வோபாதி ஆகும். 1.1.0-36.

செருப்பு வைத்துத் திருவடி தொழப்புகுதல் - மனத்தை ஓரிடத்தில் வைத்து வேறோர் இடத்தில் வேறொரு வேலை செய்தல். ஆழ்வாரை அனுபவிக்கும்போது, செருப்பு வைத்துத் திருவடி தொழப் புக்காற் போலே ஆக வொண்ணாதென்று உலகத்தைப் பாதுகாத்தற்கு வேண்டும் செயலனைத்தும் செய்து முடித்து வேறொன்றில் கருத்தில்லாதவனாய் அனுபவித்துப் போகமாட்டாதே இருந்தானாம். 2.6.2-36.

செல்வப்பிள்ளைத்தனம் அடித்தல் - செருக்கடித்தல். தலைமகள் பூவையை நோக்கி, ''நான் என் துன்பநிலையைப் பெருமானிடம் சென்று சொல் என்ற போதெல்லாம் நீ செல்வப்பிள்ளைத்தனம் அடித்துக்கொண்டிருந்தாய்; இன்று நான் தளர்ந்தேன். இனி உன்னை வளர்ப்பாரை நாடிச்செல்'' என்கிறாள். 1.4.8-9.

செவிப்பறை பறைதல் - (ரகசியமாக) மறைவாகச் சொல்லல். வேத முதல்வனைப் பாடி வீதிகள்தோறும் துள்ளாதார் முற்றறிவினர் முன்னிலையில் எதனைச் செவிப்பறை பறைந்து நிற்பர்? அவர்கள் மனிதர்கள் ஆவரோ? என்கிறார் நம்மாழ்வார். 3.5.5-36.

சோலை பார்ப்பாரைப் போலே பார்த்தல் - ஒவ்வொன்றாகக் கூர்ந்து பார்க்காமல் பொதுவாகப் பார்த்தல். பொதுப் பார்வை. நாச்சியார், தம்மைப் பெருமான் சோலை பார்ப்பாரைப் போலே பார்க்கையல்லாமல் சிறப்பாக

நோக்கும்வண்ணம் செய்யுமாறு செய்திடக் காமனை வேண்டுகிறார். நா.தி.1.6.

'தண்ணீர்' என்னும்படி - கொடுமையற்றவன் என்னும்படி. பெருமான், அசுரர்களுக்கு 'அந்தகன் தண்ணீர்' என்னும்படி கொடிய கூற்றுவனாக விளங்குகிறான். 6.3.8-24, 36.

'தண்ணீர் தண்ணீர்' என்னும்படி இருத்தல் - நீரின் இனிமையாலே மேலும் மேலும் தண்ணீர் வேண்டுவாரைப் போலே மிகுந்த விருப்பத்தோடு இருத்தல். பெருமான் மார்பு, அங்கேயே உறையும் திருமகளையும் 'தண்ணீர் தண்ணீர்' என்னும்படி செய்யுமளவுக்கு விரும்பத்தக்கதாய் உள்ளது. பெ.மடல், கண்ணி, 91.

தண்ணீர்த் துரும்பான* - தண்ணீரில் கிடக்கும் துரும்பு அதனைப் பருகத் தடையாய் இருக்கிறது. அதுபோல ஒன்றற்குத் தடையாய் அமைந்திருத்தலைத் தண்ணீர்த் துரும்பு என்பது குறிக்கும். சில இடங்களில் துரும்பு என்பதற்குப் பதில் துறும்பு என்பது காணப்படுகிறது. மதுரகவிகள்மேல் தமது அருளைப் பொழியத் தண்ணீர்த் துரும்பாய் இருந்த அவருடைய பண்டை வல்வினைகளை நம்மாழ்வார் தம் பார்வையாலேயே பாறவடித்தார். க.நு.சி. 9, அழகு.

தண்ணீர்ப்பந்தல் வைத்தல்* - நெடுஞ்சாலையில் தண்ணீர்ப் பந்தல் பேருதவியாகக் கருதப்பட்டது. அதனையொட்டி இங்கு உதவுதல் என்னும் பொருளைக் குறிக்கிறது. நம்மாழ்வார் அருளிச்செய்த நூல்கள் உலகத்திற்குத் தண்ணீர்ப் பந்தலாயின. 6.9.0-36.

தண்ணீர் வார்த்தல் - போற்றுதல். ஊடிநின்ற பெண்களைத் தன் அழகாலே வெல்லமுடியுமா என்று எண்ணிப் பார்த்த பெருமான் அங்கு அழகுக்குத் தண்ணீர் வார்ப்பாரில்லை என்று உணர்ந்தான். 6.2.0-36.

தலைக்கட்டுகை* - நிறைவு செய்கை; செய்து முடித்தல். பெருமானைக் குறித்து மறைகள் சொன்னதைத் திருப்பிச் சொல்வது தவிரத் தம்மால் ஒன்றும் பேசித் தலைக்கட்டவொண்ணாது என்கிறார் தொண்டரடிப்பொடியாழ்வார். தி மா. 22.

தலைச்சாவி வெட்டல் - பயிர்கள் மதர்த்தால் தலைப்பகுதியைக் கழித்துவிடுவர். அதனையொட்டிக் குறைத்தல் என்னும் பொருளில் பயன்படுத்தப்படுகிறது. பெருமான் குடக் கூத்தாடி இடையர்க்குண்டான செருக்குக்குத் தலைச் சாவி வெட்டினான். தி.வி. 38.

தலைநீர்ப்பாட்டிலே அநுபவித்தல் - ஆற்றின் முதல் மடை தலைநீர்ப்பாடு ஆகும். பெரிய பிராட்டியார், பூமிப் பிராட்டியார் தொடக்கமானோர் பெருமானது திருமேனி யழகு வெள்ளத்தைத் தலைநீர்ப்பாட்டிலே அனுபவிக் கிறார்கள். தி.நெ.தா. 18.

தளர்ந்தார் தாவளம்* - தாவளம் என்பது தங்குமிடம். தளர்ந் தார்க்குத் தஞ்சமாக இருப்பது என்பது பொருள். பெருமான் பார்இடந்த செயல் அவன் தளர்ந்தார் தாவளம் என்பது காட்டுகின்றது. பெ.திருவந். 7.

திறை கொள்ளல் - கப்பம் கொள்ளல். பேரரசன் சிற்றரசனிடம் அவன் தனக்குக் கீழ்ப்பட்டிருத்தலைப் புலப்படுத்தக் கப்பம் வாங்குவான். அடிமைகொள்ளல் என்பது பொருள். பெருமானின் நெஞ்சைப் பிராட்டி தன் வடிவழகாலும் பண்பாலும் திறைகொள்ளுகிறாள். பெரி.தி. 2.3.3.

தீர்த்தம் ப்ரஸாதித்தல் - ஒரு காலத்தில் இருந்து பின் இல்லாது போதல். பெருமான் அவதாரங்கள் போலே தீர்த்தம் ப்ரஸாதியாதே நிலையாகத் தங்கியுள்ள இடம் திருமாலிருஞ் சோலைமலை. 2.10.1-36.

துடை குத்தல் - தொடையைத் தட்டுதல், அஃதாவது இதமாகப் பிடித்துவிடுதல். அரசகுமாரர்கள் துடைகுத்தவிட்டு உறங்கு வார்கள். பெ.தி. 1.2.3.

துருப்புக் கூடாக - தூற்றாப்பொலி; இனியார் இன்னார் என்று பகுத்துக் காணாத; கலந்த கட்டியாக. தலைமகள் துருப்புக்கூடாகத் தொலைவில்லி மங்கலத்தை உகந்து நின்றாள். 6.5.1-36. திருப்பாணாழ்வார் தமது நூலை மகாபாரதம் போலே பரந்து துறுப்புக் கூடாயிருத்தல் செய்யாதே பத்துப்பாட்டாய்ச் சுருக்கமாக அருளிச் செய்துள்ளார். அம.0.

தென்றலும் சிறுதுளியும் பட்டாற் போலே - சுகமாக தென்றலும் சாரலும் இன்பம் தருவன. அப்படி இன்பமாக என்பது பொருள். சிவபிரான் திருமால் திருநாமங்களை உமை சொல்ல அவற்றைத் தென்றலும் சிறுதுளியும் பட்டாற் போலே கேட்டுக் கொண்டிருந்தான். சி.மடல், கண்ணி, 21.

தொடை தட்டல் - கேட்குமாறு வற்புறுத்தல். இடைப்பெண்கள் எங்கள் பேற்றினை அழித்தோ நீ உன் பேற்றினைப் பெறப் பார்ப்பது என்று அடியை விட்டுத் தொடையைத் தட்டுகிறார்கள். பாவை, 29-6.

தோள்தீண்டியான * - இணையான, நிகரான, நெருக்கமாக, காலம் கலிக்குத் தோள்தீண்டியான துவாபரயுகம். பாவை, 16-3. இறப்புத் தோள்தீண்டியாக வந்து நிற்குங் காலத்தில் மனிதர்கள் எதனையும் செய்யும் ஆற்றலற்றவர் களாகிறார்கள். தி.மா. 6.

தோள்படி கொள்ளல் - ஒருவர் தோளைப் படியாகக் கொண்டு மேலே செல்லல்; மேலே செல்லல் என்பது பொருள். நம்மாழ்வார், 'உயர்வற உயர்நலம் உடையவன்' என்று கூறி, அதற்கு மேலாக ஓர் உதவியைச் சொல்ல நினைத்துக் கீழ்நின்ற நிலையை அமைத்து மேலே தோள்படி கொள்கிறார். 1.1.1-36.

தோள் மாறல் - மாறிக்கொள்ளல். பிறப்புத் தொடரிலே (ஜந்ம பரம்பரைகளிலே) தோள்மாறி என்றும் மண்ணுலக வாழ்வின ராய்ப் போந்த ஆழ்வாரை ஈறில் இன்பத்தில் மூழ்குமாறு இறைவன் அருள்நோக்கம் புரிந்தான். 1.1.0-36.

நடுவில் பெருங்குடி - நடுவே அதிகாரத்தோடு இருத்தல். பிறர்க்கு ஈயாது பொருள் திரட்டியவன் உயிரோடு போராடிக் கொண்டிருக்கும்போது அவன் மனைவியர் "இவனும் இதொரு நடுவிற் பெருங்குடியுமென்? இவன் இறந்து செல்வம்அனைத்தையும் நாமே பயன்படுத்தும்படி நடக்காதா?" என்று எண்ணுவர். 8.8.8-36.

நமஸ்காரம் - வணங்கி விடைகொடுத்தல். திருமகள் சந்தி செய்விப்பவளாகும்போது அவளது இன்பநுகர்ச்சி நீங்குவ தில்லை. அப்போது இன்பநுகர்ச்சிக்கு நமஸ்காரம் இட்டா ளல்லள். பெரி.தி. 4.9.2.

நரிப்பூணூலிடல் - நரிப்பூணூல் இட்டுக்கொள்ளல்; ஏமாற்ற முயலுதல். பெருமான் திரிவிக்கிரமனாக வளருகைக்குக் குறளனாய் நரிப்பூணூலிட்டு வந்தான். பாவை, 3-6.

நாய்க்கிட என்றிருத்தல் - புறக்கணித்திருத்தல். தலைமகள், வழிபடும் நிலையில் அமைந்த இறைவடிவத்தில் பிறக்கும் துய்ப்பொழிய மற்றப் பிறப்புகளால் (அவதாரங்களால்) பிறக்கும் நுகர்ச்சியை நாய்க்கிடுங்கள் என்றிருக்கிறாள். பெ.தி. 8.2.6.

நாயகக் கல்லான - பெருமை சேர்க்கும் முதன்மையான. உலகிற்குத் திருவில்லிபுத்தூர் நாயகக் கல்லாக இலங்குகிறது. பாவை, 30-6.

நாலு பத்தோலை மறுத்தல் - சில கட்டளைகளை மறுத்தல். கூற்றுவன் தான் இடும் நாலு பத்தோலை மறுத்தற்குரிய தானாலும் வைணவர்களிடம் எளிய கோலத்தராய் வணங்கிச் செல்லவேண்டுமென்பதனை மட்டும் மீறக்கூடாது என்று தன் பணியாளர்களிடம் தெரிவிக்கிறான். நான். தி. 68.

நாலு பயணம் உள்ளே எடுத்துவிடுதல் - சில நாள் பயணம் மேற்கொள்ளல். இராமபிரான் கடலின்மேல் அணைகட்டி நாலு பயணம் எடுத்துவிட்டால் சீதையை அடையலாம். ஆனால் போன காலத்தை மீட்க முடியாதே என்று வருந்தினான். பெ.தி. 9.3.4.

நித்யாக்நிஹோத்ரமாகாமல் - ஒவ்வொரு நாளும் தீவேள்வி நடைபெற்றாலும் நாள்முழுவதும் நடைபெறுவதில்லை. சிறிது பொழுதே நடைபெறும். ஆகவே தொடர்ந்து ஒவ்வொரு நாளும் செய்தாலும் இடைவெளி நேரிடுகிறது. அதுபோல இடைவெளியில்லாமல் என்பது பொருள். நாம், நித்யாக்நிஹோத்ரமாகாமல் ஓவாது இறைவனுக்குப் பல்லாண்டு பாடித் தொழவேண்டும். திருவா. 4.

நிலத்தைக் கீறியிருத்தல் - வருந்திக் கொண்டிருத்தல். பாண்டவர் ஐவரும் சூதில் திரௌபதியை இழந்து தங்கள் பொறையாலே நிலத்தைக் கீறியிருந்தார்கள். பெரி.தி.4.3.6.

நிழல்மரமாய் இருத்தல் - பாதுகாப்பவனாய் இருத்தல். இராமன் தண்டகாரணியத்தில் வாழ்ந்த இருடிகளுக்கு நிழல்மரமாய் இருந்தான். பெ.தி.11.5.1.

நிழலாம்படி - நன்மையாகும்படி. நம்மாழ்வார் தமக்குக் கிடைத்த பேறு உலகில் உறையும் மக்களுக்கும் நிழலாம்படி அமைந்தது என்கிறார். 5.1.1-24.

நிழலும் அடிதாறுமாயிருத்தல் - நிழலாகவும் தஞ்சமாகவும் இருத்தல். அடிதாறு என்பது திருவடியினைக் குறிக்கும். இங்கு அது தஞ்சமாக இருத்தலைக் குறிப்பால் புலப்படுத்துகின்றது. பெருமான் நம்மாழ்வாருக்கு நிழலும் அடிதாறுமான ஸ்ரீவைஷ்ணவர்களைக் காட்டிக் கொடுத்தான். 3.8.0-36.

நீச்சு நீராதல் - தரைகாண வொண்ணாமை. கண்ணபெருமானின் விசுவரூபம் அருச்சுனனுக்கு நீச்சு நீராய்ப் போயிற்று. 3.10-1-36.

நீராட்டிக் கொடுத்தல் - தாரை வார்த்துக் கொடுத்தல்; மண முடித்தல் என்பது பொருள். இடையர்கள் கண்ணனைக் கண்டவுடன் நப்பின்னையைக் கடுக நீராட்டிக் கொடாதே நடுவே எருதுகளை நிறுத்தினார்கள். தி.வி.21.

நூறு குளிக்கு நிற்கும் - நெடுங்காலம் நிற்கும். பெண்கள், கண்ணன் தங்களை ஒருமுறை அணைத்துவிட்டால் அது நூறு குளிக்கு நிற்கும் என்கிறார்கள். பாவை, 10-6.

நெஞ்சு பறைகொட்டல் - உள்ளம் நடுங்குதல், நமன் தன் தூதுவர்களிடம் திருமாலைத் தவிரப் பிற தெய்வம் எதனையும் வணங்காதவர்களிடம் நடந்து கொள்ளும் முறையினை வெளியில் தெரிந்தால் என்ன ஆகுமோ என்று நெஞ்சு பறை கொட்டக் காதோடு காதாகக் கூறினான். நான்.தி.68.

நெடுங்கை நீட்டாக இருத்தல் - தொலைவில் விலகி இருத்தல். பெருமான் தம்மைப் பணி கொள்வதாகச் சொல்லி நெடுங்கை நீட்டாக இருக்காமல் நெஞ்சகத்தே வந்து நிலையாகத் தங்க வேண்டும் என்பது நம்மாழ்வார் வேட்கையாகும். 2.9.4-36.

நெல்லிலே வைத்துத் தெறிக்க வேண்டுவது - துன்புறுத்த வேண்டுவது; தண்டிக்க வேண்டுவது. 'நெல்வாலிலே

வைத்துத் தெறிக்க வேண்டுவது' என்பது இதன் பிறிதொரு வடிவம். மு.தி.79. ஆராய்ந்து பார்த்தால், இறைவனது உடைமையைத் தன்னதாகக் கருதி இறைவனுக்கு வழங்கிய மாவலியை நெல்லிலே வைத்துத் தெறிக்க வேண்டும் என்பது விளங்கும். பெ.தி.11.3.1.

'நெற்காய்க்கும் மரமேது' என்றிருப்பாரைப் போலே - முற்றிலும் அறியாதவர். புண்ணில் தோன்றும் கிருமிகள் 'நெற்காய்க்கும் மரமேது' என்றிருப்பாரைப் போலே அப்புண்ணைத் தவிரப் பிறிதொன்றனை அறியாதனவாய் வாழும். தி.வி.48.

பக்கக் குதிரை யேறிப் போதல் - இணையாகச் செல்லல். திருமால் திருமங்கையாழ்வார்க்குப் பக்கக் குதிரையேறிப் போக முடியுமோ? அவன் கையில் உள்ள சக்கரம் அழகுக்காக அமைந்திருக்க, அவர் கையில் உள்ள வேல் பகையை அழிப்ப தாலே கறைகழுவ நேரம் இன்றிக்கேயன்றோ இருக்கிறது. பெ.தி.3.6.10.

பட்டங்கட்டுகை - புகழ் சேர்க்கை. கண்ணன், நாட்டார் புகழ்ச்சி யாலே பெற்ற வயிற்றுக்குப் பட்டங் கட்டினான். பாவை, 5-3.

பட்டினி கொள்ளல் - வருத்துதல். தலைமகள் தோழியரை நோக்கிப் புன்முறுவல் பூக்காதே அவர்களைப் பட்டினி கொண்டாள். பெ.தி.2.7.2.

பட்டினி விட்ட கண் - காணாமல் ஏங்கின கண். நம்மாழ்வார், காணாமல் பட்டினி விட்ட தம் கண்கள் பட்டினி தீரும்படி கண்டு மகிழும்வண்ணம் வந்தருளுமாறு பெருமானை வேண்டுகிறார். 4.7.8-36.

பட்டைப் பொதிசோறு கட்டல் - முயற்சி செய்தல். கண்ணன் திருவிளையாடல்களைத் துய்த்த தமக்குத் திருநாட்டை அடைந்து அவ்இன்பத்தைத் துய்த்தற்குப் பட்டைப் பொதி சோறு கட்டவேண்டும்படி குறைவு ஏதுமில்லை என்கிறார் நம்மாழ்வார். 6.4.1-36.

பதின்கால் பட்டைப் பொதிசோறு அவிழ்த்தல் - பலபடி (பலமுறை) இளைப்பாறுதல். தொலைவில்லி மங்கலத்துப் பெருமான்மீது காதல்கொண்ட தலைமகள் ஒருகால் 'அரவிந்த லோசந'

என்னும்போது, நடுவே பதின்கால் பட்டைப் பொதிசோறு அவிழ்க்க வேண்டும்படியான தளர்ச்சியை அடைந்தாள். 6.5.3-36.

படுக்கையில் வார்த்தை - படுக்கையறையில் மனைவியை மகிழ்விப்பதற்காகச் சொல்லப்பட்டு நிறைவேற்றப்படாத பேச்சு. பாவை நோற்கும் பெண்டிர், பெருமானிடம் அவன் தரும் உறுதி மொழிகள் படுக்கையில் வார்த்தையாகப் போகாமல் மணி மண்டபத்தின் வார்த்தையாக வேண்டும் என்கின்றனர். பாவை, 23-3.

பத்து இருபது பட்டினி கொளல் - ஏங்கச் செய்தல். நாயகனைப் பத்து இருபது பட்டினி கொள்ள வல்லளன்றிக்கே பேதைப் பருவத்தினளாய்த் தன் பெண் இருப்பவள் என்கிறாள் திருத்தாயார். பெ.தி.8.2.9.

பத்துப்புக்கு(ப்)பத்து மீள வல்லராயிருக்கை - ஒரு நாளே பதின் காதவழி போய்ப் பதின்காதவழி மீளவல்லராய் இருக்கை. பாலைவனத்தில் இருக்கும் வேடர்கள் பிறரை நலித்தற் கென்றால் பத்துப் புக்கு(ப்)பத்து மீளவல்லராயிருப்பர். தி.வி.37.

பத்தொன்பதாம் பாஷை - புரியாதது. உறங்கும் பெண்ணை எழுப்பும் பெண்களில் ஒருத்தி தனக்கு அவளது பேருறக்கம் பத்தொன்பதாம் பாஷையாய் இருப்பதாகக் கூறுகிறாள். பாவை, 12-6.

பதர் கூட்டிக் கழித்தல் - சிறப்பற்ற பொருளைச் சிறப்புள்ள வற்றோடு சேர்த்துப் பின்னர்ப் பிரித்தல். பிற தேவர்களைத் திருமாலோடு சேர்த்துப் பேசித் திருமால் உயர்வைச் சொல்வது பதர் கூட்டிக் கழிப்பதாகும். 7.5.1-36.

பருத்தி பட்ட பன்னிரண்டும் படல்* - பருத்தியைக் கொட்டை வாங்கி, பன்னி, சுருட்டி, நூலாக்கியும், பாவோடி, நெய்து, மடித்து, விற்றுப் பொகடும்படியும், தோய்த்து, உலர்த்தி, உடுத்து, கிழித்து விடும்படியும், மனிதர்க்கு உரியதாக்குவர். பருத்தியைப் போலப் பல மாற்றங்கள் பெறுவது என்பது பொருள். பெருமான் தன் கையிலே பருத்திபட்ட பன்னிரண்டும் பட்ட பூமியை மாவலியிடம் இரந்தான். பெ.தி. 1.8.5.

பல்லிலே பட்டுத் தெறித்தல் - நெருக்கமாக வந்தும் கிட்டாது போதல் குறளனாய் வந்த பிறப்புச் சில காலத்திற்கு முன்னரே நிகழ்ந்தமையால் அது தன் பல்லிலே பட்டுத் தெறித்தது என்கிறாள் தலைமகள். பெ.தி.9.4.2.

பலகைப் புறத்தே பகட்டல் - பலகைக்குப் பின்னாலே இருந்து பகட்டுதல்; அதாவது மறைவிடத்திலிருந்து மிரட்டுதல். தலைமகள் தான் மடலெடுக்கப் போவதாகப் பலகைப் புறத்தே பகட்டுகிறாள். பெ.மடல்,0.

பழங்கிணறு கண்வாருதல்* - பழைய கிணற்றை ஊற்றுக்கண் கிளம்பத் தூர்வை வாருதல்; செம்மைப்படுத்துதல். பாழுங் கிணறு கண் வாருதல் என்றும் (1.10.5-24.) வருகிறது. நம்மாழ்வார் பெருமான் தமக்குப் பண்டு செய்த உதவிகளை யெல்லாம் பேசுவது பழங்கிணறு கண் வாருதல் என்று சொல்லி, அவன் தன்னையே தமக்குத் தந்த சிறப்பினைக் கொண்டாடுகிறார். 8.1.2-24.

பள்ளமடை - இயல்பு. ஆண் ஆணைக் கண்டு விரும்புவதைக் காட்டிலும் பெண் ஆணைக்கண்டு விரும்புவது பள்ளமடை யாகும். பாவை, 0-3.

பாடுவித்த முக்கோட்டை - நினைத்தால் கவிதை ஊற்றெடுக்கும் இடம். திருக்கண்ணபுரம் திருமங்கை மன்னனைப் பாடுவித்த முக்கோட்டையாகும். பெ.தி.8.10.9.

பாலிலே யுண்டு பனியிலே கிடத்தல் - பயமின்றி நலமாய் இருத்தல். காலமும் நல்லடிக்காலமாய், ஊரும் அயோத்தி யாய் அமைந்ததால் தசரதனுடைய பிள்ளைகள் பாலிலே யுண்டு பனியிலே கிடந்தார்கள். பாவை,16-6.

பாலும் சோறுமிட்டு வளர்த்தல் - போற்றி வளர்த்தல். ஆயமகளிர் தங்களைப் புண்ணியத்திற்குப் பாலும் சோறுமிட்டு வளர்த்த பேறு மிக்கவர்களென்று கண்ணனிடம் சொல்லிக் கொள் கின்றனர். பாவை, 28-6.

பாழுங்கிணறு கண்வாருதல் - பழங்கிணறு கண்வாருதல் காண்க. 1.10.5.

பிரதம சிலை - (ப்ரதம சிலை என்பது உரையிற் காணப்படும் வடிவம். அஸ்திவாரக்கல். அடிப்படையாய் இருப்பது என்பது குறிப்புப்பொருள். நன்மைகளுக்கெல்லாம் பிரதம சிலையாய் இருப்பது சத்தியமாகும். தி.மா. 33.

பிரிகதிர்ப்படாதபடி - விலகிச் செல்லாதபடி; தப்பிப் போகாதபடி. இது பிறிகதிர்ப்படாதபடி என்றும் பல இடங்களில் வருகின்றது. பெருமான் எல்லா உயிர்களையும் பிரிகதிர்ப் படாமல் திருவயிற்றிலே வைத்துக்காத்தான். 9.1.1-24,36.

பின்னாடு மேய்த்தல் - அடியார் இட்டவழக்காய் இருத்தல். (பின்னாடு மேய்க்கை - ஆச்ரித பரதந்த்ரனாகை என்பது அடிக்குறிப்பு). இராமபிரான் வீடணனுக்கேயன்றிப் பிறர்க் கும் பின்னாடு மேய்க்கவென்றால் உகப்பவனாக இருந்தான். பெ.தி.11.8.8.

புதியது உண்டறியாதிருத்தல்* - சிறிதுகூட அனுபவித்து அறியா திருத்தல். இராமன் தந்தைக்குச் செய்ய வேண்டிய குற்றேவல்களைச் செய்து, பின்பு பிராட்டியோடு இன்பந் துய்க்கத் தொடங்குங்கால் முன்னைய நாள்களில் காமச்சுவை புதிதுண்டறியாதவர் போன்றிருந்தவர் இப்போது அதனைத் தவிரப் பிறிதொன்றனை அறியாதவர் போலும் என்று எண்ணுமாறு மேம்பட்டு நின்றாராம். 7.10.1-36.

புதைத்துப் பார்த்தல் - நீரை யடக்கிக் கொண்டு இருத்தல்; வஞ்சித்தல். மழைக் கடவுளிடம், புதைத்துப் பார்க்காமல் பொழிந்து வளம் பெருக்கவேண்டும் என்கின்றனர் பாவை நோற்கும் பெண்கள். பாவை, 4-3.

புதைத்து விடுதல் - அடக்கிக்கொள்ளுதல்; வஞ்சித்தல். பெருமானைப் போலே புதைத்து விடுதலன்றிக்கே தீயவர் களுக்கும் நன்மொழி கூறத் தலைப்பட்டாள் பிராட்டி பாவை, 4-6.

புறங்கால் வீங்கிச் சாதல் - பல இடங்களில் தேடி நடந்து நடந்து கால்வீங்கி மிகுந்த துன்பம் அடைதல். படுக்கையின் கீழே பெருநிதி கிடக்கப் புறங்கால்வீங்கிச் சாவாரைப் போலே நாராயணன் இருக்க அவனை நண்ணாமல் இம் மண்டிலத்தார் இன்னலுறுகின்றனர். 10.6.2-.36

புறப்பூச்சாக - மேலோட்டமாக. கள்ள மனத்தர் புறப்பூச்சாகச் சில பொய்களைக் கூறி இறைவனையும் ஏமாற்ற முயல்வர். 5.1.3-9.

பூண் கட்டல்* - பலப்படுத்தல். பிரமன் தொடக்கமானோர் தந்த வரங்களாலே பூண்கட்டின இரணியனது மார்பைச் சிங்கப்பிரான் இடந்தான். சி.மடல், கண்ணி, 43.

பெரிய திருநாளாய்ச் செல்லல் - திருவரங்கத்தில் நடைபெறும் சிறப்பான விழா பெரிய திருநாள். கொண்டாட்டமாய்ச் செல்லல் என்பது குறிப்புப் பொருள். திருமங்கை மன்னன், தம் அகவாய் பெரிய திருநாளாய்ச் செல்லும்படி பெருமான் வந்து தங்கினான் என்கிறார். தி.நெ.தா.8.

பேராறு மண்டல் - ஆறுபோலப் பெருகியோடல். பெரிய பெருமாள் திருவுள்ளத்தில் திருப்பாணாழ்வார்மேல் அன்பு பேராறு மண்டத் தன் திருவடிகளை அவருக்குக் கொடுத் தான். அம. 10, அழகு.

பொதிசோறு கட்டுதல் - ஏற்பாடுகள் செய்தல். எல்லா உறவாக வும் உள்ள பெருமானைக் காண்பதற்காகப் பரமபதம் செல்வதற்குப் பொதிசோறு கட்ட வேண்டாதே அவன் திருஎவ்வுளில் வந்து சாய்ந்தருளியுள்ளான். பெ.தி.2.2.4.

பொரிபுறந் தடவுதல்* - குறைகளை மறைத்து நன்மையை ஏறிட்டுப் பேசுதல். தலைமகள், "பொரிபுறந்தடவி இறைவனைப் பேணிப் போந்தது போதும். இனி அவன் உண்மைத் தன்மையைச் சொல்லிப் போருங்கோள்" என்று அன்னங்களிடம் கூறுகிறாள். 9.7.10-36.

போம்பழியெல்லாம் அமணன் தலையோடே - திருடன் ஒருவன் பிராமணன் வீட்டில் கன்னமிட்டான். சுவர் ஈரமாயிருந்தமை யால் அதில் சிக்கி இறந்தான். திருடனுடைய உறவினர் பிராமணனிடம் இழப்புக்கு ஈடுதர வேண்டும் என்றனர். வழக்குக்குத் தீர்வு காண அரசனை நாடினர். அவ்வரசனோ அறிவற்றவன். அவன் பிராமணனை நோக்கிப் "பிராமணா! நீ ஈரச்சுவர் வைக்கையாலே அவன் இறந்தான்; ஆகையால் நீ பழி கொடுக்க வேண்டும்" என்றான். பிராமணன் "எனக்குத் தெரியாது. சுவர் வைத்த கூலியாளைக் கேட்கவேண்டும்" என்றான். அவனை அழைத்து "நீயன்றோ ஈரச்சுவர் வைத்தாய், நீ பழிகொடுக்க வேண்டும்"

என்றான் அரசன். அதற்கு அவன் "தண்ணீர் விடுகிறவன் அதிகமாக ஊற்றிவிட்டான். நான் என்ன செய்வேன்?" என்று குற்றம் தன்மேல் இன்மையைத் தெரிவித்தான். அவனை அழைத்துக் கேட்க, "குயவன் பெரும்பானையைத் தந்தான். அதனால் தண்ணீர் அதிகமாகப் போயிற்று" என்றான். குயவனை அழைத்துக் கேட்க, அவன் "என்னால் வந்ததன்று; ஒரு விலைமகள் நான் பானை செய்யும்போது அங்கும் இங்கும் திரிந்து கொண்டிருந்தாள். அவளைப் பார்க்கிற பராக்கிலே பானை பெருத்தது" என்றான். அவளை அழைத்துக் கேட்டபோது அவள் "வண்ணான் புடவை தாராமையால் போக வரத் திரிந்தேன்" என்றாள். அவனை வரச்சொல்லி வினவியபோது அவன் "என்னாலன்று, துறையில் கல்லில் ஓர் அமணன் வந்திருந்தான். அவன் போக விட்டுத் தப்ப வேண்டியதாயிற்று" என்றான். அந்த அமணனைத் தேடிப்பிடித்துக்கொண்டு வந்தனர். அரசன் அவனை நோக்கி "நீ யன்றோ இத்தனையும் செய்தாய்? நீ பழி கொடுக்கவேண்டும்" என்ன, அவன் பேசாதவனாகையாலே வாய்மூடி இருந்தான். அவன் மௌனத்தைக் குற்றத்தை ஒப்புக்கொண்டதற்கு அடையாளமாகக் கருதி அரசன் தலையை அரிந்தான் என்பது கதை. தவறு செய்யாதவனைக் குற்றவாளியாகச் சொல்வது என்பது குறிப்புப் பொருள். போம்பழியெல்லாம் அமணன் தலையோடே என்பது போன்று தீம்பெல்லாம் சேர்வது கண்ணனிடமேயாகும். 1.5. 5-36.

போர்சுட்டுப் பொரி கொறிக்கை - நெற்கதிர்ப் போரை வழியல்லா வழியில் கொளுத்தி, அதில் வெந்த நெற்பொரிகளைக் கொறித்தல். மேலான பொருளையழித்துச் சிறிய பொருளைப் பெறுதல் என்பது குறிப்புப்பொருள். மடல் எடுத்துப் பெருமானைப் பெறுவது போர்சுட்டுப் பொரி கொறிக்கையாகும். பெ.மடல், 0.

மடல் எடுக்கும்படியான - தாங்கள் பெறுவதற்குத் துடிக்கும் படியான. மடல் எடுத்தல் என்பது தமிழ்நெறிப்படி தலைமகளைப் பெறுவதற்குத் தலைமகன் மேற்கொள்ளும் அரிய முயற்சி. அதனைப்போல முயன்று பெறத்துடிக்கும் படியான. வீரர்கள் மடல் எடுக்கும்படியான ஆண் பிள்ளைத்தனம் உடையவர் சக்கரவர்த்தித் திருமகன். பெ.தி. 2.8.2

மடிகோலுதல் - பொருள் வேண்டுதல். பாவை நோன்பு நோற்கும் பெண்டிர் தாங்கள் இறைவன் திருப்பெயரைப் பாடுவது பாடி மடிகோலும் நோக்கத்தோடன்று என்றும், தாங்கள் பாடுவதே பயனாகக் கருதுகிறவர்கள் என்றும் தெரிவிக்கின்றனர். பாவை, 3-6.

மடிபிடித்து வருதல் - அடியொற்றி வருதல். கண்ணன் இடைப் பெண்கள் மடிபிடித்து அவர்கள் நீராடும் துறைக்குச் சென்றான். நா.தி. 3.0.

மடி மாங்காயிட்டு விஷயீகரித்தல் - மடியில் மாங்காயைப் போட்டு "ஏது உன்மடியில் மாங்காய்?" என்று வினவி அதன் அடியாக ஒருவனைத் தன் வழிப்படுத்தல் என்பது நேர்ப்பொருள். காரணத்தை ஏறிட்டு ஏற்றுக் கொள்ளல் என்பது குறிப்பு. தன்னைப் பாராமுகமாய் இருப்பாரையுங் கூட மடிமாங் காயிட்டு ஏற்றருளும் பெருமான் அவனை யொழியச் செல்லாத தம்மை ஏற்றருளாதவனாய் இருக்கிறான் என்று வருந்துகிறார் திருமங்கையாழ்வார். தி.நெ.தா. 9.

மடைமாற்றல் - திருப்பிவிடுதல். சிற்றின்பப் பொருளில் மடை மாற்றவொண்ணாத இறையன்போடு இறைவனைப் பெற ஏங்கி நின்றவர் நம்மாழ்வாராவர். தி.வி. 64.

மண்ணுண்ணும்படி* - தோற்கும்படி. பெருமான் பகைவர்கள் மண்ணுண்ணும்படியான படைகளை யுடையவன். 7.2.6 - 36.

மண்பற்றைக் கழித்தல் - தரமற்றதை நீக்குதல். பெருமான், மண்பற்றைக் கழித்த ஒளியை உடம்பாகக் கொண்டு திகழ்கிறான். 3.1.5-24.

மணிமண்டபத்தின் வார்த்தை - அரசவையில் கூறும் சொற்கள். நிறைவேற்றப்படும் சொற்கள் என்பது குறிப்பு. கண்ணன் கூறும் சொற்கள் படுக்கை வார்த்தையாய்ப் போகாமே மணி மண்டபத்தின் வார்த்தையாக வேண்டும் என்கின்றனர் பாவைப் பெண்டிர். பாவை, 23-3.

மயிர்க்கத்தியாய் இருத்தல் - மயிரை நறுக்கும் கத்தியாய் இருத்தல்; கொடுமையானதாக இருத்தல் என்றபடி. பரத்தையர் தங்கள் உள்ளம் மயிர்க்கத்தியாய் இருக்கப் புறத்தே அன்புடையார்போல் பழகுவர். தி.மா.16.

மலடாய்ப் போதல் - பயனின்றிக் கழிதல். திருமங்கையாழ்வாரின் 'பார்மன்னு' திருமொழியைக் கற்றார் திருமகள் அருளால் பெருஞ்செல்வம் பெற்று அதனை மலடாய்ப் போகாமே இறையடியார்க்கு உரியதாக்குவராம். பெ.தி.2.9.10.

மலையாளர் வளைப்பு - மலையாளர் (மலையில் வாழ்வோர்) ஒருவனிடம் ஒன்றை வாங்க நினைத்தால் வாங்கியன்றிப் போகாதவாறு வளைத்துக் கொள்வர். அப்படிச் சூழ்ந்து நிற்பது மலையாளர் வளைப்பு எனப்படும். ஆய்ச்சியர்கள் கண்ணனிடம் நாழிகை முப்பது சென்றாலும் மலையாளர் வளைப்புப் போலே ஓரடி பேராமல் நிற்போம் என்றார்கள். 10.3.3-36.

மஹாபாரதப்பரப்பு - விரிவான செய்தி. ஓர் ஆய்ச்சி கண்ணனோடு இராக்காலத்தில் ஊடி உரைத்த மஹாபாரதப் பரப்பைத் திருமங்கை மன்னன் 'காதில் கடிப்பிட்டு' திருமொழியில் எடுத்துக்கூறுகிறார். பெ.தி.10.8.10.

மஹாபாரதம் நடவாநிற்றல் - போராட்டம் நடத்தல். கண்ணனுக்கும் நப்பின்னைக்குமிடையே ஊடலால் எடுப்பும் சாய்ப்புமாக மஹாபாரதம் நடவாநிற்க, அவனுடைய உடல் தொடர்பால் அவளுடைய கூந்தற்பூக்கள் மலர்ந்தன. பாவை, 19-6.

மாம்பழம் உண்ணிபோலே - மாம்பழம் உண்ணி என்பது ஒரு புழுவின் பெயர். ஆனால் அதற்கும் மாம்பழத்திற்கும் தொடர்பே இல்லை. அதுபோலே பெயரளவில் அமைந்து ஒரு தொடர்பும் இல்லாதது என்பது பொருள். தலைமகள் தன் தோழியரை நோக்கி "நீங்கள் எல்லீரும் மாம்பழம் உண்ணிபோலே எனக்குத் தோழியராக அமைந்துள்ளீர்" என்கிறாள். 9.9.5-36.

மார்விலே கைவைத்துறங்கும்படி - அச்சமின்றி இருக்கும்படி. பெருமான் தன்னை நம்பியவர்களை மார்விலே கைவைத்துறங்கும்படி பண்ணுகிறான். இ.தி.61.

மார்வெழுத்தாக்கிக் கொண்டிருத்தல் - அடிமைகள் தங்கள் மார்பில் தங்கள் ஆண்டான் பெயரை எழுதிக்கொள்வது வழக்கம். அடிமையாக்கிக் கொள்ளல் என்பது பொருள். இராமனும் இலக்குவனும் தம் குணத்தாலே நாட்டையெல்லாம் மார்வெழுத்தாக்கிக் கொண்டார்கள். பெரி.தி.1.1.0.

மாலையிட்டு மார்வுந் தோளும் பார்த்தல் - கவலையிற்றி இருத்தல். இந்திரன் முதலான தேவர்கள் தம் பகைவர்களைத் திருமால் அழித்து அருள் புரிந்ததனால் பகைவர்களைப் பற்றிய அச்சமின்றி மாலையிட்டு மார்வுந் தோளும் பார்த்துச் செருக்குடன் அரசாண்டனர். பெரி.தி.4.7.4.

முகஞ்சிதறப் புடைத்தல் - அழித்தல். தன் உயிரைத் தானே நுகர்ந்துகிடக்கும் கைவல்ய முத்தியை முகஞ்சிதறப் புடைத்து இறைத் தொண்டினைப் பெறவேண்டின் சாரும்போதே எம்பெருமானுக்கே அடிமையாகக் கருதிச் சாரவேண்டும். 1.2.5-24.

முகந்தெழு பானை - ஏற்றச்சால் என்பது நேர்ப் பொருள். கொள்ளக் கொள்ளக் குறையாதது என்பது குறிப்பு. 'கடல்ஞாலம்' என்னும் திருவாய்மொழியைக் கற்றோர் முகந்தெழு பானையான செல்வம் பெறுவராம். 5.6.11-36.

முத்துலையிட்டுக் கொண்டு நலித்தல் - நீர் ஏறா மேட்டிலே நீரேற்றும்போது, ஒரு குழி கல்லி ஏற்றமிட்டு அதிலே இறைத்து அப்பாலே ஏற்றமிட்டு அப்பாலொரு குழி கல்லி அதிலே இறைப்பர். அதுபோல ஒன்றைச் சொல்லி அதுக்கு மேலே ஒன்றைச் சொல்லி நலித்தல் என்பது பொருள். தலைமகள், தாயானவள் தன்னை முத்துலையிட்டுக் கொண்டு நலிவிப்பதாகத் தோழியிடம் வருத்தத்தோடு தெரிவிக்கிறாள். தி.வி.71.

முதல் விரலாய் இருப்பது - எண்ணும்போது முதலில் நிற்றல். திருவாழி பகையை அழித்தற்கு உறுப்பாய் இருத்தலேயன்றி, அணிகளுக்கும் அழகுக்கும் முதல் விரலாகவும் அமைந்துள்ளது. பெ.தி.8.1.1.

முழங்கைத் தண்ணீர் வேண்டாமை * - ஒருவன் தண்ணீர் குடித்தால் மற்றொருவன் அவன் முழங்கையிலே ஒழுகுகிற தண்ணீரைக் குடித்தல் முழங்கைத் தண்ணீர் குடித்தலாகும். அது வேண்டாமை என்றபடி. பிறரால் வரும் உதவி வேண்டா என்பது குறிப்புப் பொருள். திருநெடுந்தாண்டகம் கற்றவர், தாங்களே தங்கள் வினையின் முதலை இறைவன் முழங்கைத் தண்ணீர் வேண்டாதே போக்க வல்லவராவர். தி.நெ.தா.30.

முழுக்காயாக - திரளாக, முற்றுமாக. பெருமானது சக்கரப் படை வாய்கரையிலேயிருந்து தன்னோசையாலே எதிரிகளை முழுக்காயாக அவியப் பண்ணும். பெரி.தி.4.1.2.

முள்மேலிருப்பு - பொருந்தாத, ஒட்டாத இருப்பு. பெருமான் வைகுந்தத்தில் இருப்பதனை முள்மேலிருப்பாகக் கொண்டு திருக்கோட்டியூரில் வந்து அன்போடே உறைகிறான். பெரி.தி.4.4.8.

மேட்டுநிலமான * - இசைவற்றதான, அரிதான. இவ்வுலக வாழ்வு இறைநுகர்ச்சிக்கு மேட்டு நிலமாகும். 1.1.0-36.

மேட்டுமடை * - இசைவற்றது. இவ்வுலகம் இறையனுபவத்திற்கு மேட்டுமடையாய் இருப்பதாகும். 1.6.11-24.

மேலெழுத்திடல் * - அங்கீகரித்தல்; ஏற்றுக்கொள்ளல். இராமனது வீரம், இராவணன் முதலான பகைவர்களும் மேலெழுத்திடும் படியான சிறப்பினை யுடையதாகும். பாவை, 13-6.

ராஜகுலம் - அரசனை நிகர்த்த மேன்மை. ''காவலில் புலனை வைத்து'' என்னும் திருமாலைப்பாடல் திருநாமம் கற்றா ருடைய ராஜகுலப் பெருமையைச் சொல்லுகிறது. தி.மா.1.

வடுக விடுநகமிடல் - வடுகன் கட்டும் கிட்டிக்கோல், வடுக விடுநகம் எனப்படும். அதனை இடுதல் என்பது பொருள். அகப்படுத்தி நகர முடியாதவாறு செய்தல் என்பது குறிப்பு. இறைவன்தான் அறிவிக்கக் கேளாதாரைத் தன் வடிவழகாலே வடுக விடுநகமிட்டுத் தனதாக்கிக் கொள்வான் என்பதற்கு அழகிய குறளனாய் வந்தமையே சான்றாகும். 4.8.6-36.

வயிர வுருக்கு - ''வயிரம் போலே கடிநம்'' என்பது பார்த்தஸாரதி அய்யங்கார் தந்துள்ள பொருள். இது பொருத்தமாகத் தோன்றவில்லை. வயிரம் என்பதற்குத் திண்மை என்று பொருள் இருப்பதால் திண்மையை நெகிழச் செய்வது என்று பொருள் கொள்ளல் சிறப்பு. கண்ணன் வடிவழகு வயிரவுருக்காக இருப்பதாகும். 9.9.1-24, 36. கண்ணன் தன் வயிரவுருக்கான செங்கனிவாய் முறுவலாலே ஆய்ச்சியர் களைத் தோற்பித்தான். 10.3.11-36.

வயிறு பிடித்தல் * - கலங்குதல்; அஞ்சுதல். நம்மாழ்வார் ''அப்பால் சாய்ந்த மருதமரம் அவன்மேலே சாய்ந்ததாகில் என்படக் கடவேன்!'' என்று கண்ணன் மருதிடைப் போய நிகழ்ச்சிக்கு வயிறு பிடிக்கிறார். 3.8.10-24.

'வரில் பொகடேன், கெடில் தேடேன்' என்றிருக்கை - அக்கறை யின்றி இருத்தல்; ஆறியிருத்தல். திருமழிசைப்பிரான், உகந்தருளின நிலங்களிலே தமக்காகப் பெருமான் வந்து தங்கியிருக்கத் தாம் 'வரில் பொகடேன், கெடில் தேடேன்' என்றிருத்தல் தகுமோ என்று வினவுகிறார். நா.தி.34.

வவ்வால் நாற்றியாக - வவ்வால் தொங்குவதுபோலத் தலைகீழாக வளைந்து விழுதல். வயல்களிலே கதிர்கள் வவ்வால் நாற்றி யாக வளைந்து விழுந்தன. நா.தி.11-6.

வழிப்போக்கர் வார்த்தை - அறியாதவர் பேச்சு. பெருமான் தன்னை மனிதனாகக் கருதுங்கள் என்று சொல்ல, அவன் சொல்லைக் கேட்காமல் 'நாராயணன் பரதெய்வம்' (பவாந் நாராயணோ தேவ:) என்னும் வழிப்போக்கர் வார்த்தையன்றோ பற்றிக்கொண்டோம் என்று தலைவி தோழியிடம் கூறுகிறாள். தி.நெ.தா.21, பட்டர்.

வாய்புகு சோறாய் இருத்தல் - நுகரத்தக்கதாய் இருத்தல். தலை மகளின் கோவைச் செவ்வாய் பெருமானுக்கு வாய்புகு சோறாய் இருத்தலினாலே அதனை அவள் மேலும் சிவக்கு மாறு திருத்தினாள். பெரி.தி. 3.7.8.

வாய்(ப்)புகு நீரும் அருநிலையாய் இருத்தல் - வாயில் நீர் புகுந்து அமிழும்படியாய் ஆழமாக இருத்தல்; தாங்க முடியாததாக இருத்தல் என்பது குறிப்புப் பொருள். தலைமகள் தலைமகனோடு கலக்கும்போது வாய்(ப்) புகுநீரும் அருநிலையாய் ஆறியிருக்க மாட்டாது மெலி வதும், பிரிந்தால் பிரிவாற்ற மாட்டாது மெலிவதுமாகத் துன்புற்றாள். அருநிலையாய் என்று வருவது அருநிலையு மாய் என்று இருத்தல் வேண்டும். தி.வி.16.

வாய்புகு நீராகை - நீச்சல் தெரியாதவன் நீர்நிலையின் ஆழங் காலில் சிக்கினால் வாயில் நீர்புகுந்து திக்குமுக்காடுவான். அதனையொட்டித் திக்குமுக்காடுவதைக் குறிக்கும். தலைமகள் கிளிளை நோக்கிப் பெருமானைக் கண்டு தன் காதலைச் சொல்லி அவனையும் தங்களோடு அழைத்துவந்து வாய்புகு நீராகாதவாறு கிளிகள் மட்டும் முதலில் வந்து அவன் வருகையைத் தெரிவிக்க வேண்டும் என்கிறாள். 6.8.2-24, 36.

வாலைக் குழைத்து நிற்றல் - நயந்து நிற்றல். பெண்கள் பயன் பெறும் வேளையில் தன்பால் வாலைக்குழைத்து நின்று 'கோவிந்தா' என்று போற்றுவதாகக் கண்ணன் கூறினான். பாவை, 28-6.

விசைக்கொம்பு - பிடித்துவிட்ட கொம்பு. அஃதாவது நான்கு பேராய்ப் பிடித்து வளைத்தபோது தாழ்ந்து, விட்டவாறே எட்டாதிருக்கை. அடைய முடியாத உயரத்தில் இருப்பது என்பது பொருள். நம்மாழ்வார், "இறைவன் விசைக் கொம்பு; நம்மால் அவனை அடையமுடியாது" என்று பின் வாங்குவோர்க்கு அவன் அடியார்க்கு எளியனாய் இருத்தலை எடுத்துக்கூறுகிறார். 3.6.0-36.

வியாசபதம் செலுத்தல் - (வ்யாசபதம் என்பது உரையில் காணும் வடிவம்) அதிகாரிகளாய் இருத்தல். திருமோகூரில் வேதத் திற்கு வியாசபதம் செலுத்தும் மறைவாணர்கள் வாழ்ந்தனர். 10.1.2-36.

விழுந்து தரிக்கும் பூமியான - அடிப்படையான; ஆதாரமான. நம்மாழ்வார் பெருமானை நோக்கி, "பெருமானே, விழுந்து தரிக்கும் பூமியான நீயும் விட்டுவிட்டால் ஐம்பொறிகளும் என்னைப் பெரிதும் வருத்துமே, என் செய்வேன்?" என்கிறார். 7.1.6-36.

விளை நீரடைத்துக் கொள்ளல்* - வயலுக்குத் தேவையான அளவு நீரைக்கட்டல் என்பது நேர்ப்பொருள். தேவையானவற்றை முன்பே நிறைத்துக்கொள்ளல் என்பது குறிப்புப்பொருள். இலங்கையில் தன்னைக் கண்ட அனுமனிடம் சீதை, "பிள்ளாய், இன்று இங்ஙனே வெறுந்தறையாய் இருக்கிற நான், எங்கள் மாமனார் மாளிகையிலே பன்னிரண்டாண்டு ஒருபடிப்பட இராம குணங்களை விளைநீரடைத்துக் கொண்டேன்காண்!" என்றாள். 9.6.0-36.

விளைநீராம்படி - பயிருக்கு நீர்போலே உறுதுணையாய் அமைதல். பெருமானை விளைநீராம்படி பெரிய பிராட்டி ஏத்துகைக்குத் துணையாய் இருப்பவள் கலைமகள் ஆவாள். பெ.தி.2.10.6.

வெள்ளக்கேடாதல் - மிகுந்த வெள்ளப்பெருக்குக் கேட்டை விளைக்கிறது; மிகுதியால் விளையும் கேடு என்பது பொருள். உயிர் இறைநுகர்ச்சிப் பெருக்கால் வெள்ளக் கேடாகாத

படியிட்ட கரையே உடல் என்பர் பெரியவாச்சான்பிள்ளை. பெரி. தி.5.4.4.

வெள்ளக்கேடும் வறட்கேடுமாதல் - மிக்கும் குறைந்தும் அழிதல். கண்ணீர் மிகுதியாலும், அன்பின்மையாலும் திருந்திய பின்னாளோடு திருந்தாத முன்னாளோடு வேற்றுமையின்றித் தொண்டரடிப்பொடி யாழ்வார் இறைவனைக் கண்டு மகிழ முடியவில்லை. அவருக்கு அவை முறையே வெள்ளக்கேடும் வறட்கேடுமாயின. தி.மா.18.

வெள்ளங்கோத்தல்* - புகுதல். தமக்குத் தலைவராய் இருக்கும் இறையடியார் மாட்டு இறைவன் பண்ணின அருள் தம்மளவும் வர வெள்ளங்கோத்தது என்கிறார் நம்மாழ்வார். 10.6.1-36.

வெற்றிலைச் செருக்கு - சிற்றின்பச் செருக்கு. தசரதன், வெற்றிலைச் செருக்காலே பரதனுக்கு அரசு தந்தேன் என்றான். 3.6.8-36.

வெற்றிலை பெறப் பார்த்தல் - பயன்பெறக் கருதுதல். தொண்டரடிப்பொடியாழ்வார், ஒரு காலைக்கு வெற்றிலை பெறப் பார்த்துச் செய்யாமல் செய்வதே பயனாகக் கருதித் தீய செயல்களைத் தாம் செய்து போந்ததாகத் தம்மைத் தாழ்த்திக் கூறிக் கொள்கிறார். தி.மா.30.

வெற்றிலையிட்டருளல் - விடைகொடுத்தல். பணக்காரன் ஒருவனைக் கொல்ல நினைத்தால், "அதனைச் செய்கிறோம்; எங்களுக்கு வெற்றிலையிட்டருளுங்கள்" என்பார் அவன்பால் உண்டு. 4.1.2-36.

வெறுந்தரை* - ஒன்றுமில்லாத இடம். வெறுந்தறை என்றும் வருகின்றது. தலைமகள் தலைமகனைப் பிரிந்து வெறுந்தரையாய் இருக்கும் தனக்குத் தூதாகச் செல்லுமாறு பறவைகளை வேண்டுகிறாள். 1.4.8-24.

வெறும்புறத்தில் ஆலத்தி வழிக்க வேண்டும்படி யிருத்தல் - எந்த ஒப்பனையும் இல்லாதபோதே மிக்க அழகோடு இருத்தல். பெருமான் வெறும்புறத்திலே ஆலத்தி வழிக்க வேண்டுங் கையிலே படைகளைத் தரித்தான். 1.8 9-36.

வெறும் மறை(ரை) - மான் என்னும் விலங்கு. அஃது அறிவற்றது. எனவே அறிவற்ற பொருள் என்றபடி. இறைவன் அழகை விடுத்து அமுதம் கிடைப்பது எப்போது என்று காத்திருந்த தேவர்கள் வெறும் மறை போலும்! 1.6.6-36.

வேர்ப்பற்றான - முக்கியமான; நெஞ்சம். உலகிற்கு வேர்ப் பற்றான கண்ணனைக் கொல்ல அசோதை போலத் தன்னை அழகுபடுத்திக்கொண்டு பூதனை என்னும் அரக்கி வந்தாள். 1.5.9-36.

வேர் பற்றுகை - ஊன்றி நிற்றல். திருமால் திருப்பெயர் தவிரப் பிறவெல்லாம் உலக வாழ்வில் வேர் பற்றுகைக்கு உறுப்பாய் இருப்பனவாகும். பெ.தி.1.1.10.

வேர்விழுதல் - நன்கு பதிதல். பெருமான் திருக்கையில் திருவாழி வேர்விழுந்திருக்கிறது. பெ.திருவந்.86. நம்பியுடைய திருமேனியில் அழகுவெள்ளம் என்நெஞ்சில் வேர்விழுந்தது என்கிறாள் தலைவி. 5.5.7-36.

வேரோடு அலம்பிப் போகட வேண்டும்படியான - கடுமையான. கிராமணிகள் ஒருவரை ஒருவர் வேரோடு அலம்பிப் போகட வேண்டும்படியான பகைமையோடு இருந்தனர். 4.10.7-36.

## செறிவுத் தொடர்கள்

அஃகமுண்ண வருதல் - சிறந்த உணவு உண்ண வருதல். நித்திய சூரிகள் பெருமானிடம் ஏற்று அஃகமுண்ணத் திருமலைக்கு வருகிறார்கள். தி.நெ.தா.6.

அகஞ்சுரிப்படுதல் - குறைதல். இறைவனைப் பிரிந்த காலத்திலும் அகஞ்சுரிப்படாத அழகுகள் தலைமகளின் அழகுகளாகும். 4.6.5-24. விதுரர் முதலானோர் அன்பினை அகஞ்சுரிப்படுத்தி முகங்காட்டுகைக்காகக் கண்ணபிரான் குசத்தலத்திலே தங்கிப் பிற்றைநாள் அத்தினாபுரத்திற்கு எழுந்தருளினான். 8.6.0-36.

அகப்பட்ட துறை - ஈடுபட்ட இடம். காதலி அகப்பட்ட துறை காதலனின் வடிவழகாகும். 7.2.3-36.

அசல் பிளந்தேறிடுகை - 1. பிறர் மேல் ஏறிடுதல். பெருமான், கடலுக்குத் தொடுத்த அம்பை மருகாந்தாரத்திலே விட்டாற்போலே தன் அடியார் செய்த அருவினைப் பயனை அவர் துய்க்காவண்ணம் அசல் பிளந்தேறிடுமாறு செய்வான். தி.மா. 40. 2. பிளந்து அயல் வீசுகை. பெருமான் பகைவர்களை அசல் பிளந்தேறிட்டு அகக்கூட்டம் மட்டுமன்றிக்கே புறக்கூட்டமுமாம்படி பண்ணினான். பெரி.தி. 5.4.8.

அசலிட்டுக் கேட்டல் - பிறர் சொல்லக் கேட்டல். பெருமான் பிரிவால் தலைமகள் கண்ணும் கண்ணீருமாய் இருந்த இருப்பைத் தான் நேரேகாணப் பெற்றானில்லை; அசலிட்டுக் கேட்கப் பெற்றான். அஃதாவது தோழி சொல்லக் கேட்டறிந்தான். தி.வி. 2.

அடைமதிள் படுத்தல் - முற்றுகையிடுதல். பகைவர் வந்து ஊரை அடைமதிள் படுத்த வெல்லுகை குற்றமாகும். பாவை, 11-6.

அடைவுபடச் சொல்லல் - முறையாகச் சொல்லல். ஆயிரம் திருப்பெயர்களையும் அடைவுபடச் சொல்லி, அவற்றிற்குரிய தன்னை நினைப்பவர்களுக்குத் துன்பமின்றி அருளுகிறான் பிரிதியில் உறையும் பெருமான். பெ.தி. 1.2.9.

அண்டை கொள்ளல் - துணை கொள்ளல். வாலிக்கு அஞ்சிச் சுரங்கிடந்த சுக்கிரீவன் பெருமாளை அண்டை கொண்ட பலத்தாலே கிட்கிந்தை வாயிலிலே சென்று அவனை நோக்கி அறைகூவினான். தி.மா. 1.

அணாவாய்த்து இருத்தல் - 1. செய்வது அறியாது இருத்தல். நம்மாழ்வாருக்கு இறைவன் திருவுலகளந்தருளின சில குணத்தைக் காட்டிக் கொடுக்க அதனை நினைந்து அகலமாட்டாதே, அனுகவுமாட்டாதே, நடுவே நின்று அணாவாய்த்துக் காலங் கழிக்கிறார். 1.5.3. 2. போது போக்குதல். பெண்கள்பால் நேயம் மிக்கார், பெண்களின் கருநெடுங்கண் நோக்கத்தில் துவக்குண்டு காலிலே விழுந்து பின்னை அவர்கள் தங்களை விட்டு அவர்களுடைய பேச்சு நடையாடும் இடத்திலே அணாவாய்த்துத் திரிவர். பெ.தி. 1.6.2.

'அது அது' என்னும்படி - விரும்பும்படி இருத்தல். தலைமகள் கண்கள் யோகியர்க்கும் 'அது அது' என்னும்படி

அழகோடு மிளிர்ந்தன. தி.வி.66. வீணையிசை கேட்டார்க்கு 'அது அது' என்று கிடக்கும்படி இனிமை மிக்கதாய் இருந்தது. தி.நெ.தா. 15.

அம்பறுத்து எய்ய வேண்டும்படி - அம்பினைப் பயன்படுத்த வேண்டும்படியான என்பது நேர்ப்பொருள். கடுமையான என்பது குறிப்பு. வணிகர் இருவர்க்கும் ஒரு பந்தலில் இடம் போதாமையால் அம்பறுத்து எய்யவேண்டும்படி விவாதம் உண்டாயிற்று. 1.2.7-36.

அமணானைப்பட்டுத் திரிதல் - ம த ம் ப ட் டு த் திரிதல்; காமத்தோடு திரிதல். பிடியை இழந்ததொரு களிறு தன் ஆற்றாமையாலே அமணானைப்பட்டுத் திரியுமாபோலே, தலைமகளையும் தோழியையும் இழிந்து தலைமகன் தன் ஆற்றாமையோடே திரிகிறான். தி.வி. 15.

அமுது செய்தல் - உண்ணல். கண்ணன் வெண்ணெயை இளமைத் தன்மையாலே திருக்கைகள் உள்ள அளவும் கலந்து அமுது செய்தான். 1.8.5-36.

அருள் பாடிடல் - அழைத்தல். பெருமாள் மகாராசரையிட்டு வீடணனை அருள்பாடிட்டார். அம. 0, அழகு.

அரைகுலையத் தலைகுலைய - அரையாடையும் தலைமுடியும் அலைய என்பது நேர்ப்பொருள். வேகமாக என்பது குறிப்பு. பெருமான் முதலையிடமிருந்து யானையைக் காப்பாற்ற மிக்க வெள்ளத்தை உடைத்தான மடுவிலே அரைகுலையத் தலைகுலைய வந்து விழுந்தான். திருவெழு. அடி, 11.

அரையாறுபடுதல் - குறைதல். நம்மாழ்வாருடைய எல்லையற்ற அன்பு அரையாறுபட்டு அடங்குவதற்காக இறைவன் சற்றுப் பேர நின்றான். 4.4.0-24.

அரை வயிறாம்படி - பற்றாதபடி. குறைவாக. அழகு அரை வயிறாயிருக்கையன்றிக்கே விஞ்சித் தலைக்கு மேலே போகிறது. தி.நெ.தா. 21. பெருமான் பேற்றில் முதலடியாகையாலே அரைவயிறாகப் பேசி, நம்மாழ்வார் முடிந்த அடியாகையாலே நிறைந்தவராகப் பேசுகிறார் மதுரகவி. க.நு.சி.1, நஞ்சீயர்.

அலகலகாக - ஒன்றோடொன்று கூடாமல் இருத்தல். கண்ணனது குழல்சுருண்டு வெடித்து அலகலகாய் இருந்தது. 3.6.5-12.

அழிய மாறல் - முற்றிலும் அழித்துக்கொள்ளல். பெருமான் பூமியைத் தன்பேறாகத் தன்னை அழியமாறி எடுத்தான். 1.7.6-9.

அளாய் குளாயாய்ப் போருவது - களிப்பது: அளாவிக் குலாவிப் போவது என்பதன் சிதைவாகத் தோன்றுகிறது. உலகில் குழந்தையும் குட்டியுமாய் அளாய் குளாயாய்ப் போருவதான கடைமுறை வாழ்க்கையும் பிற தெய்வங் களைப் பற்றினால் கெடும். 9.1.9-36.

அறவிலை செய்து தருதல் - எல்லா உரிமையும் கொடுத்து விற்றல். கண்ணன் தனக்கு இசையாதவர்களை இசையும்படி யும், இசைந்தவர்களை அறவிலை செய்து தரும்படியும் இள ஆய்ச்சியர்களை நோக்குவான். க.நு.சி.1, அழகு.

அறவைத்தனப் படாதபடி - திக்கற்ற நிலைக்கு ஆளாகாதபடி. உலகிற்கு ஆபரணமான அரங்கத்தில் பெருமாள் கிடக்கும் கிடை மக்கள் அறவைத்தனப் படாதபடி இருத்தற்கே யாகும். அம. 10, அழகு.

அறாட்டுப் பறாட்டாயிருக்கை - அரைகுறையாய் இருக்கை. ஆராட்டுப்பிராட்டு 3.7.3-36. உலக இன்பம் ஒருவர்க்கும் பற்றாமல் அறாட்டுப் பறாட்டாயிருக்கையாலே இங்குத் தனித்து நுகர்வர்; திருநாட்டில் நுகர்ந்தாலும் ஆள் தேட்டமாயிருக்கையாலே இனமாக நுகர்வர். தி.வி. 23.

அன்னலுந் துன்னலுமாக - அன்னல் வெயிலென்றும் துன்னல் சிறு திவலை என்றும் பொருள்படும். முறையின்றிக் கலந்த கலவையாக என்பது குறிப்புப் பொருள். குப்பையும் கூளமு மாக என்பது போன்றது. கண்ணன், புகையும் நெருப்பும் கலந்து அன்னலுந் துன்னலுமாய் இருக்கும் மேகம் போலன்றிக்கே முழுதும் நீருண்ட மேகம் போன்று திகழ் பவன். தி.வி. 2.

அஹமஹமிகயா விரும்புமிடம் - எங்களுடையதென்று பற்றுக் கொண்டு விரும்புமிடம். திருவேங்கடம் மேலான தேவர் களான நித்தியசூரிகள் அஹமஹமிகயா விரும்புமிடமாகும். மு.தி. 38.

ஆடல் கொடுத்தல் - ஈடுகொடுத்தல், சமாளித்தல். தலைமகனைப் பிரிந்த தலைமகளைத் தென்றல் தொடக்கமான பொருள்கள் துன்புறுத்த அவற்றுக்கு ஆடல்கொடுத்துப் பொருள்களைக் கண்டு போதுபோக்கவொண்ணாதபடி எங்கும் இருள்மூடியது. பெ.தி. 8.5.0.

ஆழங்காற்படுகை - ஈடுபடுகை. பெருமான், அகப்பட்டாரை மீளாதபடி ஆழங்காற்படுத்தும் வடிவழகை யுடையவன். 3.3.3-36.

ஆழிமுறையாய்ச் செல்லல் - 1. முறையின்றிச் செல்லல். திருவரங்கம் செல்லுவதில் உண்டான ஆர்வமிகுதியால் திருக்குடந்தைக்குப் பின்பு சொல்ல வேண்டிய திருப்பேரையை முற்படச் சொல்லுகிறாள் தலைவி. தடையற்றால் ஆழிமுழையாய்ச் செல்லத் தட்டில்லையன்றோ? தி.நெ.தா. 19. பெருமாள் அரக்கரை ஆழிமுழையாகத் தறித்துக் குருதி வெள்ளத்தே மிதக்கவிட்டுப் பிராட்டியைப் பிடித்துக் கொண்டு தம் சேவகத்தை மூதலித்துக் காட்டியருளினார். தி.நெ.தா. 21. 2. ஆரவாரமாய்ச் சொல்லல். சிற்றூர் வாழ்க்கை கதிர் அறுப்பது, கிடாவிடுவதுமாய் ஆழிமுழையாய்ச் செல்லுகின்றது. தி.நெ.தா.20.

ஆளத்தி வைத்தல் - முரலுதல். வண்டுகள் மதுவைக் குடிக்க, அம் மது அவற்றை இருந்தவிடத்தே இருக்கவொட்டாமையாலும், தாம் வாய்விடமாட்டாமையாலும் ஆளத்தி வையாநின்றன. தி.மா. 14.

ஆறல் பீறலாய் இருப்பது - பயனற்றதாய் இருப்பது. வாணன் தன்னோடொக்க ஆறல்பீறலாய் இருப்பதொரு தெய்வத்தைப் பற்றித் தோள்வலி கொண்டாடி இருந்தான். 7.4.8-36.

இட்டவழக்கு - கட்டளையிட்டபடி நடப்பது. இறை நுகர்ச்சிக்குத் தடைகளான செவி முதலிய பொறிகளும் அவன் இட்ட வழக்காம்படி அவனுக்கு உடல்போன்று உரிமையாய் அடிமைப்பட்டன. 1.9.9-36.

இட்டீடு கொள்கை - சொல்லாடல். வார்த்தையிட்டு வார்த்தை கொள்ளுகை என்பது பொருள். கண்ணன் இளம்பெண்களோடே இட்டீடு கொண்டு விளையாடுகையாலே அவனால் ஈடுபட்டபெண்கள் யசோதை பக்கல் வந்து அவன் செய்த தீம்புகளைச் சொல்லி முறையிட்டனர். பெரி.தி.2.10.0,

இட்டுப் பிறத்தல் - உரிமையாகப் பிறத்தல். பெருமானின் வடிவழகைத் துய்க்க இட்டுப்பிறந்தவர்கள் நித்தியசூரிகள் *1.10.9-36.*

இடக்கை புரி முறுக்குதல் - மாறுபட்ட செயலைச் செய்தல். பெருமான் தன்னை வெறுந்தரையாக்கிப் பிரிந்து சென்று முடிக்க நினைத்ததாகவும் தானும் வாழ்ந்திட எண்ணி இடக்கைப்புரி முறுக்குகை தவிர்ந்து முடிகையிலே துணிந்த தாகவும் சொல்கிறாள் பராங்குசநாயகி. *9.5.10-36.*

இடுக்கிக்கொண்டு வருதல் - தூண்டிக்கொண்டு வருதல். பெருமான் யானையின் துயர் துடைக்கத் திருவடியின் வேகம் பற்றாமல் அவனையும் இடுக்கிக்கொண்டு மடுவின் கரையில் வந்து விழுந்தான். *3.1.9-36.*

இருகால் மட்டுச் சென்று கேள்வி கொள்ளல் - திரும்பவும் சென்று கேட்டறிதல். மாயோனிகளான இருடிகள் தொடக்க மானோர் தங்கள் கடமைகளைச் பெருமானிடம் இருகால் மட்டுச் சென்று கேள்வி கொள்ள வேண்டாதபடி கற்றிருப்பர். *1.5.3-36.*

இருந்ததே குடியாக - எல்லோரும். மனிதர் இருந்ததே குடியாகப் பாவங்களைக் கூடு பூரித்தனர். *2.2.2-36.* இருந்ததே குடி யாகத் தொழப்படுபவர் அன்றி மூவரே தொழப்படுபவர். மு.தி.15.

இருபுடை மெய்க்காட்டாகை - இரு குழுவிலும் இடம்பெறுதல். பெருமானுடைய படைகளுக்குப் படைப்பிரிவிலும் ஆபரணப் பிரிவிலும் இருபுடை மெய்க்காட்டாகையாலே திருமகரக் குழைபோலத் திருவில்லும் ஆபரணமாகத் தரித்து வந்தான். தி.நெ.தா.21, பட்டர்.

இளகிப் பதித்திருத்தல் - இளமைத் தன்மை பெருகுதல். ஊட்ட மருந்து உண்டவரைப் போலே கன்றுகளைக் காத்த பின்பு கண்ணன் வடிவு இளகிப் பதித்திருந்தது. தி.நெ.தா.16.

இளமணற்பாய்தல் - இரங்கிய மனத்தை யுடையராதல். நம்மாழ்வார் கண்ணன் வெண்ணெய் களவுசெய்த காரணத் தால் நகரத்தில் உண்டான பரபரப்பில் அகப்பட்டு இளமணல் பாய்ந்து மயங்கினார். *1.3.0-36.*

ஈரக்கையாலே தடவுதல் - பரிவுகாட்டுதல். இராமபிரான் அயோத்தியில் பதினோராயிரமாண்டு எழுந்தருளியிருந்து மக்களை ஈரக்கையாலே தடவிக் காத்தான். 7.5.2-36.

ஈரரசு தவிருகை - இரட்டையாட்சி தவிர்தல்; தனக்குத் தானும் இறைவனும் தலைவனாய் இருக்கும் நிலை தவிர்தல். இறைவனை வணங்குகையாவது ஈரரசு தவிருகை; அதாவது அவன் நினைவிலே செல்லுகை எனலாம். 10.6.1-24,36.

உகந்தருளின நிலம் - திருக்கோயில். இறைவன், உகந்தருளின நிலங்களிலே வந்து நிற்கிறது நம்மைத் திருநாட்டுக்குக் கொண்டு போகைக்காக வாகும். 10.6.1-36.

உண்டது உருக்காட்டாது இருத்தல் - உணவின் நலன் உடலில் தெரியாதிருத்தல். அனுபவிப்பது ஓர் அனுபவமாகத் தோன்றாது இருத்தல். இவ்வுலகிலிருந்து அனுபவிக்கின்ற அனுபவம் உண்டது உருக்காட்டாதபடியாய் இருக்கிறது. 3.3.1-36.

உண்டறுத்தல் - உண்டு தீர்த்தல்; அனுபவித்து முடித்தல்; சீரணித்தல். தாழ்ந்த பொருள்களையும் உண்டறுக்க மாட்டாது உலகியலில் சிக்குண்டிருக்கும் சேதனனுக்குப் பெருமான் தன்னையே பொருளாகக் காட்டித் தந்தான். 1.7.2-36. பெருமான், அடியவரின் ஓர் அஞ்சலியைக்கூட உண்டறுக்க மாட்டாத தன்மையினன். அம.1, அழகு.

உணர்ந்தருளல் - விழித்து எழுதல். தாயான பிராட்டியின் மார்பினைச் சயந்தன் காக உருவெடுத்துத் தீண்ட அவ்வளவில் பெருமாள் உணர்ந்தருளி அவன் மேலே ஓர் அம்பினை ஏவினார். பெரி.தி.3.10.6.

உதறிப்படுத்தல் - படுக்கையை உதறிப்படுத்தால் குற்ற மற்றதாமாறு போலே குற்றமின்றி விளங்குகை. ப்ரகாசிப்பிக்கை என்பது பெ.தி.7.6.9 இன் அடிக்குறிப்பு. என் அடிமைத்தன்மையையும் உன் தலைமைத்தன்மையையும் உதறிப்படுத்த பின்பு "இறைவா, உனக்குப் போக்கிடம் இனி எவ்விடத்திலே?" என்று இறைவனை நோக்கி வினவுகிறார் பெரியாழ்வார். பெரி.தி.5.4.6.

உரித்து வைத்தல்-தெளிவாக விளக்குதல். 'உளனாகவே எண்ணி' என்னும் பாசுரத்தின் முற்பகுதியில் மானுடத்தின் தன்மையை உரித்து வைத்துள்ளார் நம்மாழ்வார். 3.9.2-36.

ஊமைக் கூறனாகப் பட்டவெல்லாம் படுகை - பேசாமல் பட்ட துன்பங்களெல்லாம் படுகை. திருமால் பாற்கடல் கடைந்த போது அது ஊமைக்கூறனாகப் பட்டதெல்லாம் தங்கள் கையிலே இவன்படும்படி செய்யவல்லர் ஆவதே! என்கிறார்கள் மின்னிடை மடவார். 6.2.3-36.

ஊற்று மாறாமை - எடுக்க எடுக்கக் குறையாமை. பெருமாட்டியால் வந்த செல்வம் ஊற்றுமாறாததாய் இருந்தது. பாவை, 3-6.

எட்டுக் கதிரும் விட்டெரிக்கிற பெரிய மதிப்பு - விளங்குகின்ற பெரிய மதிப்பு. பிற தெய்வங்கள் எட்டுக்கதிரும் விட்டெரிக்கிற பெரிய மதிப்புடையவர்களானாலும் இராவணனை இராமனிடமிருந்து காப்பாற்றுவது அரிதாகப் போயிற்று. அம. 5, அழகு.

எடுத்துக் கைநீட்டுதல் - தொண்டு புரிதல். நித்திய சூரிகளுக்குப் பெருமானும் பிராட்டியும் சேர்ந்த சேர்த்தியிலே எடுத்துக் கைநீட்டுகையே வாழ்க்கையாய் இருக்கின்றது. தி ச.வி. 103.

எடுத்து விடுகை - படையெடுத்தல். அரசர்கள் பகைவர்மாட்டுக் கொண்ட பகையினையும் மறந்து எடுத்து விடுகையும் தவிர்ந்து அரண்மனை திரும்புமாறு மாரிக்காலம் அமைகின்றது. பாவை, 23-6.

எதிர்சூழல் புக்குத் திரிதல்* - எதிரே உள்ள பொருள்களில் கரந்து தங்கியிருத்தல். இறைவன் ஆழ்வாரைச் சேர்வதற்காக எதிர்சூழல் புக்குத் திரிந்தான். 1.7.7-36.

எதிர்போந்ததாய் இருத்தல் - விளக்கம் இல்லாததாக இருத்தல். கண்ணன பாரதப் போரிலே நின்று அருச்சுனனை நோக்கித் தான் சொன்னது அவனுக்குத் தொங்கிற்றோ? எதிரே போந்ததோ? என்று வினவ அவன் 'நிலைபெற்றேன்' என்றான். 7.5 11-36.

எல்லை நடந்து மீட்டுக்கொள்ளல் - அளந்து மீட்டல். மகாபலி போல்வார் கவர்ந்துகொண்ட தன்னுடைய பூமியைப் பெருமான் எல்லை நடந்து மீட்டான். 2.8.7-36.

எழவிருத்தல் - சற்றே அதிகமாகத் தங்குதல். பிற உலக இன்பங்களைக் காட்டிலும், அறவழியில் சென்றவர், நான்கு நாள் எழவிருந்து எழுந்திருக்கலாம்படியான சிம்மாசனத்தின் மேலே இருந்து இந்திரலோகத்தில் இன்பம் துய்ப்பர். பெ.மடல், கண்ணி, 21.

எழுத்து வாங்குதல் - தலைவனின் பெயரை மார்பில் எழுதிக்கொண்டு அடிமை என்று காட்டுதல். அடிமையாதல் என்பது பொருள். திருமால் அமரர்கள் எழுத்து வாங்கும்படியாகத் தோளும் தோள்மாலையுமாய் ஒரு கடல் ஒரு கடலை நின்று கடையுமா போலே பாற்கடலைக் கடைந்தான். 1.3.11-36.

ஒத்து(ப்)பதஞ் செய்தது - நெகிழ்ந்தது. நரசிங்கத்தினுடைய சீற்றங் கண்டவாறே இரணியன் மார்வம் ஒத்துப்பதஞ் செய்தது. 2.6.6-24.

ஒரு(க்)காற் சொன்னாற்போலே ஒன்பதின்காற் சொல்லல் - பலகாற் சொல்லல். கண்ணன், ஒரு(க்) காற் சொன்னாற் போலே ஒன்பதின்காற் சொன்ன பறையை இற்றைக்குக் கொள்ளுங்கோள் என்று பெண்களுக்குக் கொடுக்கும்படி பறையை எடுத்துக்கொண்டு வாருங்கோள் என்றான். பாவை, 29-6.

ஒருகோவையாய் இருத்தல் - ஒன்றாக இருத்தல். பெரியாழ்வாரின் 'வாராரும்' திருமொழியைப் பாடவல்லார் திருநாட்டில் நித்திய சூரிகளோடு ஒருகோவையாய் இருக்கப் பெறுவர். பெரி.தி.3.10.10.

ஒருசிறாங்கை இடுதல் - ஒரு சிறிது இடுதல். தொண்டரடிப் பொடியாழ்வார், கடல்நிறக் கடவுளைக் கண்டு வைத்தும் குறியழியாதே இருப்பவர்களை நோக்கி "உங்கள் வன்மையிலே எனக்கும் ஒரு சிறாங்கை இடவல்லீர்களோ" என்று வினவுகிறார். தி.மா.19.

ஒருநாடாக - பெருங்கூட்டமாக. பெருமான், தான் அருளாத அன்று வாழ்க்கையின்றிக்கே இருக்கும் நித்திய சூரிகளை ஒரு நாடாக உடையவன். 1.1.1-36.

ஒருநிரையாக - ஒரே மாதிரியாக, ஒன்றாக. கண்ணன் ஒரு நிரையாய்ச் சேர்ந்து நின்ற மருதுகளினை ஊடறுத்துச் சென்றான். 6.10.5-36.

ஒருநீர்க்கோப்பாக - ஒரே வெள்ளமாக. நாடு முற்றிலும் ஒரு நீர்க்கோப்பாக மழை பெய்தது. பாவை, 23-6.

ஒருநீராகக் கலத்தல் - இரண்டறக் கலத்தல். பெருமான் தன்னுடனே ஒரு நீராகக் கலந்தவர்களுக்கு ஒப்பற்ற அமுதமாய் இருப்பான். 1.6.5-36.

ஒருபோகியாக்குதல் - ஒன்றாகத் திரட்டுதல். காலத்தை எல்லாம் ஒரு போகியாக்கி, உணரத் தொடங்கினாலும் இறைவனுடைய அக, புறக் குணங்களை உணர இயலாது. மு.தி.68.

ஒருமடைப்படுகை - ஒருவழிப்படுகை. நம்மாழ்வார் இறைவனுடைய செயல்களை நினைத்துப் பார்த்துத் தம் உள்ளம் ஒருமடைப்பட உடைகுலைப்படுகிறார். 6.3.6-36.

ஒருமிடறாக - ஒரே மாதிரி; இசைந்து; ஒன்றுபட்டு. தேவர்களும் இருடிகளும் ஒருமிடறு செய்து ஏத்தும் தேவதேவன் திருமாலிருஞ்சோலையை விரும்பி வந்து படுகாடு கிடக்கிறான். 10.7.7-36.

ஒருமுகமாக - (ஒருமுகஞ்செய்து) ஒன்று கூடியதாக. தலைமகள் பெருமானுடைய திருமுகத்தில் அழகுகள் ஒருமுகமாய் வந்து தன்னை நலிவிக்கின்றன என்கிறாள். 7.7.8-24, 36.

ஒழிஞ்சான் முட்டாய் இருப்பது - ஒன்றுக்கும் தகுதியின்றிக்கே இருப்பது. யசோதை கண்ணனை ஒழிஞ்சான் முட்டாய் இருக்கும் ஒரு கயிற்றையிட்டே கட்டுவது வழக்கமாய் இருந்தது. க.நு.சி. 1, அழகு.

ஒட வைத்தல் - முடிவு செய்தல், விளக்குதல். இறைவனுக்காக இருக்கும் இருப்பே தமக்கு வேண்டும் என்னும் தம் விருப்பத்தினை நம்மாழ்வார் 'தனக்கேயாக என்னைக் கொள்ளுமீதே' என்பதில் ஒட வைத்துள்ளார். 1.1.0-இரண்டாம் ச்ரிய: பதி.

ஓம் அறைதல் - இசைதல். கண்ணன் நோன்பினை முன்னின்று நடத்துவதற்கு இசைந்த பின்பு இடையர்கள் எல்லோரும் "பெண்கள் நோற்பார்கள்; கண்ணன் வேண்டும் உதவி புரிவான்" என்று ஓம் அறைந்து சென்றார்கள். பாவை, 0-3.

கட்டடங்க - முற்றிலும். இராமன், முனிவர்களின் அச்சம் தீர அவர்களுடைய பகைவர்களைக் கட்டடங்கக் கொன்று அவர் தம் துணைவனாக நின்றான். தி.நெ.தா.21.

கட்டணமாய்க் கிடத்தல் - அகலாது கிடத்தல். மருத்துவர்வாசலில் நோயாளிகள் கட்டணமாய்க் கிடப்பதுபோலே, நந்தகோபர் வாசலில் கிருட்டினனால் புண்பட்ட பெண்கள் கட்டண மாய்க் கிடந்தார்கள். பாவை, 1-6.

கடக்க இருத்தல் - விலகி இருத்தல். பெருமான் படைத்தல் தொடக்கமான செயல்களைப் பிரமன் முதலியோரைச் செய்யுமாறு பணித்துத் தான் கடக்க இருப்பான். பெ.தி.1.7.1.

கடுநடையிட்டுச் செல்லல் - விரைந்து செல்லல். கண்ணன், ஆநிரைகளின் மேல் ஒரு துளி விழுவதற்கு முன்பு அவற்றுக்கு இடர்வாராதபடியாகக் கடுநடையிட்டுச் சென்று கோவர்த் தனத்தை எடுத்தான். பெ.தி.1.8.3.

கடைக்கூட்டாதல் - நடத்துபவனாதல்; முடித்துத் தருபவனாதல். நோன்புக்குக் கண்ணன் கடைக்கூட்டாக அமைவான் என்று ஆயமகளிர் மகிழ்ந்திருந்தனர். பாவை, 0-3.

கண்செறியிட்டாற் போலே - மூடினாற் போலே. பெருமான், கடலைக் கண்செறியிட்டாற்போலே பெரிய மந்தர மலையை யிட்டு அமுதங் கிளருமளவும் தானே கடைந்தான். தி.கு.தா.3.

கண்ணாஞ் சுழலையிடல்* - கண் சுழலுதல், அதாவது மயங்கு தல். தலைமகன் பிரிவாற்றாமல் கண்ணாஞ் சுழலை யிடுகிறவர்கள் அவன் வந்தபோது அவளிடம் என்ன கூறுவார் கள் என்று சொல்வது அரிது. 6.2.8-36.

கண்பிசைதல் - அழுதல். இந்திரன் மகாபலிபக்கலில் அரசை இழந்து திருமாலிடம் சென்று கண்பிசைய அவன் குறளனாய் வந்து அதனை மீட்டுக் கொடுத்தான். திருவா.5.

கண்வளர்ந்தருளல்* - உறங்குதல். பெருமான் சில திவ்விய தேசங்களில் கிடந்து கண்வளர்ந்தருளுகிறான். 8.3.5-36.

கதகதெனல் - கோபித்தல், ஒலியெழுப்பல். ஒருவனுடைய வேலைக்காரர்களில் எல்லோரும் விரும்பும் ஒரு செயலைச்

சிலர் மட்டும் செய்து பயன்பெற்றால் மற்றவர் கதக தென்னச் சொல்ல வேண்டுமோ? 4.8.7-36.

கமர் பிளந்த நெஞ்சு - ஏக்கத்தால் வறண்ட நெஞ்சம். கண்ண னிடம் ஆயமகளிர் அவனைப் பிரிந்து கமர் பிளந்த தங்கள் நெஞ்சங்கள் வவ்வலிடும்படி மகிழச் செய்யவேண்டும் என்கிறார்கள். பாவை, 27-6.

கரம்பறுக்க வேண்டாமை - இடர் களைய வேண்டாமை. திருநாட்டில் கரம்பறுக்க வேண்டாமையாலே பெருமானது இருப்பு மட்டுமே அமையும்; பாதுகாப்புத் தேவைப்படுவது உலகத்திற்கே யாகையால் இங்கே பொருந்தி வாழ்வது இன்றியமையாதது. 4.10.2-24.

கலந்த கட்டியாக - கலப்படமாக. இருடிகள், காமம் முதலிய பேறு களைக் கலந்த கட்டியாக அறிவுறுத்தி உள்ளனர். க.நு.சி.0, அழகு.

கவிழ்தலையிடல் - தலையைத் தொங்கவிட்டுக் கொண்டிருத்தல்; நாணத்தைக் குறித்தபடி. நெடுவெள்ளம் தேவர் குடியிருப்பை யும் சென்று மூட, அவர்கள் தாம் பாதுகாப்பாளராக இருந்த எல்லை கழிந்தது என்று கவிழ்தலை யிட்டார்கள். பெ.தி.11.4.1. சிற்றின்ப நுகர்ச்சி கண்டார்க்குக் கவிழ் தலையிட வேண்டும்படியாய்த் தாழ்ந்ததாக உள்ளது. பெ.தி.4.1.8.

கழகமிடல் - கூடுதல். பாவைப் பெண்டிர் கிருட்டினனும் தாங்களும் கழகமிடும் குறியிடங்களை அடைந்தார்கள். பாவை, 13-3.

காட்டிக் கொடுத்தல் - ஒப்படைத்தல். அரக்கியர் கையில் சீதை யைக் காட்டிக் கொடுத்து இராவணன் தான் பேர நின்றான். 9.9.6-36.

காடு கைக்கலாவது - சொல்பவனுக்கே வாய் கைக்கும்படி சொல்வது. நாம் புறம்பே நின்று பலவற்றைக் காடு கைக்க லாவது உண்டு. ஆனால் பெருமானது புகழைச் சொல்லி வாழ்வடைதல் தவிர வேறு வழியில்லை என்பதே திரளச் சொல்லலாவது. 9.1.6-24, 36.

காடுபட்டுக் கிடத்தல் - மண்டிக்கிடத்தல். இறைவன் குணங்களுள் ஏதேனும் ஒன்று பயனின்றிக் காடுபட்டுக் கிடக்குமா என்று வினவினால், எல்லாக் குணங்களும் ஒருசேரக் கொள்ளத் தக்கனவாகவே இருக்கும். யாதொன்றும் பயனின்றிக் கிடக்காது. 1.1.1-36.

காணாக் கண்ணிடல் - பொருட்படுத்தாது விடல். இறைவன், தன்னை ஒருகால் நினைத்து ஒருகால் மறந்த என் நிலையினைக் காணாக்கண்ணிட்டு என்னை ஆட்கொண்டானோ என வினவில், தன்னை நினைத்தற்கும் தகுதியற்று அறிவில்லாப் பொருள்போன்றிருந்த என்னை ஆட்கொண்டான் என்கிறார் நம்மாழ்வார். 7.9.9-36.

கால்கட்டல் - திருவடிகளைப் பற்றித் தடுத்து நிறுத்தல். பெருமானைக் கால்கட்டி நிற்றலே உடல்தொடக்கினைப் போக்கிக் கொள்ளற்கு வழியாகும். பெ.தி.11.8.10.

கால்தாழ்ந்திருத்தல் - ஆழ்ந்திருத்தல். மற்றப் பொருள்களில் கால்தாழ்ந்திருந்த என்னைப் பெருமான் தன் திருவடிகளைத் தொழுமாறு செய்தான். 7.8.5-36.

கால்நடை தருதல் - நடத்தல். தலைமகள், தன் பக்கல் நாயகன்பால் கால்நடை தந்து போக வல்லார் இல்லாமையால் வண்டினைத் தூதாகச் செல்ல வேண்டுகிறாள். பெ.தி.3.6.0.

கால்நடையாடும் போது - நடக்கும் ஆற்றலிருக்கும்போது. திருமழிசைப்பிரான் உலகினரை நோக்கி, "உங்களுக்குக் கால்நடையாடும்போதே திருமலைக்குச் சென்று பெருமானைப் பற்றுங்கள்" என்று அறிவுரை கூறுகிறார். நான்.தி.44.

கால்பிடித்தல் - கெஞ்சுதல். (காலைப் பிடித்தல் என்றும் வருகிறது). தலைமகள், பெருமான் தனக்கு அருள்செய்ய மறுத்தக்கால் வந்து தன்னை முடித்து விடவேண்டுமென்று வாடைக்காற்றைக் கால்பிடித்து வேண்டுகிறாள். 1.4.9-36.

கால்வாங்குதல் - பிரிந்து போதல், நகர்தல். பெருமான், ஆழ்வார் நினைவினை அறிதற்காகக் கால்வாங்கப் புக, ஆழ்வார் "இனி எங்குப் போவாய்?" என்கிறார். 2.6.9-36.

காற்கட்டல் * - தடுத்தல், தாரை வாலியைக் காற்கட்டச் செய்தேயும், அவன் இழிவு பொறுக்க மாட்டாமல் புறப் பட்டுச்சென்று சுக்ரீவனோடு போரிடத் தொடங்கினான். 10.6.5-36.

காற்கடைகொள்ளல் * - புறக்கணித்தல்; ஒதுக்கல். பெருமான் நான்கு உலகங்களுக்கும் ஏற்றவாறு வெவ்வேறு நிறத்தோடு அவதரித்தபொழுதும் உலகத்தவர் அவனைச் சார்ந்து உய்வடையாமல் காற்கடை கொண்டனர். தி.ச.வி.44.

காறுகாறென்னல் - இகழ்தல். யசோதை கண்ணனைப் பெற்ற குற்றமொழிய, ஊரிலுள்ளார் காறுகாறென்னும்படியாகத் தான் எக்குற்றமும் செய்யவில்லை என்கிறாள். பெரி.தி.3.1.7.

கிழிச்சீரை பெருகவேணுமென்றல் - செல்வம் பெருகவேண்டும் என்றல். செல்வனைக் கண்டால் உலகினர் "உனக்கு இன்னும் கிழிச்சீரை பெருக வேணும்" என்று போற்றி செய்வர். 9.1.3-36.

குட்டமிட்டு அழிக்கை - குழிதோண்டி (அகழ்ந்து) அழித்தல். பெருமான் நரசிங்கமாய்த் தோன்றி இறுமாப்புக் கிடந்த இரணியன் மார்வைக் குட்டமிட்டு அழித்தான். 10.6.4-24.

குட்டிக்கொலையாக அறுத்தல் - கருவில் குழவியும் அழியும்படி யாக அறுத்தல். இராமபிரான் அரக்கர்களை மறுகிளையறும் படி குட்டிக்கொலையாக அறுத்துப்போட்டான். பெரி.தி. 4.2.1.

குடல் மறுகும்படியாக - கலங்கும்படியாக. அரசர்கள் அனைவரும் அருச்சுனனுக்குக் கண்ணன் துணைபுரிவதைக் கண்டு தம்மால் அவனை வெல்ல முடியாதென்று குடல் மறுகும்படியான அச்சங்கொண்டனர். பெரி.தி.4.2.7.

குடி கிடக்கைக்காக - வாழ்வதற்காக. தன் உடைமையான உலகம் குடி கிடக்கைக்காகப் பெருமாள் அரக்கர்களை அழித்தான். பெ.தி.7.3.1.

குடிபோதல் - நீங்குதல். தலைமகள், பெருமானுடைய மென்மை யும் அன்பும் போனாலும் அருள் குடிபோக வேணுமோ என்று வினவுகிறாள். 9.7.9-24.

குடிமை செய்தல் - அடிமை வேலை செய்தல். திருமங்கை மன்னன், "பெருமானே நீ என் பொருட்டுத் திருவிண்ணகரில் மேவியிருக்கும்போது யான் பிறருக்குக் குடிமை செய்து திரிவேனோ?" என்கிறார். பெ.தி.6.2.8.

குடியுந் தடியுமாக இருத்தல் - வசதியோடு சுகமாக இருத்தல். மனிதர்களைப் பார்த்து வீடுபேற்றில் விருப்பின்றி உலகத்தில் குடியுந் தடியுமாக இருக்க விழைந்தால் இறைவனை நோக்காமல் தங்கள் தங்களை நோக்கிச் செல்லுங்கள் என்கிறார் நம்மாழ்வார். தி.வி.6.

குடிவாங்க வேண்டும்படி - வெறுமையாகும்படி, ஆளில்லாது ஆகும்படி, யாதொன்றும் இல்லாதபடி. பெருமாள் கிடந்த கிடை, இலங்கை குடிவாங்க வேண்டும்படியாக அமைந் திருந்தது. 2.8.7-36. பெரிய ஊர்கள் குடிவாங்கினாற் போலே. பெ.தி.2.7.5.

குடிவாழ்ந்திருத்தல் - தங்கள் வீடுகளில் சுகமாக இருத்தல். யசோதையிடம் அண்டைவீட்டுப் பெண்கள் கண்ணனைத் தீம்பு செய்யாதவாறு அவள் அழைத்துக் கொள்ளவில்லை என்றால் அவன் தங்களைக் குடி வாழ்ந்திருக்க வொட்டான் என்று முறையிட்டார்கள். பெரி.தி.2.9.3.

குத்துண்ணும்படி இருத்தல் - தோற்பிக்கும்படி இருத்தல். தலைமகளின் பேச்சு, இனிய இராமாயணத்தினையும் குத்துண்ணும்படி இருந்தது. 6.5.3-24.

குந்தியடியிட்டு நிற்றல் - பற்றுக் கொண்டு நிற்றல். பெருமான், ஆழ்வார் மாய யாக்கை வழியாக நுழைந்து குந்தியடியிட்டு நிற்கிறான். 10.7.3-36.

குழைச்சரக்கு - வலுவற்ற பொருள். திருநாட்டிலுள்ளார் தன்னைக் குழைச்சரக்காக நினைத்து அஞ்சி நோக்கும்படி யான பருவத்தையுடையவன் வைகுந்தக் குட்டன். பெரி.தி.3.6.3.

குறியழியாதே இருத்தல் - சிறிதும் பாதிக்கப்படாமல் இருத்தல். பெருமாள், இராவணன் குறியழியாதே | இருக்கும்போதே அவன் தம்பி வீடணனுக்கு முடி சூட்டுவித்தான். தி.ச.வி.91.

குறுவிழி கொள்ளல் - கண்ணைச் சிறிது திறந்து கொண்டிருத்தல். வெண்ணெயுண்ட கண்ணன் படுக்கையில் கிடந்தவாறே குறுவிழிகொண்டு வந்தார் போனார் நிழலாட்டம் பார்த்துக் கொண்டிருந்தான். பெரி.தி.2.5.4. யமனால் துன்புறுத்தப் பட்டுக் கிடப்பவன், தன்னால் விரும்பப்பட்டவளை அழைக்கிறார்களோ என்று எண்ணிக் குறுவிழி கொண்டு கிடக்கிறான். பெ.தி.1.6.4.

குன்னாங்குருச்சியாக - மறைவாக. இடைப்பெண்கள் கண்ணனிடம் தங்கள் விழைவுகளைக் குன்னாங்குருச்சியாகக் கேட்டருள ஒண்ணாது, பேரோலக்கமாக இருந்து கேட்டருள வேண்டும் என்று நினைவுபடுத்துகிறார்கள். பாவை, 23-6.

கூடுகட்டி நிற்கும் இடம் - உறையுமிடம். தேவதேவன் அருள் செய்ய மறத்தாலும் அவன் கையிலுள்ள சக்கரம் உறுதியாக அருள்புரியும். ஏனெனில் அஃது அருள்கூடுகட்டி நிற்குமிடம். 1.4.6-36.

கூடு பூரித்தல் * - நிறைத்துக்கொள்ளல். மனிதன் இங்கு இருக்கும் நாளில் செய்யும் செயல் மறுமைக்கும் வறுமையைக் கூடு பூரித்து வைக்கிறது. தி.மா.6.

கேள்வி கொள்ளுதல் - விருப்பத்தைக் கேட்டறிதல். சத்துருக்கனன் தாய் தந்தையரையும் அண்ணனான பெருமாளையும் கேள்வி கொள்ளாதே பரதனையொழியச் செல்ல மாட்டாமையால் அவனோடு கேகய நாடு சென்றான். க.நு.சி. 0,பெரி.

கைகழிதல் - எல்லை கடந்து போதல், விலகிப் போதல். நம்மாழ்வார் பெருமாளை நோக்கிச் "சிற்றின்ப ஈடுபாட்டில் கைகழிந்து போன நான் உன் திருவடிகளைக் கிட்டுவது என்று?" என்கிறார். 3.2.6-36.

கைசெய்தல் - அணிவகுத்தல். அரசனின்றிக் கிடந்த நாட்டை வன்னியரடையத் தங்களிலே கைசெய்து கிழோலை விட்டு நான்கு வாசலையும் வந்து பற்றினர். பெ.தி.9.5.1.

கைத்தொடராய்ச் செய்தல் - நேரடியாக. அடியார்தம் பகைவர்களை அழியச் செய்யுமிடத்துக் கைத்தொடராய்ச் செய்யாது அன்று பெருமானது சீற்றம் மாறாது. தி.மா.28.

கைதொடனாய் இருத்தல் - உதவியாய் இருத்தல், கையிலேயே இருத்தல். கிருட்டினாவதாரத்தில் பெருமானுக்குச் சங்கும் சக்கரமும் கைதொடனாய் இருக்கின்றன. பெரி.தி.2.1.1.

கைதொடுமானமாய் இருத்தல் - உதவியாய் இருத்தல். பெருமானது மகிழ்ச்சிக்குக் கைதொடுமானமாகையே அடியவனுக்கு வாழ்ச்சியாகும். தி.மா.45.

கைபுகுதல் - அணித்தே இருத்தல், அடையத்தக்கதாய் இருத்தல். கண்ணன், பிரமன் தொடக்கமானவர்களுடைய அறிவுக்கும் எட்டாதவனாய் இருந்தபோதிலும் இடைச்சிக்கும் வேடனுக்கும் கைபுகுந்து இருந்தான். பெ.தி.1.1.1.

கையடியுண்ணல் - ஈடுபடுதல், சிக்கிக் கிடத்தல், அயோத்தியில் உள்ளார் இராமகுணங்களிலே கையடியுண்டு மற்றொன்று அறியாது இருந்தனர். நா.தி.13-10.

கையடைப்பாக்கல் - சூழ்ந்து நிற்குமாறு செய்தல். "பெருமானே, இவ் ஆன்மாவை முடிக்க வல்ல இந்திரியங்களைக் கையடைப் பாக்கி நீயே காப்பாளன் என்னும் எண்ணத்தை நெகிழ்ப்பவன் போலே நின்றாய். இனி எனக்கு யார் துணையாவார்?" என்கிறார் நம்மாழ்வார். 7.1.2-36.

கையெடா நிற்றல் - வணக்கம் புரிதல். கிருட்டினன் என்றால் கையெடுப்பாரில்லை. நம்மாழ்வாருடைய ஊரின் பேரைக் கேட்டவுடன் ஊரே கையெடா நின்றது. க.நு.சி.8, அழகு.

கைவந்தபடி - அறிந்தபடி. ஆழ்வார்கள் தம் கைவந்தபடி பாடினாரல்லர்; இறையருளை முதலாகக்கொண்டே கவி பாடினர். க.நு.சி.8, நம்பிள்ளை. இறைவனாகிய பொருள் எனக்கு அழகியதாகக் கைவந்தது. நான்.தி. 96.

கைவந்தார்படி - அறிந்தார் தன்மை. "நின்னலால் இலேன்காண்" என்று கூறுவதன்றோ இறைவனைக் குறித்துக் கைவந்தார் படியாக இருக்கின்றது. 4.9.2-24.

கைவளர்ந்து போதல் - பழகிப்போதல். மதுரகவிகள் விரும்பத் தகாதவற்றிலும் தீமைகளிலும் கைவளர்ந்து போந்ததம்மை நம்மாழ்வார் திருத்தி ஆட்கொண்டார் என்கிறார். க.நு.சி. 4, அழகு.

கைவாங்குகை - மீளுதல், பின்வாங்குதல், சோர்தல். தேவர்களும் அசுரர்களும் கடலைக் கடைய வென்று தொடங்கிக் கைவாங்கினார்கள். சி.மடல், கண்ணி, 27.

கோட்சொல்லிக் கொடுத்தல்* - காட்டிக் கொடுத்தல். சிறுபுலியூர்ச் சலசயனம் என்னும் திவ்விய தேசத்தின் திருவீதிகள் அவ்விடத்தின் செல்வச் செழிப்பினைக் கோட்சொல்லித் தாராநின்றன. பெ.தி.7.9.10.

கோட்புக்குக் பலித்தல் - மரங்கள் பயன்கொள்ளும் பருவத்தனவாய்ப் பழுத்தல். இறைவன், அக்காரமென்னும் மரம் கோட்புக்குப் பலித்தாற்போல் இலங்குகிறான். 2.9.8-24.

கோடியெடுக்கிறேன் எனல் - பல சான்று காட்டுகிறேன் எனல். தலைமகள், பெருமான் தகவுடையன் அல்லன் என்பதற்குக் கோடியெடுக்கிறேன் என்கிறாள். 10.3.1-36.

கோல் தேனாக அனுபவித்தல் - மிக்க இன்பமாக அனுபவித்தல். திருமங்கையாழ்வார், பெரிய பெருமாளையும் அல்லாத திருப்பதிகளைப் போல, 'கண்டியூர் அரங்கம் மெய்யம் கச்சிபேர் மல்லை' என்று கோல்தேனாக அனுபவித்தார். அம. 0, அழகு.

சாண் சந்தை - சிறு நினைப்பு. இறைவன் ஒருவன் உளன் என்னும் இச் சாண் சந்தையும் நெஞ்சில்படவில்லை. பெ.தி.1.6.6.

சாமானியன் என்று இடும் ஈடெல்லாம் இடுதல் - செய்யும் துன்பமெல்லாம் செய்தல். அழகர் திருமலையில் சாமானியர் என்றும், சோழியர் என்றும் இருபிரிவினர் இருந்தனர். அவர்களுக்குள் பகைமையுண்டாய்ச் சோழியரெல்லாம் சாமானியரைக் கண்டால் அடிக்க வேண்டுமென்று இரவில் கூடியிருந்தனர். அப்பொழுது சோழியருள் ஒருவன் வர அவனை ஆளறியாமல் அடிக்க, அவன் "நான் சோழியன்; ஏன் அடிக்கிறீர்கள்" என்றான். அவர்கள் சாமானியன் என்று கருதிவிட்டோம் என்றனர். அப்படியானால் "இன்னுங் குத்துங்கள்" என்று அவன்பக்கல் வெறுப்பாலே தன் நோவு தோற்றாமல் சொன்னான். யசோதை கண்ணனை "ஒரு பெண்ணைக் களவு கண்டான்", "வெண்ணெயைக் களவு கண்டான்" "வரை மூலையடியே நடத்தினான்' என்று கட்டுவாள் அவன் "சாமானியன் என்று இடுமீடெல்லாம் இடுங்கோள்' என்றிருந்தான். தன்னைக் கள்ளனென்று கட்டிவைத்தால் அதனை விரும்பி ஏற்றான் என்றபடி. க.நு.சி.1, பெரி.

சாலப் பணியுண்டாய் இருத்தல் - அரிய செயலாய் இருத்தல்; தொல்லை மிக்கதாய் இருத்தல். புறச் சமயங்களாகிற விலக்கடிகளில் வீழாது தப்புவது சாலப் பணியுண்டாய் இருப்பதொன்றாகும். பெ.தி.9.7.0.

சிக்கெனப் பிடித்தல் - உறுதியாகப் பிடித்தல். தலைமகளை, நெஞ்சைச் சிக்கெனப் பிடித்துக்கொண்டு தரித்துக்கொண் டிருக்குமாறு தோழிமார் தொடக்கமானோர் வேண்டினர். 7.3.2-9.

சிமிழ்த்துக்கொண்டு வருதல் - அணிந்துகொண்டு வருதல். பெருமான் ஒரு சிவப்பு நிற ஆடையினைச் சிமிழ்த்துக்கொண்டு தலைமகளின் வீட்டு வாயிலில் வந்து நின்றான். பெ.தி. 10.8.2.

சிவீலென்று இருத்தல் - பொறாமையோடு இருத்தல். கண்ணன், அருச்சுனனை நோக்கி 'நம்முடைய அக, புறப்பண்புகளையும் உடைமைகளையும் சொன்னவிடத்தில் நீ சிவீல் என்று இருந்திலை; உன்னையொத்த அதிகாரியைக் கண்டிலோம்'' என்றான். 3.5.6-36.

சிழகிச் சிழகி யழுதல் - விக்கி விக்கி யழுதல். ''நெஞ்சே, கால மெல்லாம் இருந்து சிழகிச் சிழகி யழுதலால் என்ன பயனுண்டு? மெய்ஞ்ஞானச் சோதிக் கண்ணனை அடைய முடியுமா?'' என்று வினவுகிறார் நம்மாழ்வார். 3.2.7-36.

சிறிமுறிப்படி செல்லல் - ஆணைப்படி செல்லல். கோவை வாயாள் திருவாய்மொழி வல்லார், பரமபதம் தங்கள் சிறுமுறிப்படி செல்லுமாறு ஆள்வர். 4.3.11-36.

சிறுமுறி மறுக்கும்படி - கட்டளை மறுக்கும்படி. இயமன், தனக்குப் பரிவரானவர்களுக்குத் தன்னுடைய நாலைந்து சிறிமுறி மறுக்கும்படி அவர்களுக்குத் தரம்செய்து கொடுத்தான். பாவை, 4-6.

சிறியத்தைப் பெரியது நலியாதபடி - முறைமையோடு. பெருமாள், தம் வில்லாற்றலால் இராவணன் முதலிய அரக்கர்களை அழித்துச் சிறியத்தைப் பெரியது நலியாதபடி நாட்டை ஆண்டார். தி.நெ.தா. 7.

சினை கொள்ளுகை - செழித்திருக்கை. திருவாலித் திருநகரி சினைகொண்ட வயலையுடையதாய்த் திகழ்கிறது. பெ.தி. 2.9.10.

சீறுபாறு என்று போருகை - சினமுறுகை. சூர்ப்பணகை சீதா பிராட்டேயோடே சீறுபாறென்று வந்தாள். சி. மடல், கண்ணி. 39.

சுமையெடுக்கத் தொடங்கல் - வருத்தத் தொடங்கல். மனதிற்கு அடங்கி நடக்க வேண்டிய ஐம்பொறிகள் கலிகாலக் கொடுமையால் மனத்தைச் சுமையெடுக்கத் தொடங்கின. பெ.தி.1.6.8.

செம்பால் பாய்ந்து நிற்றல் - மிக்கு நிற்றல். தொட்டாய் குருதி பொசியும்படி, மென்மை மிக்கிருத்தல். (செம்பால் - குருதி) ஆலிலைமேல் கண்வளரும் பிள்ளைப் பெருமானுக்குக் இருட்டினனும் முரணித்திருக்கும்படி இளமைத் தன்மை செம்பால் பாய்ந்து நின்றது. அம. 9, பெரி, அழகு.

செவி சீப்பாய்ந்து கிடத்தல் - ஈடுபட்டுக் கிடத்தல்; வாய்புலற்றிக் கிடத்தல். காமனைப் பயந்த காளை தன் வாழ்விடமாகக் கொண்டது திருவனந்தபுரமாகும் என்று அறிவுடையார் அடங்கச் செவி சீப்பாய்ந்து கிடப்பார்கள். 10.2.8-36.

சேர விழுதல் - வந்து பொருந்துதல்; பொருத்தமாக அமைதல். மங்களச் செயல் செய்வார்க்கு விதிக்கிற விதியும் இவர் களுக்குக் கோல் விழுக்காட்டிலே சேரவிழுந்தது. பாவை, 1-3.

சொப்பனச்சொல்லல் - நன்றாகச் சொல்லல். "அன்னையே, நாம் கற்பித்த திருநாமங்களையும் சொப்பனச் சொல்ல மாட்டாதவள் இன்று நான் சொல்லினும் திருத்தொலை வில்லிமங்கலம் என்பது ஒழிய மற்றொன்றும் கேளாதவளாய் இருக்கிறாள்" என்று தோழி தாயிடம் கூறினாள். 6.5.7-36.

தகர விழுகை - தகரும்படி விழுதல். மிக உயரத்தில் ஏறினால் அது தகர விழுகைக்கு உறுப்பாகும். 4.6.0-24.

தங்கு வேட்டையாக - புறப்பட்டுச் சென்று தங்கியிருத்தல். ஆழ்வார்மீது மிகுந்த விடாயனாய்ப் பெருமான் அவரைக் கொண்டு போகைக்குத் திருவாட்டாற்றில் தங்கு வேட்டை யாக வந்து நின்றான். 10.6.0-36.

தட்டித் திரிதல் - கிடைக்கப் பெறாது திரிதல்; தேடித் திரிதல்; இடறித் திரிதல். பெரியாழ்வார் காக்கையை நோக்கிப் பிண்டத் திரளை உண்ண வேண்டிக் கிட்டுமிடம் தட்டித் திரியாமல் கண்ணன் குழலை வாரிவிட வருமாறு வேண்டு கிறார். பெரி.தி.2.5.6. "ஈச்வராபிமானியாய் ஒருத்தனாய்த் திரிந்தவன் வாசல்தோறும் இடறித் திரிவதே!" என்று திருவுள்ளத்திலே புண்பட்டான் ஸர்வேச்வரன் மு.தி.46.

தடுக்கின் கீழே இருந்து கேட்டல் - பக்கத்தில் நாடிச்சென்று கேட்டல். பாவையர் கண்ணனை நோக்கி "அடியவர் பிழை செய்தால் பொறுப்பது பெரியார் கடன் என்பதனை ஐயர் தடுக்கின் கீழேயிருந்து கேட்டறியாயோ" என்று வினவுகின் றனர். பாவை, 28-3.

தரைகாணல் - எல்லை காணல். இறைவன் பண்புகளுள் மேன்மை யினும் நீர்மை தரைகாண வொண்ணாததாய் இருக்கிறது. 1.3.1-36.

தரைப்படுதல் - தோற்றுப் போதல், வீழ்தல். தறைப்படுதல் என்றும் காணப்படுகின்றது. 7.3.3-36; 10.3.8-24,36. பெருமான், பகைவர்கள் தரைப்படும்படியான சங்கு சக்கரம் முதலான படைகளைக் கையில் பரிவாலே தாங்கியுள்ளான். தி.ச.வி.97.

தலைமண்டையிடல்* - மிகுதல். பாட்டுக் கேட்போர், பாட்டு ஈடுபடுத்தினவாறே 'பாவியேன்' என்னுமாறு போல, நம்மாழ்வார் அடியார்க்கு அடிமைப்பட்ட இன்பம் தலைமண்டையிடத் தம்மைக் 'கொடுவினையேன்' என்று கூறிக் கொள்கிறார். 8.10.1-36.

தறைக்கிடை கிடத்தல் - கீழே விழுந்து கிடத்தல். தாயார், பெருமானை நோக்கி "என்மகள் தறைக்கிடை கிடக்க நீ பாம்பணையில் படுத்திருத்தல் பொருந்துமோ?" என்கிறாள். 7.2.6-36.

தாளங் கொண்டறிதல் - வெண்கலத்தின் ஒலி ஒருகாலுக்கு ஒருகால் ஓய்ந்து வருதல்போல் ஒருகாலுக்கு ஒருகால் குரல் ஓய்ந்து வருதல் என்பது பொருள். தலைமகளின் துயரமிகுதி யைத் தாளங்கொண்டு அறியலாம். 2.4.1-36.

திரிய விடுவித்தல் - வந்த வழியே திரும்பிச் செல்ல விடுதல். திருமங்கையாழ்வார், திருக்குறுங்குடிப் பெருமானைப்பற்றித் தம்மை வருத்திய ஐம்பொறிகளைத் திரிய விடுவித்ததாகத் தெரிவிக்கிறார். பெ.தி.1.6.8.

திருக்காப்புக் கொள்ளல் - மூடிக்கொள்ளல். நம்மாழ்வார் திருவாசலைத் திருக்காப்புக்கொண்டு தனிமையில் பெருமானிடம் தன் விருப்பங்களை விண்ணப்பம் செய்கிறார். 9.2.0-36.

திருச்செவி சாத்தலாம்படி யிருக்கை - கேட்கத்தக்கதாய் இருத்தல். நம்மாழ்வார் விண்ணோர் பெருமானைத் திருச்செவி சாத்தலாம்படியிருக்கும் இசைமாலைகளால் ஏத்தியதாகக் கூறுகிறார். 4.5.6-24,36.

திருநாட்டுக்கு எழுந்தருளல் - வைகுந்தத்துக்குச் செல்லல்; உலக வாழ்வு நீத்தல். திருநாட்டுக்கு நடத்தல் என்றும் குறிக்கப் படுகிறது. 4.6.2-36. பெரிய நம்பி, ஆழ்வான் மடியில் சாய்ந்தவாறே திருநாட்டுக்கு எழுந்தருளினார். 3.5.7-36.

திருநாளெழுந்தருளுவித்தல் - பலப்பல சொல்லிக் கொண்டாடுதல். உருத்திரனைத் திருமங்கையாழ்வார் "குலவரையன் மடப்பாவை யிடப்பால் கொண்டான்" என்று அடைமொழிகள் தந்து திருநாளெழுந்தருளுவிக்கிறார். தி.நெ.தா.9.

திருப்பல்லாண்டு பாடுதல் - வாழ்த்துக் கூறுதல். பெருமான் பள்ளியறையிலிருந்து அரியணை அளவும் நடந்து வருதல் கண்ட பாவை நோன்பு நோற்கும் பெண்கள் அவனது நடையழகுக்குத் திருப்பல்லாண்டு பாடினர். பாவை, 24-3.

திருப்பள்ளியுணர்தல்* - விழித்தெழுதல். நம்மாழ்வார், திருப்புளிங்குடியில் கண்வளரும பெருமானை நோக்கி, அவன் திருப்பள்ளியுணர்ந்து பிராட்டியோடேகூட இருந்தருள வேண்டும் என்று தம் விழைவினைத் தெரிவிக்கிறார். 9.2.0-9.

திருமஞ்சனம் பண்ணல் - நீராடல். ஆசாரியனை அவன் சிறப்பு நோக்கித் "திருமஞ்சனம் பண்ணியருள வேணும்" என்று சொல்வது வைணவ மரபு. பெரி.தி.4.4.7.

திருவுள்ளம் பற்றல் - எண்ணுவது. இராமபிரான், அனுமனுடைய அறிவு ஆற்றல்களைக் கண்டு அவனே சீதையைத் தேடிக் கண்டறிய வல்லான் என்று திருவுள்ளம் பற்றினார். பெரி.தி.4.1.0.

துகைக்க வொண்ணாமை - சொல்ல வொண்ணாமை. பிராட்டி நாவாலே துகைக்க வொண்ணாத பேரழகுடையவள். 10.10.6-24.

துடைநடுங்குதல் - அஞ்சுதல். துரியோதனன் தன் அவையில் இருந்தார் அனைவரும் கண்ணபிரானைக் கண்ட அளவில் எழுந்து வணங்குவது கண்டு தானும் துடைநடுங்கி எழ முயன்று கருவுதலாலே எழாது அமர்ந்திருந்தான். பெரி.தி.1.8.4.

துணுக்குத் துணுக்கு என்னல் - அஞ்சுதல். திருமகள், பெருமான் மார்பில் இம்மார்பிலிருப்புக்கு ஏதேனும் இழவு வரில் செய்வதென் என்று துணுக்குத் துணுக்கென்று ஆயிற்று உறைகின்றாள். பெ.தி.2.7.1.

தும்பு கூட்டல் - திரட்டல். மேலான இறைமைக் குணங்களும் பிறந்து படைத்த குணங்களுமெல்லாம்கூடத் தும்புகூட்டினால் இராமபிரான் தசரதனுக்கு ஒப்பாவான் என்பர். பாவை, 17-6.

துரும்பெழுந்தாடல் - கிளர்ந்திருத்தல். அறிவில் குறைய நின்றாரும் மகிழ்ச்சிக்குப் போக்குவிட்டுத் துரும்பெழுந் தாடும்படி பண்ணும் உகந்தருளின நிலம் திருப்பிரிதி ஆகும். பெ.தி.1.2.1.

துள்ளித் தூரியிருக்கை - சுருண்டு மென்மையாயிருக்கை. தலைமகன் நறுங்குஞ்சி துள்ளித் தூரியாய் இருந்தது. தி.நெ.தா.21,பட்டர்.

தூர்வை யெடுத்தல் - போக்குதல். கண்ணன் திருத்துழாயிலே சென்ற தலைமகள் நெஞ்சம் அவனாலும் தூர்வையெடுக்க வொண்ணாத பசலைநோயினை அவளுக்குத் தந்துவிட்டது. தி.வி.12.

தூறு மண்டுதல் - மிகப்பலவாக நிறைதல். இறைவன் தம் நெஞ்சில் புகுந்து நீங்காதிருத்தலால், தன்னோடு தொடர்

புடையாரும் தூறு மண்டின நோய்களெல்லாம் துரந்து மண்ணுலக வாழ்வில் சேர்வது மாறினர் என்கிறார் நம்மாழ்வார். 2.6.7-36.

தொங்கும்படி - தங்கும்படி, நிற்கும்படி. மதுரகவியாழ்வார் வேதத்தின் உட்பொருளைத் தம் நெஞ்சில் தொங்கும்படிக் கீடாக நம்மாழ்வார் விரகிட்டுப் பாடி நிறுத்தினார் என்கிறார். க.நு.சி.9, அழகு.

தொட்டுத் தருதல் - போக்கித் தருதல். அனுமன், வானர வீரர் களைப் பார்த்து "நீங்கள் வேண்டுமளவு மதுவினைக் குடியுங்கள். ததிமுகன் முதலியோரால் ஏதும் தொல்லை யின்றி யான் தொட்டுத் தருகிறேன்" என்கிறான். பெ.தி. 11.5.1.

தொடை கொள்ளலாம்படி இருத்தல் - அறியலாம்படி இருத்தல். கலவியால் வந்த புகர் அடங்கலும் வடிவிலே தொடை கொள்ளலாம்படி வண்டு விளங்கியது. பெ.தி. 3.6.1.

தொத்தம்பாக விடுதல் - அம்புக்காயத்தோடு தப்பிச் செல்ல விடுதல். பெருமாள், மானுருவில் வந்த மாரீசனை முன்பு போலே தொத்தம்பாக விடாதே முடித்தார். தி.கு.தா. 16.

தோல்புரையே போதல் - மேலோடு போதல். தலைமகளின் பார்வையம்புகள் தோல்புரையே போவதன்றிக்கே தலை மகளின் உயிரிலே தைத்தன. தி.வி. 75.

நக்கரைந்து கிடத்தல் - அழிந்து கிடத்தல். கம்சன் கண்ண பெருமான் திருவடிப்பட்ட அளவில் நக்கரைந்து கிடந்தான். மலையில் மோதினால் மோதிய பொருளே நக்கரைந்து போகும்; மலைக்கு அழிவில்லை. தி.நெ.தா. 7.

நடைச்சக்ரவத்துப் பிடிக்கும்படி - நடைக்குச் சக்கரவர்த்தி வந்தான் என்று விருது பிடிக்கும்படி. யமுனையாற்றங் கரையில் கண்ணனைக் காணாத இடைப்பெண்கள் அவனைப் போல ஒரு பெண்ணை அமைத்து விளையாடினார்கள். கண்ணனாக நடித்த பெண், "நான் நடக்கிறேன்; நீ நடைச் சக்ரவத்துப் பிடித்துக்காண்" என்று பிறிதொரு பெண்ணை நோக்கிக் கூறினாள். பெ.தி. 8.2.6.

நரம்பில்லாதது - முற்றாதது. தலைமகளின் நகில்கள் நரம்பில் லாதவை. தி.நெ.தா. 17.

நல்லுயிரான - சாரமான. பெருமான் கடலைக் கடைந்து நல்லுயிரான அமுதத்தை வாங்கியருளினான். பெ.தி. 3.9.1.

நற்றரிக்க இருத்தல் - நன்கு இருத்தல். திருமகள் கேள்வன் பெரிய திருவடி முதுகிலே நற்றரிக்க இருந்து அவனை நடத்து கிறான். தி.நெ.தா. 6.

நறுகு முறுகு எனல் - பொறாமைப்படுதல். சிசுபாலன் தொடக்கமானோர் நறுகு முறுகு என்றால் அவர்கள் கண்ணுக்குத் தோற்றாதபடி மறைந்துநின்று நோக்கும் கருணையாளன் பெருமானாவான். 6.9.5-36.

நனுங்கிக் கொண்டு வருதல் - மெள்ளப் பாடிக்கொண்டு வருதல். பெருமான், பெண் பிறந்தாரடைய மயங்கும்படியாக இரவில் பண்ணை நனுங்கிக்கொண்டு வந்து இல்லம் புகுந் தார். பெ.தி. 10.8.3.

நாக்கு நீட்டல் - ஆசைப்படல். நெஞ்சம் கண்டதிலெல்லாம் நாக்கு நீட்டித் திரிந்தது. தி.வி. 44.

நாக்கு வளைக்கை - பழித்தல். பெண்கள்பால் ஒருவன் செய்யும் தாழ்ச்சி பயனின்றிக் கழிதலோடு பிறர் நாக்கு வளைக்கைக் கும் மேல் நரகம் செல்வதற்கும் உடலாகின்றது. 2.10.2-24. ஐம்புல இன்பங்களை நாக்கு வளைக்கலாம்படி ஆபரண அழகையுடையவன் பெருமான். மூ.தி. 79.

நாநீர் வரும்படியான வார்த்தை - விரும்பும்படியான வார்த்தை கள். இராமபிரான் இலக்குவன் கைகேயியைப் பழித்துரைத்த போது, அவ்வாறு பேசக்கூடாது என்று கூறி நாநீர்வரும்படி யான வார்த்தை சொல்லும்படி வேண்டினான். 9.1.4-36.

நாப்புரளாதபடியான - சொல்லக் கூசும்படியான. தலைமகள் அயல்பெண்கள் நாப்புரளாதபடியான பழிகளைத் தூற்றத் தான் மடலேறப் போவதாகச் சொல்கிறாள். 5.3.10-36.

நிறக்கேடு - பெருமைக்குறைவு. நம்மாழ்வார் இறைவனைத் தாம் கிட்டுகை அவனுக்கு நிறக்கேடு என்று நினைத்தார்; ஆனால் இறைவனோ அவரைக் கூடி ஒளி மிக்கவனாய் விளங்கினான். 3.6.7-36.

நிறம் பெறும்படி - சிறப்புறும்படி; பொலிவு பெறும்படி. கண்ண பெருமான், எருதுகளின் சீற்றத்தையும் தனது மென்மையையும் பார்த்துக் கூசாமல் மேல்விழுந்து அடர்த்துத் தன் இளமைத் தன்மை நிறம்பெறும்படி நின்றான். தி.ச.வி. 42.

நெஞ்சுளுக்கும்படியாக - நெஞ்சு குலையும்படியாக. கண்ணன் தேரை நடத்தும் திறமை துரியன் பக்கத்தைச் சார்ந்த அரசர்கள் தாம் பிழைக்கமுடியாது என்று நெஞ்சுளுக்கும் படியாக இருந்தது. பெரி.தி. 1.9.4.

பகட்டித் திரிதல் - அழகுகாட்டித் திரிதல். மன்மதன் தன் வடிவாலே நாட்டை அடையப் பகட்டித் திரிகிறான். பெ.தி. 1.1.3.

பகட்டித் துவக்குதல் - மயக்குதல். விலைமகளிர், "சிற்றின்பம் துன்பம் பயக்கும்" என்று எண்ணவொட்டாதவாறு தம் பருவத்தையிட்டுப் பகட்டித் துவக்குவர். பெ.தி. 1.1.1.

பசலுங் குட்டியுமாய் - குழந்தையுங் குட்டியுமாய். இவ்வுலகில் பசலுங் குட்டியுமாய் வாழும் வாழ்க்கையும்கூடத் திருமாலை வழிபடாவிட்டால் அழிந்துபோகும் என்பது நம்மாழ்வார் கருத்து. 9.1.9-36.

பசுகு பசுகு என்றிருத்தல் - பசுமையாக இருத்தல். திருவரங்க நாதன் திருக்கழுத்து, கமுகக் கன்றின் கழுத்துப் போலே பசுகு பசுகென்று இருக்கின்றது. அம. 6, அழகு.

பட்டி புகுதல் - கண்ட இடத்தில் திரிதல். பட்டி போதல் என்றும் வருகின்றது. இந்திரியங்கள் சிற்றின்பப் பொருள்களில் பட்டி புகாதபடி நியமித்தல் அரிய செயலாகும். 4.7.9-21.

பட்டோலை எழுதச் சொல்லல் - ஏட்டில் எழுதச்சொல்லல். நம்மாழ்வார் திருவாய்மொழி அருளிச் செய்கிறபோது தம்மைப் பட்டோலை எழுதச் சொன்னார் என்கிறார் மதுரகவிகள். க.நு.சி. 4, அழகு.

படவடித்தல் - துன்புறுத்தல். வெறும்புறத்திலே படவடிக்கவல்ல கையிலே பெருமான் அழகு நிறைந்த சுரியையுடைய சங்கினையும், பகையினை அழிக்கும் சக்கரத்தினையும் தாங்கினான். அம. 7, பெரி.

படிவிடல் - வாழ்வு நல்கிடல். நித்திய சூரிகளுக்குப் படிவிடும் வடிவத்தைப் பெருமான் மதுரகவியாழ்வாருக்குக் கொடு வந்து காட்டினான். க.நு.சி. 3, அழகு.

படுகாடு கிடத்தல்* - வீழ்ந்து கிடத்தல். விண்ணோர், திருநாட்டின் மேன்மையையும் திருமலையில் நிற்கிற நீர்மையையும் ஒரு போகியாகத் துய்த்துக்கொண்டு விடாதே வேங்கடத்தில் படுகாடு கிடக்கிறார்கள். 1.8.3-24.

படுகுலையடித்தல் - படுகொலையடித்தல் என்றும் வருகின்றது. 9.6.0-36. பெரிதும் வருத்துதல் என்பது பொருள். பெருமான் நோக்காதே படுகுலையடிக்கிலும் விடப் போகாத அழகிய தோள்களை உடையவன். பாவை, 4-6. கிருட்டினன் பெண்களைப் படுகுலையடிப்பவன். பாவை, 12-3.

படைக்குறி காணல் - சேனைச் சோதனை காணல். சக்கரவர்த்தி திருமகன், இராவணனை அழித்துப் படைக்குறி காணுமளவில் வானரங்களில் சிலரைக் காணாதொழிய இந்திரனைக் கொண்டு அவர்களைப் பெற்றுக் கூட்டிக்கொண்டு போனான். 3 6.8-36.

படையற்றனவாதல் - வலிமையற்றனவாதல். நம்மாழ்வார் தமக்கு உறுப்பாய் அமைந்து தம்மைப் பகைத்த ஐம்பொறிகளும் இறைவனிடத்தில் படையற்றன என்கிறார். 2.7.9-36.

படையறுத்துக் கொள்கை - தன்வயமாக்கிக் கொள்ளல். தலைமகள் தன்னால் தூதுவிடப்பட்ட தன் நெஞ்சைத் தலைமகன் படையறுத்துக் கொள்கைக்காகக் கொண்டாடினான் என்றும் அதனால் அது மயங்கி அவன் வழிநின்று தன்னை மறந்துவிட்டது என்றும் கூறுகின்றாள். தி.வி. 30.

பண்செய்து ஏறுதல் - வாகனத்தை அலங்கரித்தல். யானையின் துயரக்குரல் கேட்ட பெருமான் பெரிய திருவடியைப் (கருடனை) பண்செய்து ஏறப்பெறாதே வெறும்புறத்தே மேற்கொண்டு விரைந்து மடுவின் கரைக்கு வந்தான். 6,2.0.36.

பணிபோரும்படியான* - மற்றவற்றில் கருத்தின்றி ஈடுபட்டிருக்கும் படியான. திருமகள், திருமாலுக்குத் தன்னோடே பணிபோரும்படியான இன்பத்தையுடையவள். பெ.தி.2.6.2. இவ்வுலக மக்கள் ஐம்புல இன்பங்களில் விழைவுடையவராய் அவற்றோடே பணிபோந்திருப்பார்கள். 10.6. 0-36.

பணிமாறல் - படைத்தல். யானை, பூவின் செவ்வியழியாதபடி இறைவன் திருவடிகளிலே பணிமாற வேண்டுமென்று இடர்ப்பட, அதுபட்ட துயரை அவன் களைந்து காத்தான். பெ.தி.2.3.0.

பணியுடைத்தாதல் - தொல்லையுடைத்தாதல்; அரிய செயலாதல். திருநாட்டில் பேற்றினைத் துய்க்கும் நிலையினைக் கொடுக்கவல்லவனுக்கு இவ்வுலகில் தன்னையொழியச் செல்லாமை விளைக்கை பணியுடைத்தன்றிறே. 7.5. 1-36.

பத்தும்பத்தாக* - முழுமையாக. பெருமாள் பத்தும்பத்தாக அம்பால் எதிர்த்துப் பிராட்டியினுடைய கலவிப்பகையைப் போக்கினார். திருவெழு.அடி, 6.

பத்தெட்டுத் திருமுகம் மறுக்கப்பெறல் - சிலமுறை இசைவு மறுக்கப்பெறல். நந்தகோபனது கோயிற்காப்போன் பெண்களிடம் தான் கண்ணனால் பத்தெட்டுத் திருமுகம் மறுக்கப் பட்டுள்ளதாகக் கூறி அவர்களை உள்ளே விட முதலில் மறுக்கிறான். பாவை, 16-6.

பதண் பதண் எனல் - தவிர்த்தல். கைப்பட்ட மாணிக்கத்தைக் கடலிலே பொகட்டோம் என்று பதண்பதண் என்றான். பெரி.தி.4.9.6.

பயலான பேச்சு - குறிப்பான பேச்சு. தலைமகள், சுனையாடல் என்றும் புனலாடல் என்றும் கலவிக்குப் பேராகையாலே தோழியைப் பார்த்து 'அணியரங்கமாடுதுமோ தோழீ' என்று பயலான பேச்சாலே கேட்டாள். தி.நெ.தா. 21,பட்டர்.

பரப்பு மாறப் பூத்தல் - எங்குமொக்கப் பூத்தல். பொய்கையின் பரப்பு மாறத் தாமரை பூத்துக்கிடந்தது. பெரி.தி.3.8.1.

பரகு பரகு எனல் - பரபரப்பு. நம்மாழ்வார், தம்மையே பெருமானுக்காக்கி அதனால் தம் திருவுள்ளத்தில் பரகுபரகு கெட்டதாகத் தெரிவிக்கிறார். 4.3.3-24.

பருப்பருத்தன சில - முதன்மையான சில. பெண்கள் கண்ணனிடம் தமக்கு வேண்டியவற்றுள் பருப்பருத்தன சிலவற்றைச் சொல்லி மற்றவற்றை நீயே அறிவாய் என்கின்றனர். பாவை, 27-3, 6.

பல்காட்டல் - இரத்தல். தலைமகள் புள்ளினங்களிடம் முகில் வண்ணன்பால் தன் நிலையை உரைக்குமாறு பல்காட்டு கிறாள். 6.8.1-36.

பல் பன்னிரண்டுங் காட்டல்* - கெஞ்சுதல். பெண் வண்டின் ஊடலைத் தீர்க்க ஆண்வண்டு எல்லா முறைகளையும் பின்பற்றிப் பல் பன்னிரண்டுங் காட்டினவிடத்திலும் அதனால் இயலாமற்போக மாதவிப் பந்தலில் சென்று அதனை வரவழைக்க இசைமுரலத் தொடங்கிற்று. பெ.தி. 3.1.2.

பலகை பலகையாக - பல பெருங் கூறுகளாக. பிரிவுத் துயரத்தால் முன்பே இற்றிருக்கும் உடம்பைத் தென்றற்காற்றுப் பலகை பலகையாக ஈராநின்றது. 9.9.1-36.

பழங்கதை சொல்லல் - பழைய செய்தி சொல்லல். பெருமான் தன்னைச் சார்ந்தவர்க்கு விரைந்தருள் செய்வான் என்பது பழங்கதை சொல்வதாகும் என்றும் அவன் தானே வந்து தம் நெஞ்சில் புகுந்தான் என்றும் திருமங்கையாழ்வார் தெரிவிக் கிறார். பெ.தி.5.2.1.

பாசுரமிட்டுப் பேசல்* - சொற்கொண்டு கூறல். இறைவன் பண்புகள் பாசுரமிட்டுப் பேசி முடிக்க வொண்ணாத சிறப் புடையனவாகும். 1.3.9-24.

பாடோடிக் கிடத்தல் - திரும்ப மாட்டாதே ஒரு பக்கமாகவே படுத்துக்கிடக்கை; செயலற்றுக் கிடத்தல். நம்மாழ்வார் நெஞ்சம் 'நெடியானேஎ' என்னும் சொல்லிலேயே ஈடுபட்டு எல்லாவற்றையும் மறந்து பாடோடிக் கிடக்கிறது. 3.8.1-36. தலைமகள் தான் பாடோடிக் கிடப்பதாகக் கூறித் தங்கள் வாழ்வைத் தாங்களே பார்த்துக் கொள்ளுமாறு வண்டுகளிடம் தெரிவிக்கிறாள். 6 8.4-36.

பாத்தம் போராத விஷயம் - பயனற்ற பொருள். திருமாலுக்குக் கௌத்துவமணி போல விரும்பத் தக்காதாயிருக்கும் உயிர், பாத்தம் போராத விஷயங்களைப் பற்றிச் சண்டையிட்டுப் பிறவியுள் பிணங்குவது வருந்தற்குரியதாகும். தி.மா.4.

பாத்தம் போரும்படியான விஷயம் - பயனுள்ள பொருள்; தக்க பொருள். திருமங்கையாழ்வார் புலவர்களை நோக்கிப் "புலவர்களே, உங்கள் அறிவுக்கும் சொல்லுடைமைக்கும் பாத்தம் போரும்படியான விஷயம் குடந்தையில் எழுந்தருளி யிருக்கும் ஆராவமுதனே யாவான்" என்கிறார். பெ.தி.1.1.7.

பாலி பாய்தல் - பிரிந்து செல்லல். திருமால் தன் அருள் நோக்கத்தைத் தான் வெள்ளத்தினின்றும் மீட்டப் பூமிப் பிராட்டி பக்கலிலும் பாலிபாயாதபடி உயிர்கள்மேல் ஒருங்க வைத்தான். தி.வி.44.

பாழ் தீரப்புகுதல் - வெற்றிடமின்றிப் புகுதல்; குறைவற நிறையப் புகுந்தல். பெருமான் தன்நெஞ்சில் பாழ்தீரப் புகுந்தான் என்கிறார் நம்மாழ்வார். 10.8.1-24.

பாற வடித்தல் - அழித்தல். நம்மாழ்வாரின் பார்வை மதுரகவி யாழ்வாரின் பழவினைகளைப் பாற வடித்தது. க.நு.சி.9, அழகு.

பாறிப் பாறிப் போம்படியாக - சிதறிச் சிதறிப் போதல். அசுரர் கூட்டத்தைப் பாறிப்பாறி நீறெழுந்து போம்படியாகச் செய்யும் கருடனைத் திருமால் தனக்கு வாகனமாகக் கொண்டுள்ளான். 2.6.8-36.

பிசுகிச் சுழிதல் - மெல்லச் சுற்றி வருதல். தலைமகள், பெருமானது வாகனமாகிய கருடன் உகந்தார் வாழும் வண்ணம் வாராமல் பிசுகிச் சுழிவதாகக் குறை கூறுகிறாள். 1.4.6-36.

பிசுகு நாறாதே இருத்தல் - பசை ஒட்டிக் கொள்ளாதிருத்தல். இறைவனாகிய கரும்பு கைதொட்டால் பிசுகு நாறாதே இருக்கும் இனிமையான பொருளாகும். தி.மா.17.

புடைபடுத்தல் - விரிவுபடுத்தல். கலவியாலும் பிரிவாலும் பெருமான் ஆழ்வாரது நெஞ்சைப் புடைபடுத்தித்

திருநாட்டைப் போலப் பரப்புடைத்தாம்படி பெருக்கினான். 5.3.4-36.

புதைத்து வார்ப்பது - சிறிய அளவினதாய்ப் பிறரறியாதவாறு ஒளித்து வருவது. இறைவன் அடியாக வரும் சிறப்புப் புதைத்து வார்ப்பது அன்று; மிக்குப் பெருகுவதாகும். பெரி.தி. 5.4.1.

புறவீடு விட்டிருத்தல் - பிறிதோர் இடத்தில் இருத்தல். பெருமாள், திருவரங்கப் பெருமாளரையர் திருமாளிகையிலே புறவீடு விட்டிருக்குங்கால் உடையவர் ஆழ்வானைச் சென்று கண்டு அவருடைய கவலையை வினவினார். பெரி.தி.4.4.7.

புறவெள்ளமிட்டபடி - வெளியில் மிகுதியாகப் தோன்றியபடி. சீதை, அரக்கர்களோடு போரிட்டு ஒரு தீங்குமின்றி மீண்ட இராமனுடைய வடிவழகை முழுக்கக் கண்டு திருவுள்ளத்திற் பிறந்த களிப்புப் புறவெள்ளமிட நின்றாள். தி.நெ.தா. 21,பட்டர்.

புஸ்தகம் பார்த்தறிதல் - படித்தறிதல். திருக்கண்ணபுரத்து மறையாளர் புஸ்தகம் பார்த்தறிந்தவரல்லர்; கேள்வி வாயிலாகவே கற்றவர்களாவர். பெ.தி.8.1.8.

பெரிய பணி - அருஞ்செயல். பூமியைப் பாதுகாத்த பெருமானுக்குத் தம்மைக் காத்தல் பெரிய பணியன்று என்கிறார் திருமங்கையாழ்வார். பெ.தி.5.3.5.

பெருநிலை நிற்றல் - ஒரு சார்பாய் நிற்றல்; துணையாய் நிற்றல். கண்ணபெருமான் பகலை இரவாக்குகைக்குப் பெருநிலை நிற்கும் கருவியாய் அமைந்தது திருவாழியாகும். 3.7.2-36.

பெருமிடறு செய்து கூப்பிடுதல் - உரத்த குரலில் கூப்பிடுதல். தொண்டரடிப்பொடியாழ்வார் பேற்றில் கொண்ட துடிப்பாலே பெரிய பெருமாள் கண்வளர்ந்தருள அரிதாம்படி கேட்டாரெல்லாம் நீராம்படி பெருமிடறு செய்து கூப்பிடுகிறார். தி.மா.36.

பொதியெடுத்தல் - ஆட்சி செய்தல். நம்மாழ்வார் ஆசைமிக்க தம் நெஞ்சை ஐம்பொறிகளும் பொதியெடுக்கத் தொடங்கின என்கிறார். 8.7 2-36.

போக்குவிடுதல்* - வழியமைத்தல். கண்ணன் தயிரையுண்டு மகிழ்ச்சி கொண்டு அம்மகிழ்ச்சிக்குப் போக்கு வீடாகக் குடக் கூத்தாடினான். பெ.தி.5.10.1.

போது செய்வது - குறைவது. போது செய்யாத வரபலத்தை யுடைய அரக்கர்கோனாகிய இராவணனைப் பெருமாள் வென்றார். தி.நெ.தா.29.

போரப் பொலிய* - சிறப்பாக. கண்ணன் எளிதாகச் சகடனை உதைத்து அழித்த செயலை நம்மாழ்வார் போரப் பொலியச் சொல்லுகிறார். 6.4.4-36.

மசக்குப் பரலிடலாம்படி - நிகரென்று ஐயுறும்படி. சிவனும் பிரமனும் இந்திரனும் திருமாலொடு மசக்குப் பரலிடலாம்படி இருக்கின்றனர். 3.1.7-36.

மல்கட்டாகக் கட்டல் - திமிறிச் செல்லாதபடி கட்டல். கண்ணன் நப்பின்னைப் பிராட்டியை மல்கட்டாகக் கட்டிக்கொண்டு போய்ப் படுக்கையில் விழவிட்டான். பாவை,19-6.

மறுகிளையுண்டாகாதபடி - மீண்டும் தோன்றாதபடி; மறுகிளை யறும்படி. பெருமான், நரகபுரம் சென்று திருவாழியாலே அங்கிருந்தவர்களை மறுகிளையுண்டாகாதபடி அறுத்துப் பொகட்டான். பெரி.தி.2.5.6.

மறுநனையும்படியான - குடைந்தாடும்படியான, தோய்ந்து திளைக்கும்படியான. நம்மாழ்வார் இறைவன் பண்புகளில் மறுநனைந்து, களிப்புமிக்கு, உள்ள நோய்களையெல்லாம் விரட்டியதாகச் சொல்லுகிறார். 2.6.4-36.

மறுநாக்கெடுத்தல் - மீண்டும் பேசவொண்ணாதபடி. கண்ணன் தன்னைக் குறைகூறிய ஒரு தாயினிடம் மறுநாக்கெடுக்க வொண்ணாதபடி சில சொற்கள் கூறினான். பெரி.தி. 2.9.10.

மறுநாக்குக் கொடுத்தல் - மீண்டும் பேசுதல். கண்ணன் இள வாய்ச்சியர்க்கு மறுநாக்குக் கொடுக்க வொண்ணாதபடி வேறொருவர்க்குந் தெரியாதே அவர்கள் கண்ணுள்ளே படும்படியாக விடவே பண்ணி நோக்கி அடிமை கொண்டான், 1.7.5-9.

மறுபாடுருவும்படியாக* - ஆழமாக மறுபுறத்தில் ஊடுருவும் படியாக. மற்றொரு பக்கம்வரை செல்லுபடியாக என்பது நேர்ப்பொருள்; முற்றிலும் என்பது குறிப்புப் பொருள். பெருமாள் மராமரங்கள் ஏழும் மறுபாடுருவும்படியாக அம்பினைச் செலுத்தினார். 2.6.9-36. நெஞ்சம் கோட் பட்டாயே - நெஞ்சு பறியுண்டாயாகாதே? தோற்புரை யன்றிக்கே மறுபாடுருவ நோவு பட்டாயாகாதே. 2.1.1-24. நம்மாழ்வார் வேதங்களும்கூடச் சொல்லமுடியாது என்று மீண்ட தன்னைக் குறித்து மறுபாடுருவ ஏத்தி மகிழும் பேற்றினை இறைவன் தமக்கு வழங்கினான் என்கிறார். 2.6.3-36. தலைமகள் மாற்று இல்லையென்று மீளும்படி மறுபாடுருவக் கொண்ட நோய்க்கு இறைவன் திருவடிகளை வாழ்த்தலே அருமருந்தாகும் என்கிறாள் தோழி. 4.6.3-24.

மறுமுட்டுப் பெறாதபடி* - பிறிதோர் ஊன்றுகோலில்லாதபடி; பிறிதோர் சார்பு இல்லாதபடி. பரகால நாயகி இறைவன் தன்னை மறுமுட்டுப் பெறாதபடி தனக்கு அடிமையாக்கிக் கொண்டான் என்கிறாள். பெ.மடல்,கண்ணி, 133.

மறுவலிடாதபடி - மீண்டும் வாராதபடி. பாற்கடற் பரமனை வாழ்த்தினால் தீவினைகள் மறுவலிடாதபடி முற்றிலும் அழியும். தி.ச.வி.74.

மின்மினி பறவா நிற்றல்* - கண்கள் வெறித்துப் போதல். அரவின் அணைமிசைப் பள்ளிகொண்டுள்ள அரங்கனின் அலையெறி யும் அழகு, கண்டார் கண்களை மின்மினி பறக்கச் செய் கின்றது. அம.7, அழகு.

முகம் காட்டுதல் - தோன்றுதல். போரிடும்போது தன்னைப் பேணாமல் போரிட்ட பெருமாளுக்கு அது முடிந்தவாறே மன்னன் மகனாய்ச் செல்லப் பிள்ளையாய் வளர்ந்த மென்மை வந்து முகங்காட்டிற்று. பெ.தி.1.2.1.

முகங்காட்டுவித்துக் கொள்ளல் - வரவழைத்தல். தன் தன்மையை அழித்துக் கொண்டேனும் பெருமானை முகங்காட்டுவித்துக் கொள்ளவேண்டும் என்னும் துடிப்பு உடையவளானாள் பரகால நாயகி. சி.மடல்,0.

முகங்கொடுக்கை - காட்சி தருதல்; அருள்புரிதல். இறைவன் தாழ்ந்தார்க்கு முகம் கொடுக்கைக்காக இடைக்குலத்தில் வந்து பிறந்தான். தி.ச.வி.9-.

முகம் பழகின - உடனிருந்து பழகின. நெடுங்காலம் முகம்பழகிய உடம்பை விட்டுப்போய் வீடு பெற்றார்கள். பெ.மடல், கண்ணி,37.

முட்டச் சொல்லுதல் - முற்றிலும் சொல்லுதல். திருநாமத்தை முட்டச் சொல்லமாட்டாள் என்று நினைத்திருந்தபோது தலைமகள் அதனை வருத்தமறச் சொன்னாள். 6.5.4-36.

முட்டுப் பொறுத்தல் - ஈடுகொடுத்தல். சிவன், பிரமன் ஆகியோரோடு ஒக்கச் சொல்லலாம்படி முட்டுப் பொறுத்து நிற்கிறான் இந்திரன் என்பர். 7.6.7-24, 36.

முலைவரவு தாழ்த்தல் - குழந்தைக்குப் பால் கொடுக்கக் காலதாமதம் ஆதல். கண்ணன் முலைவரவு தாழ்க்கச் சீறி நிமிர்த்த திருவடிகளாலே சகடத்தை முறிய உதைத்தான். பெரி.தி.3.8.6.

முழுமிடறு செய்து கூப்பிடல் - உரத்த குரலில் கூப்பிடல். தலைமகள் பெருமானை முழுமிடறு செய்து கூப்பிட்டு மயங்கித் தரைப்பட்டாள். தி.நெ.தா.17.

முழுமிடறு செய்தல் - மிடறு நிறையக் குடித்து நுகர்தல். நம்மாழ்வார் இறைவன் குணங்களை முழுமிடறு செய்து துய்த்துக் களித்தார். 2.3.9-36.

முறியக் கடிக்கும் - சுரீர் என்று கடிக்கும். கட்டெறும்பு முறியக் கடிக்கும். பெரி.தி.2.4.2.

முறுகு கொளுந்துகை - உறுதியாதல். பிறர் யாது சொன்னாலும் மீளாத முறுகு கொளுந்தின இறையன்பினையுடையவர்களைத் தீவினைகள் யாது செய்யும்? தி.வி.88.

முறை முதுகு தேய்த்தல் - ஒருவர்க்கொருவர் உதவிக்கொள்ளல். தம்மையும் தம்முடைமையையும் நமக்காக்கின திருப்பாணாழ்வாருக்கு நம்மையும் நம்முடைமையையும் அவர்க்காக்கின் முறை முதுகு தேய்த்தோமாவோம் என்று இறைவன் கருதி எல்லாம் செய்தும் தான் ஒன்றும் செய்யாதவனாக இருந்தானாம். அம.5,அழகு.

முன்கை மிடுக்கு - வலிமை. முன்கை மிடுக்காலே தோற்றினபடி திரிந்த அரக்கர்களை இராமன் மெலிவித்தான். பெ.தி. 2.5.7.

முன்னோட்டுக் கொள்ளல் - முதலில் கொள்ளல். "காலை வெய்யோற்கு முன்னோட்டுக் கொடுத்த கங்குல் குறும்பர்" தி.வி.94. நம்மாழ்வார் அவதாரங்களை முன்வோட்டுக் கொண்டு, கிருட்டினாவதாரத்தில் இழிந்து வெண்ணெய் களவு கண்ட நிகழ்ச்சியில் ஈடுபட்டார். 1.3.0-36.

மூக்குப் புதைத்தல் - காற்றினை அடக்கி. வழிபாடு செய்தல் (தவம்செய்தல்). மண்ணுலகில் யாரேனும் மூக்குப் புதைத் தால் தன் இன்பத்திற்கு இடர் வந்ததாகக் கருதி அவனது தவத்தைக் கலைக்க முயல்பவன் இந்திரனாவான். 6.4.1-36.

மூலையடியே நடத்தல் * - இது மூலையடியே திரிதல் என்றும் வருகிறது. பெ.தி.1.6.3; 4.9.5-24; 7.7.4-36; பாவை, 17-6. விருப்பப்படியே நடத்தல் என்பது பொருள். விருப்பப்படி திரிதல். நந்தகோபர் மூலையடியே திரியும் பிள்ளை ஒருவனைப் பெற்றார். 7-7.4-36.

மூலையடியே வளருகை - கண்டபடி வளருகை. கண்ணன் வெண்ணெயையும் பெண்களையும் களவுகண்டு மூலையடியே வளர்ந்தான். மு.தி.21. பெரிய பெருமாளைக் கண்டால் யசோதைப் பிராட்டி வைத்த வெண்ணெயைக் களவுகண்டு அமுதுசெய்து மூலையடியே திரிந்து வளர்ந்த செருக்குத் தோற்றும். தி.மா.32.

மூலையடியே போம்படி - பாழாய்ப் போம்படி. பெருமாள் இலங்கையை மூலையடியே போம்படி பண்ணினான். தி.பல்.3.

மெய்க்காட்டுக் கொள்ளல் - ஆள்களை நேரில்கண்டு எண்ணிப் பார்த்தல். இந்திரன், சனியும் புதனும் தேவர்களை மெய்க்காட்டுக்கொண்டு அவர்களின் மிகுதி குறைகளை ஆராய்வான். 3.6.4-24. கண்ணன் தம்மை மெய்க்காட்டுக் கொள்ளும் குறியிடங்கள் ஏறப் பெண்கள் போனார்கள். பாவை, 13-6.

மேல்விழுதல் - விரும்புதல். அரசகுமரன் தன் செருக்காலே வேட்டைக்குத் துணைபுரியும் என்னும் எண்ணத்தால் நாயினை மேல் விழுதல் புரிவான். பெ.தி.1.9.1.

மொசுகு மொசுகு என்றிருத்தல் - மெத்தென்று இருத்தல். சங்கின் ஒலிபோல் பெருமானது குரல் மொசுகு மொசுகு என்றிருக்கும் என்பர். அம.6, அழகு.

வகாதது வகுத்தல் - கிடையாதது கிடைத்தல். நம்மாழ்வார் தம் நெஞ்சை நோக்கி, "பெற்ற பேற்றின் கனத்தை நினைத்து வகாதது வகுத்ததென்று திமிர்த்திருக்கிறாயோ? அன்றி இதனை நுகர்கின்றாயோ?" என்று வினவுகிறார். 10.6.2-36.

வரை முறுகலான - கடினமான. வரைமுதலான ஸ்ரீகீதை சொன்னவன் கண்ணன். க.நு.சி.8, அழகு.

வழிப்பகையாய் இருத்தல் - குலப்பகையாய் இருத்தல்; "பார்த்த விடம் எங்கும் பகை"யாய் இருத்தல் என்பது அரும்பதம். பிராட்டிக்கு அன்றில், கடல் முதலான பொருள்கள் வழிப்பகையாய் இருந்தன. தி.வி.35

வாங்கிப் பொகடல் - கழற்றி எறிதல். இரணியனுக்கு அஞ்சித் தேவர்கள் தம் முடியும் வாங்கிப் பொகட்டு மானிடராய் வேற்றுருக்கொண்டு திரிந்தனர். பெ.தி.1.2.4.

வாய்க்க அடியிடுதல் - பொருத்தமாக ஆடுதல். கூத்தாடுமவர்கள் வாய்க்க அடியிட்டால் அவையினர் தம் முகமலர்ச்சியாலே கொண்டாடுவர். பெ.தி.1.5.9.

வாய்பாறி(க்கொண்டு) வருதல் - அரற்றிக்கொண்டு வருதல். பகைவனாய் வாய்பாறி ஊரையழிக்க வந்த கேசியை எளிமையாக இருகூறாகப் பிளந்து அழித்தான் கண்ணன். தி.ச.வி.37.

வாய்மாளப் பண்ணல் - வாயடைக்கப் பண்ணல். மாவலியைக் குறளனாய் வந்த பெருமான் தன் வடிவழகாலும், பேச்சழகாலும் வாய்மாளப் பண்ணினான். 3.8.9-36.

வாய்வாய் எனல் * - பேசாதே என்று பணித்தல். தங்களுக்கு மாற்றம் தரக்கோரிய பெண்களுக்குப் பதில்கூறக் கண்ணன் முயன்ற போது நப்பின்னை தன் கண்ணாலே "வாய்வாய்" என்று வாயை நெரித்தாள். பாவை, 19-3,6.

வாய்விடுதல் - வெளிப்படையாகச் சொல்லுதல். திருமந்திரத்தில் குறிப்பாகச் சுட்டப்பெறும் திருமகள் தொடர்பினை "உலகமுண்ட" திருவாய்மொழியில் வாய்விடுகிறார். 6.10.0-36.

வாயிலே இட்டு நீட்டுகை - சொல்லியனுப்புதல். தலைமகள், தலைமகனுடைய இயல்பினை ஓராளின் வாயிலே இட்டு நீட்டுகை யன்றிக்கே அவனே நேரில் சொல்லக் கேட்டறிந்த தாகக் கூறுகிறாள். பெ.தி. 9.3.4.

வாரிப்பிடியாகப் பிடித்தல் - தப்பிப் போகாதவாறு சிக்கெனப் பிடித்தல். இறைவன் மண்ணுலகில் தோன்றித் தன் வடிவழகாலும் எளிமை முதலான பண்புகளாலும் எல்லோரையும் கவர்ந்து வாரிப் பிடியாகப் பிடித்துக் கொண்டு போகும் ஆற்றலுடையவன் ஆவான். பாவை, 0-3.

விலை செல்லல் - எடுபடுதல். பெருமானிடம் ஊடிநிற்கும் மடவார், அவனை நோக்கி அவன் பொய்யிலே பழகின தங்கள்பக்கல் அவனது பொய் விலை செல்லாது என்று கூறினர். 6.2.3-24.

விளாக்குலை கொள்ளல் * - சூழ்ந்து கொள்ளல்; உள்ளடக்கிக் கொள்ளல். பெருமான் திருவடிகளில் ஒன்றே பூமிப் பரப்படங்கலும் போய் விளாக்குலைகொண்டது. க.நு.சி. 8,நம்பிள்ளை. விள்ளாக்கொலை கொள்ளல் என்றும் சில இடங்களில் வருகின்றது. தி.நெ.தா.24; தி.வி.58;59; பெ.திருவந்.2; பெ.தி.9.3.2.

வீசிவில்லிட்டெழுப்புதல் - வலிந்து எழுப்புதல். படுக்கை வாய்ப் பாலே வீசி வில்லிட்டெழுப்பினாலும் எழுந்திராதபடி பெருமான் படுத்துக்கிடக்கிறான். தி.நெ.தா.12.

வெள்ளமிடல் - பெருகுதல். தலைவிக்குக் கண்ணீர் வெள்ளமிடா நின்றது. 4.4.2-36.

வெளிநாடு காண உமிழ்தல் - வெளியே உமிழ்தல். பெருமான் ஊழிவெள்ளம் கொள்ளாதபடி பூமியை எடுத்து வயிற்றிலே வைத்துப் பின்பு வெளிநாடு காண உமிழ்ந்தான். 9.3.2-36.

# 9. பழமொழிகள்

அம்மிதுணையாக ஆறிழிகை - 2.7.3-6. அம்மியைக் கட்டிக் கொண்டு ஆற்றில் இழிவாரைப் போலே - பெ.தி.1.1.8.

ஆடி அமுது செய் - பாவை, 27-6. ஆயிரக் காதம் பறப்பதன் குட்டி ஐந்நூறு காதம் சிறகடிக் கொள்ளும் - 1.10.1-36. ஆற்றிலே கெடுத்துக் குளத்திலே (தேடுகிறாள்) தேடுதல் - தி.நெ.தா.18. ஆனை தன் பலம் அறியாதாப் போலே - பெரி.தி.5.3.6. ஆனைக்கும் தனக்குத் தக்க வாதமிறே-2.2.2-36. ஆனைப் பிணங்களைக் குதிரை சுமக்கவற்றோ - 8.4.10-24. ஆனைப் பண்ணைக் குதிரை சுமக்கவற்றோ - நா.தி.8.3. இஞ்சிப் பயிரில் தழைக் கூறு கொள்வாரைப் போலே - 1.7.10-24.

உண்டார் மேனி கண்டால் தெரியுமிறே - பெரி.தி.4.4.2. உண்டி உடல் காட்டும் - 5.10.6-36. உண்ணப் புக்கு வாயை மறைப்பாரைப் போலே - தி.வி.15. உண்ணாப் பிள்ளையைத் தாய் அறியும் - பெரி.தி.2.2.1. உப்பறியா மூழை - பெரி.தி.3.7.4. உழக்காலே கடலை முகக்க ஒண்ணாதாப் போலே - 3.10.10-36. ஊண் அடங்க வீண் அடங்கும் - நா.தி.12.9.

எருது கெடுத்தார்க்கும் ஏழே கடுக்காய் - தி.வி.42. ஏற்றி வைத்து ஏணி வாங்கி (வாங்குதல் போலே) - பாவை, 2-6.

ஒருவனைப் பிடிக்கைசுட்டி ஒரூரை வளைப்பாரைப் போலே - 6.3.1-24. ஒருவனை அகப்படுத்த நினைத்தார் ஊரை வளையுமா போலே - 6.3.1-36. ஒட்டை ஓடத்தோடே ஒழுகல் ஓடம் - 3.7.0-36. ஓலை பாதி தூது பாதி - தி.வி. 29.

கடல் வெதும்பினால் விளாவ நீரில்லை - 2.2.0-36. கடலிலே வர்ஷித்தாற்போலே - தி.நெ. தா.20. கண்ணாலப் பெண்டாட்டிக்கு உண்ண அவஸரமில்லை என்னுமா போலே 3.2.8-36. சரணம் தப்பினால் மரணம் - பெ. மடல், கண்ணி, 19. கரணம் பிழைக்கில் மரணம் - தி.மா. 25. கரதலாமலகம் போலே

(உள்ளங்கை நெல்லிக்கனி) - 6.9.11-9. கரும்பு தின்னக்கூலி போலே - 1.6.8-24, 36. கரும்புதின்னக் கூலி கொடுப்பாரைப் போலே - 9.1.8-24,36. கள்ளரச்சம் காடு கொள்ளாது - 4.10.2-36. குளப்படியிலே கடலை மடுத்தாற் போலே - 4.5.5-24. கைப்பட்ட வஸ்துவைக் கடலிலே பொகட்டாற் போலே - தி.நெ.தா. 21. காட்டில் எறித்த நிலா(ப் போலே) - 3.10.8-24, 36; 4.5.2-24; 7.2.7-36; தி.ச.வி. 0. காந வித்யைக்கு தும்புரு நாரதர் - பெரி.தி. 3.6.5. கோமுகவ்யாக்ரம் (பசுத்தோல் போர்த்த புலி) - தி.வி. 27.

தாமே விழுந்தாரைத் தடிகொண்டு அடிக்குமோபாதி - 3.6.0-36. தீநாள் திருவுடையாருக்கு இல்லை - 4.3.4-36. (இது பழமொழி நானூற்றில் வருவது). நீர்மேலெழுத்து தி.மா. 42. நெற்செய்யப் புல் தேயுமா போலே - 5.2.4-36. பைதல் கைசு; நோய் முக்கைசு (பையலொரு சிறாங்கை; நோய் மூன்று சிறாங்கை) - தி.வி. 96. போம்பழியெல்லாம் அமணன் தலையோடே - 1.5.5-36. மறக்குடி அறம் செய்யக் கெடும் - 5.3.4-36. முழங்கால் தகரமூக்கிலே ஈரச்சீலை கட்டுமா போலே - 4.6.10-36. முள்ளாலே முள்ளைக் களையுமா போலே - பெரி.தி. 2.5.4. மூலையிற் கிடந்ததை முற்றத்திலே விட்டோம் (விட்டாற் போலே) - தி.வி. 99.

வாத்ஸல்யத்தாலே செய்ததுக்கு வழக்குப் பேசக் கடவோமோ - தி.நெ.தா. 14. வாளேறு காணத் தேளேறு மாயுமா போலே - 3.9.0-36. வேலியே பயிரை அழித்தால் வேலிதான் நோக்குமித்தனை ஒழியப் பயிராலே நோக்கிக் கொள்ளப்போமோ? (இதில் 'வேலியே பயிரை மேய்ந்தாற் போலே' என்னும் பழமொழி உள்ளோட்டமாக அமைந்திருத்தல் காணலாம்) - தி.நெ.தா. 11.

# 10. அருந்தமிழ்ச் சொற்களின் அகரவரிசை

அஃகம் - 1. உயர்ந்த பொருள். அஃகம் உண்ண இங்கே வருகையாலே. தி.நெ.தா.6. 2. உயர்ந்த தானிய வகை. நாட்டுக்கு இட்ட அஃகம் அந்தப் புரத்திற்கு அரிதாவதே? பெ.தி. 9.4.9.

அகஞ்சுரிகை - குன்றுகை. செய்த பாபம் அகஞ்சுரிப்பட்ட அளவிலே விட்டடிக்கவும் கூடுமிறே. பெ.தி.6.2.7.

அகம் - 1. உள்ளே. அகத்துக்குள்ளேயிருந்து - 5.3.4-36; 2. வீடு. நம் அகமொன்றும் பிழைக்கும் என்று. பெ.திருவந்.58.

அகப்படை - சொந்தமாக வைத்துக்கொள்ளும் படை. (personal Security) அருநிலங்களில் வழிபோவார் 'அகப்படை' என்று மிடுக்கராய் இருப்பாரைக் கூட்டிக்கொண்டு தம் கைப் பொருளை அவர்கள் கையில் கொடுத்து அமர்ந்த நிலத்திலே சென்றவாறே வாங்கிக்கொள்ளுவாரைப் போலே. 10.1.0-36.

அகப்பாடு - 1. அகப்படுதல். அகப்பாட்டை அறிந்திருந்தோமாகில் வாராது ஒழியலாயிற்று. 6.3.1-24. 2. சிக்குண்டிருத்தல். ஆசார்ய உபதேசத்தாலே வகுத்த விஷயத்தில் பனியிருங் குழல்களைக் கண்ணாலே காணாநிற்க, நெஞ்சு ஸ்த்ரீகள் பக்கலிலே ஆம்படியிறே அதில் அகப்பாடு இருப்பது. தி.மா. 33.

அகம்படி - உள்ளே. வானிளவரசு என்கிறபடியே அகம்படி வைத்த அரசாய் இருக்கும். 5.8.2-36.

அகம்படியர் - அணுக்கமான வேலைக்காரர். அவ்வவர்க்கு உரிய அகம்படியர் ஆனவர்கள். பாவை, 4-3.

அகலம் - பரந்த நோக்கம். எங்கள் மாமியார் தன் நெஞ்சில் உண்டான அகலத்தாலே, லோகத்துக்காக ரக்ஷகனாக வல்லான் ஒரு பிள்ளை பெறவேணும் என்று நோன்பு நோற்றுப் பெற்றார். 5.3.7-36.

அகவாய்* - 1. உட்புறம். அகவாய் சிவந்து புறங்கரியதாய். 2.9.1-9. 2. மனம். தமப்பனாரைக் கொண்டான் என்று அகவாய் பணைக்கும். பாவை, 25-6.

அங்கமணி - சீர்வரிசை. அங்கமணி செய்யலாவது ஏது என்று விசாரித்துக் கொண்டு. தி.மா. 37.

அங்காத்தல் - வாய் பிளத்தல். அங்காந்த வாயும் மோறாந்த முகமும். பெரி தி.4.8.8.

அங்காடி - கடைத்தெரு. அங்காடிப் பண்டங்கிடீர் எனக்கு அரிதாயிற்று. தி.நெ.தா.16.

அங்குத்தை - அங்குள்ள. அங்குத்தை ஸர்ப்பங்கள். பெ.தி. 1.2.8.

அச்சுத்தாலி - அச்சடித்த காசு கோத்த தாலி. அச்சுத்தாலியும் ஆமைத்தாலியும். பாவை, 7-6.

அசங்குதல் - அசைதல். அசங்காதே கிடக்கிறபடி. பாவை, 2-6.

அசல்* - அயல். இங்கே அசல் காக்க இருக்கிறவள். 6.7.2-36. அசலகம். பாவை, 15-3; அசலார். நான்.தி.51; அசலானேன். தி.மா.31; அசலிட்டு. 6.5.1-36.

அசலாள் - அயலாள். விருப்புக்கு அசலாளாய். 6.1.3-24.

அசலிட்டுக் கேட்டல் - பிறர் சொல்லக் கேட்டல். இவ் இருப்பை இவனுங் காணப்பெற்றது இல்லை, அசலிட்டுக் கேட்கும் இத்தனையிறே. தி.வி.2.

அசலூர் - வெளியூர். அசலூர்களிலே போய். பெரி.தி.3.1.9.

அசறு பாய்தல் - தண்ணீர் கசிதல்; புறவெள்ளமிடுதல். அசும்பு ஒழுக - அசறு பாய. பெரி.தி.5.4.8.

அசிர்ப்பு - அயிர்ப்பு. அசிர்ப்புப் பிறக்க இருப்போம் அல்லோம். பாவை, 0-3.

அசுக் காட்டல் - கேலி செய்தல். பசுக்கள் அசுக்காட்டும் ஆர்ஜவம். பாவை, 28-3.

அட்டாலை - கோட்டை மதிளின் மேலுள்ள மண்டபம்; மேல் தளம். அதின்மேலே மதிளும் அட்டாலையுமாய் இருக்கை. தி.நெ.தா.20.

அடக்கம் - அடங்கியிருத்தல். க்ருஷ்ணன் விரும்பாத அடக்கத்தால் ஒரு கார்யமில்லை. 4.8.3-12.

அடங்க* - எல்லாம். அடங்க பகவத் ப்ரஸாத லப்தம் என் கைக்காக. 1.1.0-36.

அடர்த்தல் - நெருக்குதல். அடர்த்து வார்த்தை 6.2.4-12.

அடி* - 1. தொடக்கம். அடியிலே நீர் அபேக்ஷித்தபடியே. 1.7.4-36. 2. காரணம். இந்த்ரன் அடியாக மழையாய் வந்த ஆபத்து. தி.மா.36.

அடிக்கழிவு - முறைகேடான செயல்; தரக்குறைவான செயல். எங்கள் குழமணன்கொண்டு அடிக்கழிவு செய்தால் உனக்கு என்ன ப்ரயோஜநம் உண்டோ? 6.2.6-9.

அடிக்கொள்ளல் - முற்படுதல். வண்டினுடைய திரள்களானவை பாடுகைக்கு அடிக்கொண்டு, "தென, தென" என்று ஆளத்தி வையா நிற்கும் அரங்கமே. பெரி.தி. 4.8.6.

அடிச்சி - அடியவள். இடைச்சிகளுக்கு அடிச்சிகளாய்ப் போருகிறவர்களும். பெரி.தி.2.9.8.

அடிச்சேரி - அடியார் வாழுமிடம்; சிற்றூர். அடிச்சேரியிலே வந்து புகுவதே. 6.7.1-36.

அடிப்பட்டிருத்தல் - வேர் வீழ்த்திருத்தல். நெடுநாள் ராஜ்யம் பண்ணினாரைப் போலே அடிப்பட்டிருக்கும் ஆயிற்று இருளும். பெ.தி. 1.2.8.

அடிப்பாடர் - உறுதியுடையவர். ஓர் அடிப் பாடர் அல்லீரே! பரப்பர்அன்றோ நீர். 6.2.6-24.

அடிப்பாடு - 1. வழி. நிலத்திலே தோய்ந்த மஹா மேகங்களானவை போன அடிப்பாடு ஆர்த்திருக்கும் ஆயிற்று. பெ.தி.1.9.4. 2. வரலாறு. உகந்தருளின நிலங்களுடைய அடிப்பாடு சொல்லுகிறது. தி.நெ.தா.6. 3. உறுதி நிலை. இதிறே உபாயத்தில் அடிப்பாடு. 6.3.3-36.

அடிமண்டி - அடியில் உள்ள பொருள். சேறு, அடிமண்டியோடே கலங்கி. 2.4.0-24.

அடிமைச் சுவடு- அடிமையாய் இருத்தலின் சுவை. உம்முடைய திருவடிகளில் அடிமைச் சுவட்டை அறிவித்து போகட்டீர். பெ.தி.4.9.7.

அடியர் - அடியவர். இடையர்க்கு அடியராய்ப் போருகிற. பெரி.தி.2.9.8.

அடியாட்டி - வேலைக்காரி. கூனியாகிற அடியாட்டியானவள் திருவபிஷேக மஹோத்ஸவத்துக்கு அழிவான துர் உக்தி களைச் சொல்ல. பெரி.தி.4.8.4.

அடுக்குரு - திருவாராதனத்தில் இடம்பெறும் ஒரு பொருள். உடைவாளும் அடுக்குருவும் எடுத்தல். பாவை, 29-6.

அடுகு வளம் - உணவு. அடுகவளம் என்பதன் சிதைவு. அடுகுவளம் தடையான பின்பு கேட்க என்று விடுகையிறே. பாவை, 29-6.

அடுத்தேறு - அதிகம். அடுத்தேறாக வந்த கரத்தை. 3.8.9-36.

அடுப்படைக்கல் - அடுப்பாக அமைக்கும் கல். ப்ரஹ்மாதிகளைக் கண்டால் அடுப்படைக் கல்லாக நினைத்திருக்கும் அத்தனை. மு.தி.64.

அடை - கையடை என்பதன் முதற்குறை. பாதுகாத்தற்காகக் கொண்ட பொருள். அடைகொண்டு பாழ்போக்குவான் ஒருவன் அன்றே. 5.10.5-36.

அடைகொளல் - தடுத்தல். க்ருஷ்ணன் வந்து நோக்கப்புக நீ ஒரு க்ஷத்ரியாதமன் அடைகொடு பாழ்போக்கினாய். பெ.தி. 5.8.8.

அடைத்த - உரிய. இந்த்ரியத்துக்கு அடைத்த திருநாமம் சொல்லி. பெ.தி.1.3.9. அடைத்த காலம் - உரிய காலம். தனக்கு அடைத்த காலத்திலே அலர்ந்த தாமரைப் பூப்போலே இருக்கிற. பெரி.தி.1.7.9.

அடைப்புண்ணல் - உள்ளடங்கல். வருமவற்றிலும் அடைப்புண்ணு மிறே வர்த்தமாநம். 1.1.4-36.

அடைய - 1. முற்றிலும். ஆத்மாத்மீயங்கள் அடைய. 5.3.5-36. 2. எல்லா இடங்களிலும். அச்சோலை அடைய மதுபாநம் பண்ணிக் களித்துப் பாடுகிற வண்டுகள். பெ.தி.1.2.6.

அடைவு* - 1. தொடர்பு. அடைவு இல்லாத இஹலோகத்திலே. 6.2.7-24. 2. முறைமை. அடைவுகெட ஒப்பித்து. 3.0.0-24

அண்ணர் - மூத்த சகோதரர். அண்ணர்க்கும் நமக்கும். பெரி.தி 1.8.4. அண்ணர் உடம்புக்கும் நம் உடம்புக்கும். தி.வி.21.

அண்ணிமை - நெருக்கம். அண்ணிமை சொல்லுகிறது. பெ.தி. 7.5.7.

அண்ணிய - நெருங்கிய. அண்ணிய உறவாக. 5.4.7-36.

அண்ணியர் - நெருங்கியவர். இவ்வர்த்தத்துக்கு அண்ணியர். 9.1.7-24.

அண்ணியார் - நெருக்கமானவர். அண்ணியாரைப் போலே வர்த்தித்து. பெ.தி.6.2.1.

அணியன் - அருகிலிருப்பவன். சந்த்ரன் அணியனாய் இருக்கை யாலே. நான்.தி.46.

அணுக்கன் - குடை. அணுக்கன் இடவேணும். 4.6.2-36.

அணுகோலக்கம் - அணுகு ஓலக்கம்; கூட்டம். திரள இருந்து அணுகோலக்கமாக இருக்குமவர்களைப் போலே. பாவை, 22-3.

அணுமை - அணிமை என்பதன் சிதைவு. அவர் கையும் வில்லும் கண்டு போந்த நாள் அணுமையாலே. பெ.தி.4.6.3.

அத்தலை* - அவ்விடம். அத்தலையில். 4.5.8-24.

அத்தவாளம் - மயிற்றோகை விரித்தாற் போலே பின்னே சாத்தும் ஆடை. ஆலவட்டக் காற்றிலே அத்தவாளம் தலை மேலே பறக்க. பாவை, 24-6.

அத்தவாளத்தலை - ஆடையின் முந்தானை. இவளை அத்தவாளத் தலையாலே மறைத்துக்கொண்டு...கொண்டு போக. பெரி.தி.3.8.0. அப்படியே தானே வந்து அத்தவாளத்தலையாலே மறைத்துக்கொண்டு போக. பெ.தி.3.7.0.

அதிர்த்தி - அதிர்ச்சி என்பதன் சிதைவு. படத்தை உடைத்தாய்க் கோபத்தாலே விஸ்த்ருதமான அதின்தலைமேலே அதிர்த்தி யாலே விஷத்தைக் கக்கும்படி கிளரக் குதித்து. பெரி.தி. 2.10.3.

அப்பர் - வழிபாட்டுக்கு உரியவர். அவனை அப்பராகச் சேமம் சாத்தி வைத்து வென்றான் இவனே கிடீர் என்கிறார். பெ.தி.2.10.8.

அமர்ந்த நிலம் - அச்சமில்லாத பொருந்திய நிலப்பகுதி....தம் கைப்பொருளை, அவர்கள் கையிலே கொடுத்து அமர்ந்த நிலத்திலே சென்றவாறே வாங்கிக் கொள்ளுவாரைப் போலே. 10.1 0-36.

அமுதுசெய்தல் - உண்ணல். அமுதுசெய்து கைவாங்கின. தி.மா.41.

அமுதுபடி - உணவு. அமுதுபடிகளும் சேர்த்து பாத்ரஸ்த்தமாக்கி வைத்தேன். பெரி.தி.3.3.9. அமுதுபடியாகச் சொல்லிற்று. 1.5.1-24.

அய்யர் - தந்தை. நம் அய்யரை ஒப்பார் உண்டோ? பெ.தி.1.2.6.

அய்யன் பாழி - அய்யன்பாழியில் ஆனை போர்க்கு உரித்தாமன்றாயிற்று அவ்வோ தேவதா மாத்ரங்களுக்கு பலப்ரதாந சக்தி உள்ளது. 1.1.5-36.

அரட்டு - மிடுக்கு. புலி அரட்டோடே நடந்ததோ. தி.நெ.தா.21.

அரண் - பெருமுயற்சி; ஏற்பாடு. முசல்வேட்டைக்கு அரணைப் பண்ணினாப்போலே என்னை முடிக்கைக்கு இத்தனை பாரிப்பு வேணுமோ? 9.5.0-9.

அரணிய - செறிவான; வலிவான. அரணிய கவியைப் பாடா நின்றான். 7.9.6-9.

அரணிமை - செம்மை. அரணிமையை உடையவனே என்றுமாம் பாவை, 20-3.

அரதி - 1. பிரிவுத்துன்பம். அரதியாலே படுகிற படு. 2.4.1.36.
2. பிரிவுத்துன்பம் உடையவள். நான் அரதியாய் அவன் இருந்த ஊரை நோக்கிப் போகத் தேடுவது. தி.நெ.தா.21.

அரிகண்டம் - கழுத்தில் போடப்படும் இருப்புத்தளை. அரிகண்டம் இட்டாப்போலே அவன் சாத்துகிற ஆபரணத்தைப் பூட்டினிகோள். 4.6.2-36.

அரித்தல் - தேடுதல். பெருமாள் பிராட்டியைப் பிரிந்து கடலும் மலையும் அரித்துக்கொண்டு வாராநிற்கச் செய்தே. 1.4.3-36.

அருக்குதல் - நெருக்குதல். க்ருஷ்ணனை அருக்கினால் உன்னையும் அருக்க வேணுமோ. பாவை, 10-6.

அருகு - பக்கம். இரண்டு அருகும் தேங்கிப் போரும்படி நடுவே அணைகட்டி. பெரி.தி.1.6.8.

அருகிருப்பு - அருகில் இருத்தல். அருகிருப்பை உடையரான. பெரி.தி.2.7.9.

அருங்குலை - இடியும்கரை. வெறும்புறத்திலும் அருங்குலைக் கீழ் விளை நிலம்போலே நோக்க அரிதான இடை நுடங்கும்படி யாகவும். 9.9.3-36.

அருமந்த - உயரிய. அர்ஹமான அருமந்த வஸ்து கிடீர் இது. தி.மா.27.

அருமை - தொல்லை. ஸ்திதியில் உண்டான அருமையாலே இருக்க ஒருப்படும். பெ.தி.1.3.1.

அருமைப்படல் - தொல்லைப்படல். அருமைப்பட வேணுமோ? 10.2.6-36.

அலகலகாக - ஒன்றோடொன்று கூடாததாக. சுருண்டு வெடித்து அலகலகாய்க் கருகின குழலையுடையனாய். 3.6.5-12.

அலசுதல் - வருந்துதல். உன் திருவுடம்பு அசைய-ஸுகுமாரமான திருமேனி அலசும்படி. 9.2.3-36.

அலமருதல் - தடுமாறுதல். அலமந்து திரியப்பண்ணுதி. 4.9.9-9.

அலமாப்பு - தடுமாற்றம். அவன்படுகிற அலமாப்பைக் கண்டு. 6.2.1-36.

அலற்றுதல் - முறையிடும் போக்கில் பேசுதல்; புலம்பல். தாம் அலற்றுகிறபடியை. 4.2.0-6.

அலைகொடுக்கை - கூடலுக்கு இடம் கொடுத்தல். நாட்டார் இரவு உறங்குவர்கள். ப்ரணயிநி யௌவநம் குடிபுகுந்தால் இராமாறு நாயகனுக்கு அலைகொடுக்கையாலே உறக்கம் இல்லை. 7.2.1-36.

அலைச்சல் - தொல்லை. தோள்வலியாலும் நமக்கோர் அலைச்சல் இல்லை பெரி.தி.4.3.3.

அலைவலை* - பன்னிப் பேசுவோர்; பகுஜல்பர்கள். திருவேங்கடமுடையான் அலைவலையாகாதே! என்கிறாரிறே. பெ.தி.5.8.9.

அலைவாய் - கடல். கடல் எக்கலில் நுண் மணலில் பலர்-அலைவாயில் எக்கலில் நுண்ணிய மணலிற்காட்டில் அநேகர். 4.1.4-36.

அவ்வருகு* - அதற்கு மேலாக. அவ்வருகாக நினைத்திருக்கையாலே. 1.3.1-24.

அவ்வோ* - அவ் அவ்; அந்த அந்த. அவ்வோ பதார்த்தங்களுக்கு. 2.2.8-36.

அவிழ்ச்சி - சோர்வு. சோர்வு பார்த்து என்பதற்கு "அவிழ்ச்சி பார்த்து'' என்று உரை கூறப்பட்டுள்ளது. பெரி.தி.2.2.5.

அழகோலக்கம் - அழகு தோன்ற அவையில் வீற்றிருத்தல் அழகோலக்கங் கொடுத்துக் கொண்டிருக்கிற. 1.1.0-24.

அழற்றி* - சீற்றம். அவர்கள் முன்னே தன் அழற்றி எல்லாம் தோற்றும்படி. பெரி.தி. 2.1.5.

அழன்று - கோபித்து. நான் சொன்னால் அழன்று அத்தைக் கொள்ளாய். பெ.திருவந். 12.

அழிஞ்சுக்காடு - பாலைநிலம். பெருவிடாயனானவன் அழிஞ்சுக் காடு ஏறப்போக மாட்டானே?. 6.2.0-36.

அழிப்பாளன் - உருக்குபவன்; தட்டான். அழிப்பாளனானவன் 'ஆபரணாதிகள்' என்று பாராதே உருக்கி அழிக்குமாபோலே காணும் இவனும் உருக்கி அழித்தபடி. 5.8.1-36.

அழிய மாறுதல் - முற்றிலும் மாறுதல். திவ்ய விக்ரஹத்தை அழிய மாறிவந்து தோற்றின. தி.ச.வி.24.

அழுக்கறுதி - தூய்மை. "தூய்மை - அழுக்கறுதி". 5.4.7-12.

அழுகுசிறை - கொடிய சிறை. ராஜபுத்ரன் அழுகுசிறையிலே கிடந்தால். 1.2.1-36.

அளவிலி - அறிவு இல்லாதவன். அளவிலிகளாகவுமாம். 4.9.9-36.

அளவு - அறிவு; திறமை. அளவு எல்லாங் கொண்டு. 7.8.10-36. தந்தாமுடைய அளவுகளுக்கீடாக இவளுடைய குணங்களைச் சொல்லி. பெரி.தி.3.8.4.

அளவுடையார் * - அறிவுடையார். காண்கைக்கு அளவுடையார் இல்லை. 2.8.8-9.

அளவுபடை - சிறியபடை. அளவுபடைக்குப் பெரும்படை தோற்பது வஞ்சநத்தாலேயிறே. 2.4 7-36.

அளற்றுப்பொடி - காவிப்பொடி. அளற்றுப் பொடியிலே புடைவையைப் புரட்டி. பாவை, 14-3,6.

அளாவன் - கலப்புடையது. ரஜோகுண ப்ரசுரராய் இருப்பாரும் தமோகுண ப்ரசுரராய் இருப்பாரும் அளாவனான

ஸத்வத்தை உடையராய் இருப்பாருமாயிறே இருப்பது. அப்படியே குணாநுகுணமாகப் பிறந்த ஜ்ஞாநமும், 1.1.5-36.

அற * - 1. முற்றிலும். அற உலர்ந்து. 4.7.5-9. 2. மிகவும். இவன் அறக் கைவிஞ்சினான் என்று கரத்தைக் கழித்து விட்டான். 4.8.9-36.

அறவன் - அறநெஞ்சினன். நீ செய்ததுக்கு ஒரு ப்ரத்யுபகாரம் பண்ணலாமோ? வெறும் அறவனாகையாலே செய்தாய் அத்தனை. 6.8.1-36.

அறவிலை - எல்லா உரிமையோடும் விற்றல். அறவிலை செய்து கொடுத்தல். 1.3.1-36.

அறவை - அநாதை. அறவையுமாய் இருப்பான் ஒருவனை. 3.5.7-36.

அறவைச்சிறை - கொடுஞ்சிறை. ஸம்ஸாரமாகிற அறவைச்சிறை வெட்டிவிடப் பெறுவர்கள் என்கிறார். 1.3.11-36.

அறிவிலி - அறிவில்லாதவன். இன்றியே அறிவிலியான. 4.7.1-12.

அறுகாழி * - மோதிரம். போகத்துக்கு ஏகாந்தமான அழகை உடைய அறுகாழி என்னுதல். மு.தி.93.

அறுதி - 1. நிச்சயம். புகுருகை அறுதி என்று. 5.4.11-12. 2. முடிவு. துணியும்படியும் அறுதியாகக் கேட்டு. 9.7.3-36.

அறுமான் - கொசுகு. அத்திக்காயில் அறுமான் போலே. 1.9.5-36.

அன்னல் - புகை. அன்னலும் துன்னலுமாய்த் திரண்டமேகத்தை. 8.5.4-36.

அனந்தல் - சோம்பல். அனந்தலிலே திருவடிகளை நிமிர்த்தான். 6.9.4-36.

அனுக்கம் - நடுக்கம். கீண்டு பொகடுகையால் வந்த அனுக்கம் தீர. தி.பல்.6.

அனுங்காமை - நடுங்காமை. பிள்ளைகள் அனுங்காமைக்காக. பெரி.தி.1.2.13.

ஆக்கர்- உண்டாக்கப்பட்டவர். ஆக்கரான தேவர்கள், 7.5.2-36.

ஆக்கன் * - 1. படைக்கப்பட்டவன். ஆக்கனான ப்ரஹ்மா கிட்டுகை. 3.1.8-12. 2. செய்யப்பட்டது. பாகவிசேஷத் தாலே ஆக்கனாய் வந்த ஸாரஸ்யமல்ல. தி.மா.17. 3. மட்டமானது. ஆக்கனாய் இருப்பது ஒன்றை. தி.பல்.8.

ஆகமுதலி - திருமேனி அலங்காரத்தில் முதன்மையாக இருப்பது. ஆகமுதலியாக விட்ட திருத்துழாய் மாலையையும் ஆதிராஜ்ய ஸூசகமான மணிமுடியையும் உடையவன். மூ.தி.50.

ஆச்சி - தாய். நம்மை ஆச்சி பலகாலுஞ் சொல்லும். பாவை, 26-6.

ஆசு - ஆயுதத்தின்பிடி. ஆசிலே வைத்த கையும் நீயுமாய். 7.1.2-36. ஆசைப்பாடு - ஆசைப்படுதல். நாக்கு நீளுகை யாவது ஆசைப்பாட்டுக்கு ஸூசகம். 4.7.6-12.

ஆட்டை - ஆண்டு. ஆட்டைக்கு ஒருகால் இது பூக்கக் கடவதாய். பெ.தி.9.8.3.

ஆண் பிள்ளைத்தனம் - வீரம். திருமங்கையாழ்வார் மதிக்கும்படி யான ஆண் பிள்ளைத்தனமிறே அவரதும். பெ.தி.2.9.3.

ஆணாறு - மேற்கு நோக்கிப் பாயும் ஆறு. ஆணாறு பெண்ணாறு கள் ஒன்று இன்றிக்கே தேடுவதாய்... 4.4.0-36.

ஆமம் - உணவு செறிக்காத நிலை. 'ஆமத்திற் சோறு பாதகம்' என்னும் அத்தாலே நிதாநஜ்ஞரான பிஷக்குகள் போஜந நிரோதம் பண்ணுமாபோலே. 1.4.0-36.

ஆமைத்தாலி - முளைத்தாலி. அச்சுதாலியும் ஆமைத்தாலியும். பாவை, 7-6.

ஆய்ச்சி - தாய். வீட்டில் ஆய்ச்சிக்கும் ஐயருக்கும் பரதந்த்ரராக வேணும். 6.1.4-36.

ஆயவெள்ளம் - தோழியர் கூட்டம். ஆயவெள்ளம் எல்லாம் திரண்டது. 5.3.6-36.

ஆயன் - இடையன். ஆயனுடைய ஸர்வஸமாச்ரயணீயதைக்கு ஸ்மாரகமாய் இருக்கிறபடி. தி.நெ.தா.8.

ஆர்ப்பரவம் - ஆரவாரம். ப்ரீதியாலே ஆர்ப்பரவம் செய்தவன். பெரி.தி.4.9.8.

ஆராட்சி - ஆராய்ச்சி என்பதன் சிதைவு. ஆராட்சி தோற்றச் செய்யும். பெ.தி.10.8.1.

ஆலத்தி - மஞ்சள் நீர். வெறும் புறத்திலே ஆலத்தி வழிக்க வேண்டியிருக்க அவ்வழகுக்கு மேலே வேலைப்பிடித்த அழகு. பாவை, 24-6.

ஆலவட்டம் - விசிறி. ஆலவட்டக் காற்றிலே அத்தவாளந் தலைமேலே பறக்க, பாவை, 24-6.

ஆவாலம் - ஆரவாரம். ஆவலம் என்பதன் சிதைவு. சாணூர முஷ்டிகரை நிரஸித்து ஆவாலங் கொட்டி. பெ.தி.3.3.2.

ஆவிக்கை - கொட்டாவி கொள்ளுகை. ஆவிக்கையாவது பசியாலே கொட்டாவி கொள்கையாகவும் ஆம். பெ.தி. 1.2.8.

ஆழங்கால் - பள்ளம். ஸௌந்தர்யமாகிற ஆழங்கால் தானே மேடாய்த் தரித்து நின்று. பெரி.தி.3.7.0.

ஆழமோழை - பள்ளம்மேடாக, நிறைவாக. மடு. இங்குச் சுழிபட்டோடும் பெருவெள்ளத்தைக் குறிக்கிறது. பெரிய திருநாளில் சிறைப்பட்டிருப்பாரைப் போலே வெண்ணெயும் பெண்களும் ஆழமோழையாய்ச் செல்லுகிற அமளியிலே நாம் புகுந்திருப்பதே என்று இருந்தான். சி. மடல், கண்ணி, 37.

ஆளத்தி* - முரலுதல். வண்டுகளானவை ஆளத்தி வைக்க. பெ.தி.5.10.4.

ஆளியக்கம் - ஆள் இயக்கம், மக்கள் நடமாட்டம். அசோக வநிகாப்ரதேசத்திலே சில ஆளியக்கத்தைக் கண்டு அங்கே சென்று. பெரி.தி. 3.10.0.

ஆற்றாமை - தாங்க முடியாத நிலை. ஆற்றாமையைக்கண்டு. 1.1.0-36.

ஆற்றுத்தலை - ஆற்றின் தொடக்கம். ஆற்றுத் தலையிலே. பெ.தி.6.9.6.

ஆற்றுவரவு - ஆற்றுவெள்ளம், ரத்நாதிகளைக் கொழித்துக் கொடுவருகிற ஆற்றுவரவோடு கிருஷ்ணன் இடைப் பெண் களுடைய துகில்களையும் வளைகளையும் வாரிக்கொடு வருகிற வரவோடு வாசியற. பெ.தி. 6.6.8.

ஆறாடி வருதல் - விழா நிறைவுக்கு உறுப்பானவற்றைச் சிந்தித் தல்.சிசுபாலன் லஜ்ஜாவிஷ்டனாய் அண்ணாந்திருக்கும்படி யாக ஆறாடி வருகிறஸமயத்திலே. பெரி.தி.4.1.5.

ஆனை - யானை. ஆனைக்குத் தோற்றாற் போலேயும். 3.2.5-36.

ஆனைக்குப்பு* - சதுரங்கம். ஆனைக்குப்பு ஆடுவாரைப் போலே. பெ.தி. 6.2.7.

ஆனைத்தாள் - சாளரம்; பெரியவாயில். ஜ்ஞாநம் ப்ரத்யக்ஷிக்கைக்கு ஆனைத்தாளான மநஸ்ஸாலே. இ.தி.67.

இசங்குதல் - இயங்குதல். இசங்க மாட்டாமையில்லையிறே 6.10.10 - 36. ஸ்ரீப்ருந்தாவநத்துக்கு வழிஇசங்கும்படி பெண்களுக்கு வன்னியம் அறுத்துக் கொடுத்தபடி. 5.10.2-36.

இசலி* - இகலி என்பதன் சிதைவு. மாறுபட்டு. இசலி வளருகிற செந்நெலும். 6.5.6 36.

இசித்தல்* - இழுத்தல் என்பதன் சிதைவு. தம்முடைய திருவுள்ளத்தை அந்தக் கழுத்தினின்றும் தன் பக்கலிலே வர இசித்து. அம.7, அழகு.

இசைவு - அனுமதி. இத்தலையில் இசைவு கிடையாமையிறே. பெ.தி.1.10-9.

இசையாமை - உடன்படாமை. இதுக்கு இசையாமை தோற்ற இருக்க. பெரி.தி.4.8.4.

இட்ட வழக்கு* - சொற்படி அமைவது; ஸ்வாதிநம். இப்பத்தும் வல்லார் இட்ட வழக்காய் இருக்கும் திருநாடு என்கிறார். 6.7.11-36.

இட்டளம்* - குறுகிய இடம்; குறுக்கம். இட்டளத்தில் பெரு வெள்ளம். தி.பல்.7; பரமபதத்தில் இட்டளமும் தீர்ந்தது. 3.8.2-36.

இட்டிறை - எதிர்ப்பையிடுகை என்பது அரும்பதம் தரும்பொருள். தந்த பொருள் எனலாம். கவிபாட்டு இட்டிறையாயிறே இருப்பது. 3.9.4-24.

இட்டீடு - வார்த்தையிட்டு வார்த்தை கொள்கை. இட்டீடு கொள்ளுகைக்குப் பற்றாசு இல்லாதபடி. 8.2.6-36.

இட்டுப் பிறத்தல் - ஒன்றற்கு என்றே பிறத்தல். கைங்கர்ய ஸாம்ராஜ்யத்துக்கு இட்டுப்பிறந்து. 2.3.1-36.

இடுசிவப்பு - செயற்கையழகு. ஓர் ஆபரணத்தால் இடுசிவப் பன்றிக்கே ஸ்வாபாவிக ஸௌந்தர்யம் உடையோமும் நாம் அல்லமோ?. அம.7. அழகு.

இடைச் சரி - தோள்வளை திருக்கைக்குச் சாத்துமவை என்றால் அநேகம். அவைதன்னிலே 'இடைச்சரி, கடைச்சரி' என்று அநேகமாய் இருக்குமிறே. 2.5.6-36.

இடைச் செறி - துணை மோதிரம். ராஜபுத்ரர்கள் கையிலே இடைச்செறி கடைச்செறிக்குத் தோற்பாரைப் போலே 6.1.1-24.

இடையாட்டம்* - 1. நிலை. சில மகன்றில்களைக் குறித்து என்னிடையாட்டம் அவனுக்கு அறிவிக்கிறிகளோ? அல்லிகளோ? என்கிறாள். 11.4.4-24. 2. திறத்தில்; இடத்தில். இவ்விடையாட்டத்தில் 1.3.4-36.

இணைச்சீரை - மாற்றுடையும் மேலாடையும். 'ஒருகூறை' என்றும் 'அரைக்கு உடுப்பது' என்றும் சொல்லுகையாலே, அரைக்கு உடுக்கும் சீரைக்கு இணைச்சீரை வேறே தேடவேணும் என்கை. பெரி.தி. 4.6.2.

இதள் - இதழ் என்பதன் சிதைவு. இதள் விள்ங்காநின்றுள்ள தாமரை போலே. பெ.தி.7.5.6.

இந்தளம் - அடுப்பு. ஆகாசந்தானே இந்தளமாக எரிய என்றபடி. பெ.தி. 1.7.5.

இயக்கம் - நடமாட்டம். சில ஆள் இயக்கத்தைக் கண்டு அங்கே சென்று. பெ.தி.3.10.0.

இயல் - இசை கலவாத பாட்டு. இயலை நல்லிசையாலேபாடியாடி. 2.6.6-9.

இயல் அருளிச்செய்தல் - பாட்டைப் படித்தல். இப்பாட்டு இயல் அருளிச்செய்யும்போது. பெ.தி.11.8.6.

இயற்றி* - 1. ஆற்றல்; தகுதி. தன் இயற்றியெல்லாங் கொண்டு. 4.9.3-24, 36. 2. சிறப்பு. நாலுவகைப்பட்ட வேதம், பஞ்ச மஹாயஜ்ஞம், மற்றும் ச்ரவணத்தாலே அறிய வேண்டியவற்றாலும் வந்த இயற்றியை ஸ்வபாவமாக வுடையராய். பெ.தி.7.8.1.

இரட்டை - துப்பட்டி. ராஜாக்களுக்கு இரட்டை பிடித்து. தி.பல்.9.

இரத்தல் - பிச்சை எடுத்தல். காண்கைக்காக இரக்கிறார். தி.மா.7.

இரப்பாளன் - பிச்சை எடுப்பவன். ச்ரிய: பதியான தன்னை இரப்பாளன் ஆக்கினானிறே. 4.7.2-36.

இராப்படை - இரவுப் போர்ப்படை. கண்ணுக்கு விஷயமாய் இறாய்க்க ஒண்ணாதபடி இராப்படை ஏறுவாரைப் போலே உடம்பிலே படக் காண்கிற இத்தனை. 9.9.1-24.

இராமாறு - இரவுதோறும். பிரணயிநி இராமாறு நாயகனுக்கு அலை கொடுக்கையாலே உறக்கமில்லை. 7.2.1-36.

இருகரையர் - ஆழ்வார்கள் இருகரையர். அம.0, பெரி.

இருகரையன் - இரண்டிடத்திலும் தொடர்புடையவன். அது செய்யுமிடத்தில் இருகரையன் ஆகையன்றிக்கே. 1.2.4-36.

இருட்சி - இருள். போக்யதையாலும் இருட்சியாலும் புக்கார் மிகவும் மதிமயங்கும்படியான திருச்சோலை. 2.10.3-9.

இருதலைத்தல் - இரண்டுபட்டிருத்தல். இருதலைத்த நெஞ்சின்றியே. 9.8.3-24.

இருபுரி - இரண்டு முறுக்குடைய கயிறு. திருநகரியில் ஆழ்வார் ஆணையும் பொலிந்து நின்ற பிரான் ஆணையும் இருபுரியாய் ஆய்த்துச் செல்வது. க.நு.சி.10, பெரி.

இல்லி - சில்லி. கருப்பஞ்சாற்றுக் குடம் இல்லி திறந்தால் பொசிந்து புறப்படுமாபோலே. பெரி.தி.1.7.4.

இலக்கை - மாத ஊதியம், லட்சியம். கைமேலே இலக்கை பெறாதார்க்கு அன்றாடப் படிவிட வேணுமிறே, படிவிடாத போது அரை க்ஷணம் நில்லார்களிறே அவர்கள். 4.8.7-36.

இலைக்குழல் - இலையால் செய்த ஊதுகுழல். வயிரமும் உருக்கும் காணும் வாயில் குழலோசை. இலைக்குழல் என்று நிர்ப்பந்திக்கிறாரும் உண்டு. பெ.தி.2.7.8.

இலைத்தொடை - துழாய்மாலை. பிடித்து மோந்த இலைத்தொடையும் தானுமாய் இருக்கிறபடி. 2.6.10-24.

இவ்வருகு - 1. கீழ். இவ்வருகான என்னளவும் வர. 2.3.1-24. 2. இப்பால். அதுக்கு இவ்வருகே ஒரு பயணம் எடுத்துவிட்டபடி. 1.5.6-36.

இவ்வோ - இவ்இவ். இவ்வோ இடங்கள் உனக்கு வாஸஸ்தாநமாய் இருக்க. பெ.தி.3.5.8.

இழவு - 1. நஷ்டம். நாள் இழவல்லது பொருள் இழவில்லையிறே தி.வி.89. 2. வருத்தம். இன்னாதான இழவுதீர. 6.4.0-24. 3. இறப்பு. பெரியவுடையார் இழவு பலிக்கையாலும். 4.9.1-36. இழவாளன் - நஷ்டப்பட்டவன். தான் இழவாள னாய்கொண்டு. 1.7.10-6.

இழிச்சம் - இழிவு. எத்தனை இழிச்சம் சொன்னார்களேயாகிலும். பாவை, 20-6.

இழிச்சல் - இறக்குதல். பருக்கை தட்டுமாகில் மிடற்றுக்குக்கீழ் இழிச்ச மாட்டாது ஆயிற்று. பெ.தி.1.2.5.

இழிஞ்சுதல் - இறங்குதல் என்பதன் கொச்சை. மேல்நிலங்களில் நின்று தடுமாறாதே வந்து இழிஞ்சுகிற. பாவை, 10-6.

இழிதல் - இறங்குதல். ஆழ இழிந்து. 5.4.1-36. இழிந்தவர்கள் - இறங்கியவர்கள். அநுபவத்திலே இழிந்தவர்களுக்கும். தி.ச.வி.93.

இழுகின - இறங்கின. ஒருத்தர் இழுகின இடத்திலே. பெரி.தி. 3.2.2.

இழையீடு - பொல்லாங்கு; குற்றம். இதினுடைய இழையீடு கவிழ்ந்து பார்க்க அமையுமே இதினுடைய அகவாயை; தன்னடையே விரக்தி பிறக்கும். 10.2.5-36.

இளங்காலிகள் - இளம்பிள்ளைகள். இளங்காலிகளான இடையர் திரண்ட திரளில். பெரி.தி. 3.6.7.

இளவணி - காலாட்படை. தூசியேறினவர்கள் போரப் புக்க வாறே, நின்ற இளவணி கலங்கி மேலே நடக்குமாப் போலே. 7.4.1-36.

இளிகண்ணன் - பீளைக்கண்ணன். இளிகண்ணனை புண்டரீ காக்ஷன் என்றும் இப்புடைகளிலே ஆயிற்றுக் கவிபாடுவது. 3.9.0-36.

இளிம்பு* - திறமையின்மை. இதர விஷயங்களைப் பற்றுகை இளிம்பு. 2.10.1-24. இளிம்பர் - திறமையில்லாதவர். இளிம்பராயிருப்பார் அகப்படுகைக்காகச் செய்தாய் இத்தனை. 6.2.1-24. இளிம்பன் - திறமையற்றவன். முக மெங்கும் (தயிரைத்) தடவிக்கொள்ளுகிற இளிம்பனுக்கு நான் இளிம்புபட்டேன். பெ.தி.8.3.5.

இளைய பெருமாள் - இலக்குவன். சேஷபூதனும் தன்னுடைய ஸர்வ வ்யாபாரங்களையும் சேஷிக்கு உறுப்பாக்கி வைக்கக் கடவனிறே, இளைய பெருமாளைப்போலே. பெ.தி.1.2.6.

இற்றை - இன்று. ஸ்ருஷ்டிகாலம் தொடங்கி இற்றையளவும். 4.1.6-24.

இறட்டிக் கொள்ளுதல் - அப்பிக்கொள்ளுதல். முகத்திலே இறட்டிக்கொள்ளுதல். தி.மா.36.

இறட்டு - வீசி. அர்ஜுநனும் தானுமாய் யமுநாதீரத்திலே பூப்பந்து இறட்டு விளையாடாநிற்க. பெ.தி.6.8.7.

இறாஞ்சிக்கொள்ளுதல் - கவர்தல். மஹாபலி போல்வார் இறாஞ்சிக்கொள்ள. 2.8.7-36.

இறாய்க்க* - பின்வாங்க. என்று இறாய்க்க அவரும் விடாதே. அம.1, அழகு. இறாய்த்த - பின்வாங்கிய. இறாய்த்த அர்ஜுநனை. தி.ச.வி.89. இறாய்த்தவர் - பின்வாங்கியவர். இறாய்த்தவர்களுக்கு. தி.மா.0. இறாயாத - பின்வாங்காத. சேற்றுக்கும் இறாயாத வடிவைக்கொண்ட. 1.9.2.36. இறாயாமை - பின்வாங்காமை. சேவடி தானே இருந்த இடத்தே வந்தால், இறாயாமையே வேண்டுவது. மு.தி.48.

இறுக்குவாதம் - அசைய முடியாமற் செய்யும் வாதநோய். பகவத் விஷயம் கேட்டால் இறுக்கு வாதம் வலித்து அவிக்ருதராய் இருப்பார்கள். 3.5.2-24.

இறுமாந்திருத்தல் - செருக்கோடிருத்தல். புதுத்தண்டன் கண்டு இறுமாந்து விளைவது அறியாதே. மு.தி.45.

இறை - கப்பம். அவனுக்கு இறையிறுக்கும் ஊராவது. பாவை, 16-6.

இறையிலி * - வரியில்லா நிலம். பிறர்க்கின்றித் தனக்கேயாகத் தந்த நுகர்ச்சி; அநந்ய போக்யத்வம். தமக்கு அவ்வழகை இறையிலியாக்கின உபகாரத்தைக் கொண்டாடுகிறார். தி வி.43.

இன்னாதாகை * - வெறுத்தல். இவர் திருவுள்ளம் இப்போது இங்ஙனே கொடிதாய்த்து ஆகாதே என்று இன்னாதாகிறார் தி.மா.37.

இன்னாப்பு * - வெறுப்பு. இன்னாப்பாலே 'என்ன பாவம்' என்கிறார். 2.2.2-36.

ஈடு - 1. கவசம். உடம்புக்கு ஈடு இடாதே. 8.1.4-24; இ.தி.15. 2. தக்கவை. நீங்கள் கருதுகிறவை ஈடல்ல, பரிஹாரமுமல்ல. 4.6.0-6. 3. இடுவது. அஃதாவது செய்வது (உதை முதலியன) சாமானியன் என்று இடும் ஈடெல்லாம் இட அமையும். பெ.தி.5.9.8.

ஈடுபடுதல் - வருந்துதல். ஸ்ரீகஜேந்திராழ்வான் முதலையாலே ஈடுபட்டு ப்ரதிக்ரியை பண்ணமாட்டாத அளவிலே. பெ.தி. 1.8.5.

ஈண்டு - விரைந்து. ஈண்டு கவளக் கடாக்களிறு அட்ட பிரான். 4.6.5-6.

ஈண்டென* - விரைவாக. அத்தை ஈண்டெனத் தந்தருள வேணும். 2.9.0-9.

ஈத்தொற்றி - மேற்கட்டி; விதானம். ஆகாசம்போலே என்ற போது கட்டின ஈத்தொற்றி இருக்கிறபடி. பெ.மடல், கண்ணி, 3.

ஈரங்கொல்லி - வண்ணான். ஈரங்கொல்லி நம்திறத்தில் பண்ணின குற்றம், 5.10.6-36.

ஈரச்சீரை - ஈரத்துணி. ஈரச்சீரை கட்டுமாபோலே. 4.6.10-36.

ஈரப்பாடு - அருள். நெஞ்சில் ஈரப்பாடு ஆய்த்து பலசேஷம் ஆவது. க.நு.சி.8, அழகு.

ஈரம் - அன்பு. நெஞ்சில் ஈரமே பார்ப்பது. பாவை, 5-6.

ஈனுதல் - தருதல். வலப்புரியையும் முத்தையும் ஈனாநிற்கும் ஆயிற்று. பெ.தி.3.4.8.

உக்கக்கால் - விசிறிக் காற்று. உக்கக்காலுக்கு உளையக் கடவ உன் உடம்பே நெருப்பாக வேகிறாய் ஆகாதே. 2.1.9-36.

உகந்தருளின இடம் - திவ்விய தேசங்கள். உகந்தருளின இடத்தை நீள்கடல் வண்ணனான இடத்துக்கு விபூதி என்று நினையாதே. 3.6.9-9. உகந்தருளின நிலங்களிலே. 5.9.0-24.

உகப்புதி - உகப்பாய். அவ் இருப்பிலும் பசுமேய்க்க என்றால் உகப்புதி என்றுமாம். 10.3.10-24. உகப்புதோம். நாங்கள் மிகவும் உகப்புதோம். 10.3.9-24.

உகவாதார் - பகைவர். உகவாதாரை அழியச் செய்வுதி. பெ.தி.10.5.8.

உகவை * உகப்பு. கோஷ்ட்டியிலும் உவகை தலைமண்டை யிட்டு. 6.2.0-36.

உகளித்தல் - எழுதல். பருவத்தால் இளையதாய் இருந்துள்ள வாளைகளானவை, செருக்காலே உகளித்து நீருக்குள்ளே முதுகுதோற்றும்படி கிடக்கிற ஆமையின் முதுகிலே சென்று குதித்து. பெரி.தி. 4.4.5.

உசாத்துணை* - பேச்சுத்துணை. உசாத்துணையாவார். 2.3.0-36.

உடல்* - 1. இடம். அழகுக்கு உடலாய் இருக்கிறபடி. 9.7.9-36. 2. காரணம். நீர்மைக்கும் மேன்மைக்கும் உடலாய் இருக்கும். 2.8.3-36. 3. கருவி. பரபக்ஷ ப்ரதிக்ஷேபத்துக்கு உடலாக ந்யாய மீமாம்ஸைகளும் அதிகரித்து. பெ.தி.5.8.7.

உடன்கேடு - கூடக்கெடுவது. ஜந்மங்கள்தோறும் உடன்கேடாய் போந்த தாகையாலே. தி.ச.வி. 115. உடன்கேடன் - சேர்ந்துகெடுபவன். தானும்பட்டு உடன்கேடனாய் நின்று நோக்கும் என்கிறது. 1.1.3-36. உடன்கேடர் - உடன் கேடராகவும் இவை எங்கே தேடிக்கொண்டார்கள். 4.9.2-24.

உடன்பாடை - உடன்படுபவள். உடன்பாடையாகவும் நினைத் திலள். 6.7.9-12.

உடன்வந்தி - உடன்வருவது; சகஜம். சக - உடன்; ஜம் - தோன்றி யது, வந்தது. உடன்வந்தியான அதிமாத்ரமான காத லாலே. 4.7.11-36.

உடைகுலைப்படல் - சிதிலமாதல். உடைகுலைப்பட்டுக் கண்ண நீராலே. 6.7.3-36.

உடோ - டேய் என்னும் விளி. உடோ! வாராய்! வீரர்கள் வர்த்திக்கும் வழியல்ல காண் நீ செய்தது. பெ.தி.2 6.4.

உண்டறுத்தல் - சிரணித்தல். ஒரஞ்சலியையும் உண்டறுக்க மாட்டாத உன்னை. பாவை,29-3.

உணர்த்தி* - 1. உணர்ச்சி. உணர்த்தியுண்டானால். 4.6.10-36. 2. விழிப்பு. உங்கள் உணர்த்தி விடிந்தமைக்கு அடையாளம் அன்று. பாவை, 6-3.

உந்தாமுடைய - உம்முடைய. உந்தாமுடைய ஸத்தை பெற்றுப் போக வேண்டியிருக்கில். 4.10.9-36.

உப்புச்சாறு* - அமுதம். உப்புச்சாறு அமையும் என்று இருப்பார்க்கும். பெ.தி.2.6.1.

உயர்த்தி* - உயர்வு. பிறர் உயர்த்தி கண்டால் பொறுக்க வேண்டாவோ. 6.2.0-36.

உயரம் - உயர்வு. தனக்கு உயரம் சொல்லிலும் அவளைச் சொல்லித் தன்னைச் சொல்லவேண்டும்படி. சி.மடல், கண்ணி,38.

உயலிடம் - உய்யுமிடம். இவள் உயலிடம்பெற்று. 4.4.3-12.

உயிர்க்குலை - உயிர்க்கொலை என்பதன் சிதைவு. சிறிது சிறிதாக ஈருதல். சித்திரவதை செய்தல் என்பது பொருள். நற்கொலையாகாதே உயிர்க்குலையாக்கி நலியாநின்றது. பெ.தி. 11.1.2. அம்பு நற்கொலையாகக் கொல்லும்; குணம் உயிர்க்கொலையாகக் கொல்லும். பாவை, 21-6.

உரப்பு - அழுத்தம். இனி என்கிற உரப்பு எத்தைப்பற்றி. 1.7.8-36.

உரவியர் - வலிமையுடையோர். எத்தனையேனும் முன்கை உரவியராய் இருப்பார் இழிய வேணுமாய்த்து(ப்) பசுக் கறக்கப் புகும்போது. பாவை, 3-3.

உரிகூறை - ஆடையற்ற நிலை; அம்மணம். என்னை உரிகூறை கொண்டு போனான். 5.3.2-36. உரிசூறை என்பது 24இல் உள்ள சொல். ஆடையினைக் கொள்ளை கொள்ளல் என்பதே இரண்டுக்கும் பொருளாகும்.

உரிதல் - கழற்றிக்கொள்ளல். ப்ராண விச்லேஷபர்யந்தமாக்கிப் போந்தேன்; புடைவை உரிந்து விட்டிலேன். பெ.தி.1.6.6.

உரு - பாடஞ்சொல்லல். சீயர் உருத்தோறும் அருளிச்செய்வர். 4.3.11-24.

உருக்கி - நீர்ப்பிண்டமாக்கி. பரிவுதோன்ற உருக்கிக் கொடுத்தபடி. 1.9.5-24.

உருமாய்ந்து கிடத்தல் - உருவின்றிக் கிடத்தல். இது உருமாய்ந்து கிடந்த காலத்திலே. தி.மா. 36.

உருவ - 1. நெடிது. இக்குடிக்கு உருவநின்ற பழியை விளைக்குமவள் இவளென்று. 5.5.6-36. 2. முற்றிலும். அகர்மவச்யனுமாகையாலே உருவ நினைத்தபடியே இருக்குமிறே அவன். 10.5.10-36.

உருவெளிப்பாடு - மாயத்தோற்றம். உருவெளிப்பாட்டாலே. 4.4.10-9.

உரோசுதல் - உறிஞ்சுதல். மூக்காலே உரோசியிருந்து முலையை அமுது செய்யாய். பெரி.தி.2.2.3.

உவர்க்குழி - சாக்கடை. கங்கையாடப் போமவனுக்கு நடுவே ஒரு உவர்க்குழியிலே முழுகிப் போக வேண்டுமோ? பெ.தி. 1.1.1.

உவாத்து - பயிற்றுவிப்பவர்...பொறைக்கு உவாத்தாய் இருக்கும் ஒருத்தி. 8.1.1-24.

உழக்கோல் - 1. தாற்றுக்கோல். மிகைத்தானாகில் உழக்கோல் கொண்டு தகர்க்கிறோம் என்றிருப்பர். பாவை, 18-6.

உழவுகோல் - சாட்டை. உழவுகோலும் கையுமாய் நின்று தேரை நடத்துகிற ஸாமர்த்யத்தாலே. பெரி.தி.1.2.7.

உழைத்தல் - துன்பப்படுதல். ஒரு தேச விசேஷத்திலே போய் யமனுடைய தண்டலிலே உழைக்குமது கிடக்கச் செய்தே கர்ப்பத்திலே புக்குப்படும் கலேசத்துக்கு அவதியில்லையாய்த் திருப்பது. பெ.தி.6.2.3.

உள்மானம் - உட்பகுதி. உள்மானம் புறமானம் ஒழிய நித்யராய் இருப்பார் ஒருவரும் இல்லை. தி.ச.வி.66.

உள்வாய் - உட்பகுதி. அதுக்குப் பரபாகமாய் உள்வாயிலே கிடக்கிற. தி.நெ.தா.3.

உள்ளடங்காமை - உள்ளே தங்கியிருக்க மாட்டாமை. நினைத்துச் சிதிலனாய் அது உள்ளடங்காமையாலே. 1.5.1-9.

உளவுகோல் - மாக்கோல். உளவுகோலைக் கொண்டு. 2.3.2-9.

உளுக்காந்தல் - உள்ளே உலர்ந்து போதல். கொம்புகளைப் பறித்தவாறே யுளுக்காந்தது. 8.4.1-36.

உளைமயிர் - பிடரி மயிர். அந்த உளைமயிர்களிலே ஒதுங்கிக் கிடந்த ப்ரஹ்மாதிகள். பெ.தி.1.4.1.

உறாவுதல் - வருந்துதல்; வாடுதல். அநாதிகாலம் அடிமை இழந்து உறாவி இல்லாதார் கணக்காய் இருக்கிற. 1.1.1-9. பதினாலாண்டு பிரிந்து உறாவிக்கிடந்த திருவயோத்யையிலும். பெரி.தி.4.9.1.

உறுக்கி - அதட்டி. அவள் உறுக்கி உண்ணச்சொன்னாற் போலே. மு.தி.34.

உறுதிப்பாடு - திண்மை (அத்யவஸாயம்). பேற்றில் உறுதிப்பாடு இருந்தபடி என்கை. க.நு.சி.2, பெரி.

உறுப்புத் தோல் - மான்தோல். உறுப்புத்தோலும் வெண்ணெய் பூசின உடம்புமான யஜமாந வேஷத்தோடே நின்ற நிலை காண...4.8.4-36.

உறுபூசல் - பெரும்பூசல். முன்பு தூசியேறின பேர்க்கு உரமாக நின்ற பேரணி உறுபூசலானவாறே திரள் அமுக்குமா போலே. 9.9.2-36.

உறைக்கப் பிடித்தல் - இறுகப் பிடித்தல். என் கையை உறைக்கப் பிடித்துக் கொண்டு. பெரி.தி.2.3.12.

உறைப்பு* - ஊற்றம். சேஷித்வ உறைப்புத் தோற்ற இருக்கிறவனை. 2.5.8-36.

ஊட்டி* - 1. கழுத்து. ருஷபங்கள் ஏழையும் ஊட்டியாக ஒருகாலே தழுவி. 1.5.1-36. 2. உணவு. வரபலபுஜபலம் ஊட்டியாக வளர்ந்த சரீரமானது. 2.6.6-24.

ஊட்டுப் பன்றி - உணவிட்டு வளர்த்த பன்றி. ஊட்டுப்பன்றி போலே நிணம் கொழுக்கும்படி போஷக பதார்த்தங்களை ஜீவித்து உடம்பை வளர்த்துக்கொண்டு திரிகையாலே ரக்தமும் கொழுப்புடைத்தாய் அழகிதாய் இருக்குமிறே. பெரி.தி.4.7.8.

ஊமைக் கூறன் - பேச முடியாதவன். ஊமைக் கூறனாகப் பட்டதெல்லாம் படுகையிறே. 6.2.3-36.

ஊர்ப்பகை - ஊரிலுள்ள எல்லோரும் பகை. ஊர்ப்பகையாய்த்து. 10.3.3-36.

ஊர்ப்பூசல் - ஊர்வம்பு. ஊர்ப்பூசல் விளைக்கும் நீ போரசக் கடவையோ? 10.3.7-24.

ஊர்ப்பொது - ஊராருக்குப் பொதுவானது. ஊர்ப்பொதுவை உன்னாலே உண்டறுக்கலாமோ. பாவை, 19-6.

ஊற்றங்கோல் - ஊன்றுகோல். ஓர் ஊற்றங்கோல் காண்கிறிலர். 7.9.2-36.

ஊற்றம் - உறைப்பு. ஊற்றம் போராமையோ. 5.4.3-36.

ஊற்று - தோன்றுமிடம். அந்த ஸௌலப்யத்துக்கு ஊற்றான ஜகத்ஸ்ரஷ்ட்ருத்வத்தையும். 3.6.0-12.

ஊற்றுவாய் - பிறப்பிடம். ரஸிகத்துவத்துக்கு ஊற்றுவாய் சொல்லுகிறது. 1.9.1-36.

எஃகுதல் - 1. பயிலுதல். இவற்றைப் பன்னினவர்கள் எஃகிக்கரை கண்டிருக்குமவர்கள். 7.10.3-36. 2. சுகிர்வது. அத்தை எஃகுவது, அதில் வெளிறான அம்சத்தைக் கழித்து அத்தைக் கொழுவிதாகச் சுருட்டுவது. 7.7.9-24.

எங்குத்தான் - எங்கு உற்றான் என்பதன் சிதைவு. விளைத்தவன் எங்குத்தான். 5.3.3-36.

எட்டம் - நீளம். எட்டம் போராதிருக்கை. க.நு.சி.1, பெரி.

எடுப்பு - 1. மிகுதி. குணங்களினுடைய எடுப்புக்கண்டு. பாவை, 27-6. 2. பேரின்பம். இப்படி வெறுந்தரையாய் இருக்கிற இடத்திலே காண் அன்று நாம் எடுப்பு எடுத்தது. பெ.தி. 2.7.7. 3. புதையல். முன்பு ரிக்தனாய் (வறியனாய்)ப் போந்தவன் கனக்க ஜீவிக்கப் புக்கவாறே, 'இவன் எடுப்பு எடுத்தான்' என்பர்களிறே. 8.1.3-24.

எண்மை - எளிமை. எண்மையையுடைய வாமநனாய். பெ.தி, 4.10.7.

எத்தனைவர் - எத்தனைபேர். உன்னைத் துவக்கவல்லார் எத்தனைவர் கிடக்கிறது. 10.3.8-36.

எதிர் - நிகர். இவர்கள் அடங்கலும் நமக்கு எதிரோ என்று இருக்கும் கம்ஸனுடைய மிடுக்கு அழிய. பாவை, 11-6.

எதிர்செறித்தல் - எதிர்நின்று பார்த்தல்; எதிர்த்து நிற்றல். எதிர்செறிக்க மாட்டாமல் கவிழ்தலையிட்டு நின்றார்கள். பெரி.தி.3.6.1.

எதிர்த்தட்டு* - மாறானது. அதுக்கு எதிர்த்தட்டாக இத்தையே நினைத்து. தி.கு.தா.14.

எதிர்த்தலை - எதிர்ப்பக்கம். அவன் தன்னளவும் பாராதே எதிர்த்தலையையும் பாராதே. தி.ச.வி.71.

எதிரிட்டுக்கொள்ளல் - பகைத்துக்கொள்ளல். அவனை எதிரிட்டுக் கொண்டு வாங்குகை அன்றிக்கே அவன் ஏறட்டுக்கொண்டிருக்கிற ஔதார்யத்துக்கு அநுரூபமாக வாங்கினான். பெ.தி.1.2.9.

எல்லாத்தையும் - எல்லாவற்றையும் என்பதன் சிதைவு. எல்லாரும் உன்னை உணரும்படி எல்லாத்தையும் உண்டாக்கினாய். இ.தி.48.

**எல்லைச் சதிரி** - திறமையின் எல்லையாக இருப்பவள். எல்லைச் சதிரியான சிந்தயந்தி. 1.4.3-9.

**எளிவரவு*** - இழிவு. நீங்கள் படும் எளிவரவே இது 4.6.7-24.

**எறட்டல்*** - 1. ஏற்றுதல். இவன் தலையிலே எறட்டுக் கைவிடக் கடவதோ. 10.4.10-36. அத்தை எறட்டுக்கொண்டு. 10.7.1-36. பாதகனானவன் ஸ்வபலத்தாலே எறட்டுக் கொண்டபடியாலே. 9.8.7-24. உபாயத்தை எறட்டுக் கொண்டு. 10.8.0-36. ஒரு ஸாதநத்தை எறட்டுக்கொண்டு. 10.10.0-24, 36. 2. மேலே வீசுதல். புடவையை முடித்து எறட்டுக் கூத்தாடினான். 10.9.4-36. கவரி எறட்டும். பெ.தி 8.8.9. இச்சொல் ஏறட்டு என்பதன் குறுக்கம்.

**என்கிறத்தில்** - என்பதில். குற்றேவல் என்கிறத்திலே. பாவை, 29-6.

**என்றத்தால்** - என்றதனால். ஆச்ரிதவிரோதிகளை அறப்பெற்றோமிறே என்றத்தாலே உகந்தான் ஆயிற்று. 4.8.10-36.

**என்றிய*** - எதற்கு. வாய்ச் சொல்லாலே தண்ணீர்ப்பந்தல் வைக்கலாய் இருக்க என்றிய இழக்கிறாய். பாவை, 16-6; 4.10.4-36; 7.9.2-36.

**என்னது** - எனது. என்னது என்று இருக்கை தவிர்ந்து. க.நு.சி. 5, பெரி. நான் என்னது என்று. 1.2.3-36.

**என்னம்புது** - என்ன. இதென்னம்புது, நமக்கு சிசுபாலன் மைத்துனன் அன்றோ என்றான். பாவை, 28-1.

**என்னாய்** - என்னவாய். என்னாய் முடியப் புகுகிறது என்று அறிகிறிலேன். தி.வி.24.

**என்னுங்காட்டில்** - என்று சொன்ன அளவில். திருமாலிருஞ்சோலைமலை என்றேன்; என்னுங்காட்டில் அத்யந்த நிரபேக்ஷனாய் இருக்கிற தான் பிராட்டியோடே கூட வந்து. 10.8.1-9.

**என்னென்பின** - என்னவென்ன. அபூர்வ பதார்த்தங்களைக் கண்டால் இவை என்னென்பின என்று அவை விஷயமாக இவனை வார்த்தைகள் கேட்டு. பெரி.தி.3.8 10.

**ஏத்தம்** - உயர்வு. ஏற்றம் என்பதன் சிதைவு. அந்த ரஸ்யதையில் உண்டான ஏத்தம் போலே ஐச்வர்ய ஸூசகமாய், அழகிதான திருத்துழாயையுடைய ஸர்வேச்வரனை. பெ.தி, 10.1.3.

ஏத்தாளிகள் - திருப்பள்ளியெழுச்சி பாடுபவர்கள். மாளிகையிலே ஏத்தாளிகள் வம்சாவளி சொல்லக் கேட்டு எழுந்திருக்கு மவர்கள். பாவை, 7-6.

ஏலக்கோலல் - முன்கூட்டியே எண்ணல். மேல் ஒரு காலம் ப்ரளயம் வரும் என்று ஏலக்கோலி ப்ரளயம் வந்தாலும் இங்குண்டோ என்று இளைத்துக் காட்டலாம்படி வைக்கும். 2.8.7-36.

ஏற்றஃகம் - பெருஞ்சிறப்பு. இதுக்குமேலே ஓர் ஏற்றஃகம் உண்டாகப் போனாளோ? 6.7.5-36.

ஏற்றம் - 1. உயர்வு. ஜ்ஞாநேந்த்ரியங்களுக்கும் அறிவுக்கும் வாய்த்தலையான ஏற்றம் உண்டாகில். 2.7.10-24. 2. பெருமை. சீல குணத்தில் ஏற்றம். 6.10.6-24. 3. மிகுதி. பூமியில் வர்த்திக்கும் பதார்த்தங்களிலும் ஏற்றம் உண்டிறே கடலில் வர்த்திக்குமவை; அவற்றுக்கு எல்லாம் வேண்டுமிடம் போந்திருக்கும். பெ.தி.1.10.1.

ஏற்றிலக்கை - (ஏறு + இலக்கை) மிகுந்த சம்பளம். ஏற்றிலக்கை பெற்று உண்கிற மிடுக்கையுடையரான துர்யோதநன் பரிகரம் தேர்க்காலிலே நெரித்த ஓசை. பலகரமான த்ரவ்யங்களை மிகவும் புஜித்து மிடுக்கரானவர் என்னும் இருபத்து நாலாயிரப்படி உரையினை நோக்கும்போது இதற்கு வலிமை தரும்பொருள் என்பது பொருளோ என்று எண்ணச் செய்கிறது. 7.4.5-36.

ஏற - அதிகமாக; கூட. மநுஷ்யாதிகளிற் காட்டில் சிலநாள் ஏற இருக்கிற இத்தைக்கொண்டு. 10.2.6-24.

ஏறப்போதல் - நோக்கிச் சொல்லல். ஸ்ரீவைகுண்டத்து ஏறப் போய். 10.2.11-36.

ஏறவருகை - நோக்கி வருதல். பகவத் ஸந்நிதியேற வருகையும். பாவை, 29-6.

ஏறிட்டுக்கொள்ளல் - ஏற்றிக்கொள்ளல். ஆச்ரயத்தில் இல்லாது. ஒன்றை ஏறிட்டுக் கொண்டாய்த்து வந்தது. தி.மா.28.

ஏறுதல் - முன்னேறிச் செல்லல். இராப்படை ஏறுவாரைப் போலே. 9.9.1.24.

ஏன்றுகொள்ளல் - ஏறிட்டுக்கொள்ளல். நான் போய் ரக்ஷிக் கிறேன் என்று ஏன்றுகொண்டு ப்ராஹ்மணனையுங் கூட்டிக் கொண்டு போய்க் காத்துக்கொண்டு நிற்கச் செய்தே. பெரி.தி. 4.8 2.

ஐசுகைசு - புன்மையான. ஐசுகைசான இருள்கொழுந்துகளை உடைத்தான ஸந்த்யையானது. தி.வி.69.

ஐயம் - சந்தேகம். இயற்கையிலே ஐயமாதல். தி.வி.75.

ஐயர்* - தந்தை. ஐயரையும் ஆய்ச்சியையும் அநுவர்த்தித்துப் பெருமாள் காடேற எழுந்தருள நின்றார். 3.9.9-36.

ஒக்க - உடன். ஈச்வரன் வளருகிறபோது ஒக்க வளரா நின்றுள்ள. 1.10.1-24.

ஒக்கலை - இடை. என்னுடைய ஒக்கலையில் இருப்புக்கு ஆசைப் பட்டு ஓடிவந்து. பெரி.தி.1,8.1.

ஒசிதல் - வழிதல். நிரம்பின நீர் புறம்பு ஒசியாமல் அம்ருதம்படும் படி உள்ளுடையவும் கடைந்த ஸர்வேச்வரன். நான்.தி.49.

ஒட்டு* - உறவு; தொடர்பு. தமக்கு ஒட்டறச் சொல்லுகிறார். 4.10.2-36.

ஒட்டுதல் - இசைதல். போக ஒட்டுவாரோ? க.நு.சி. 6,பெரி.

ஒட்டு விடுதல் - பிரித்து எடுத்தல். பூமிப்பரப்பு அடங்க அண்ட பித்தியோடே புக்குச் சேர்ந்தத்தை ஒட்டு விடுவித்து எடுத்த. பெ.தி.8.1.4.

ஒடியெறிதல் - 1. வீழ்த்தல். தன் கண்ணாலே அவனை ஒடி யெறிந்து நமக்காக்கித் தருமவளிறே. 9.8.2-24.

ஒடுக்குமாடு - கவர்ந்த செல்வம். இங்கே வந்து கொண்டு போன நாணும் நிறையுமான ஒடுக்குமாட்டைப் பாரித்துக்கொண்டு. 5.3.9-36.

ஒப்பிக்குமவர் - அலங்காரம் செய்வோர். அத்தை யழித்து ஒப்பிக்குமவர் அஸந்நிதியாலே ஒப்பனை அழிந்தாள் 2.1.6-36.

ஒப்பித்தல் - அலங்கரித்தல். ஹிரண்யனுடைய மார்பைப் பிளந்து குடல் மாலையை ஒப்பித்த அநந்தரம். பெ.தி.1.2.4.

ஒருக்கடுத்தல் - ஒருக்கடித்தல்; ஒருபக்கம் செல்லல். வாத விகாரத்தாலே வாயானது ஒருக்கடுத்து வலிக்க. பெ.தி. 4.5.9.

ஒருக்குதல் - சேர்த்தல். செந்நெல் தலையாய், அத்தை வரம் பிலே ஒருக்கி அரிகிறவர்கள் என்னுதல். பெ.தி.3.5.4.

ஒருங்க - ஒருபடிப்பட, பொருந்த. ஒருங்க - ஒருபடிப்பட. 5.8.8-24.

ஒருங்கவிடுதல் - ஒருசேரவிடுதல். அவற்றை ஒருங்கவிட்டு. தி.நெ.தா.17.

ஒருச்சரித்தல் - ஒருபக்கம் சாய்த்தல், சிறிது திறத்தல். எம்பார் கதவை ஒருச்சரித்து. 10.8.3-36.

ஒருத்தர் - ஒருவர். ஒருத்தரை ஒருத்தர் அறியாமல் கொடுக்கிற் செய்வது என். பெரி.தி.4.5.3.

ஒருதலை - 1. ஒரு பக்கம். ஒருதலை களிக்க, ஒருதலை துடிக்க. 6.1.4-36; 2. நிச்சயம். ஆச்ரிதர் ஒருதலையானால். தி.மா.28.

ஒருதலைத்தல் - ஒருமித்தல். மணியும் மந்த்ரமும் ஔஷதமும் நாட்டுக்கு வெவ்வேறிறே. இங்கு எல்லாம் ஒருதலைத்த விஷயம். பெரி.தி.5.3.6.

ஒருப்பாடு - முயற்சி; செயல். என்னுடைய மகளுடைய ஒருப்பாடுகள். 5.6.9-9.

ஒருபடிப்படுதல் - ஒரே விதமாக இருத்தல். ஸம்ச்லேஷவிச்லேஷங்களில் ஒருபடிப்பட்டிருக்குமவனை. 6.8.4-36.

ஒருவக் கிடத்தல் - தனிக்கிடந்து வருந்தல். என்னுடைய ப்ராப்தி ப்ரதிபந்தமேயோ இங்ஙனே ஒருவக்கிடந்து போவது என்னா நின்றாள். பெ.தி.8.1.2.

ஒருவிசை - ஒரு தடவை. ஒரு விசை பதினோராயிரமாண்டு இருந்தோம். 3.2.5-36.

ஒரோ* - ஒவ்வொரு. ஒரோ இடங்களிலேயிருந்தும், ஒரோ இடங்களிலே நின்றும். 5.2.4- 36.

ஒலியல் - மேலாடை. நாலிரண்டு ஒலியல்கொண்டு பரிமாற வேண்டும்படியாயிற்று கண்ணநீர் வெள்ளமிடும்படி. தி.வி. 99.

ஒலியன் - பூமாலை அல்லது ஆடை. ஒலியன் பணி மாறுதல், சாமரம் இரட்டுதல் அடைக்காய் திருத்தல்...தொடக்கமானவை. பாவை, 29-6.

ஒழுக்கு - தொடர்ச்சி. ஒழுக்கறாமல் நடக்கையாலே. க.நு.சி. 8, அழகு.

**ஒழுகு** - கணக்கு. நாடு பிடித்தார்க்கு ஒழுகைக் காட்டி(க்) குட்டமும் திடரும் மணலும் மடையுமாக எழுதி வெறும் பாழாக்கிக் காட்டுவாரைப் போலே. தி.மா.4.

**ஒறுவாதல்** - குறையுடையதாதல். தன் கார்யம் ஒறுவாமன்றோ. *1.4.5-24.*

**ஒன்பதின்கால்** - ஒன்பதுமுறை. ஒருகால் புக்காப் போலே ஒன்பதின்கால் புகுந்து திரிந்தான். அம.6, அழகு.

**ஒக்கம்*** - உயரம். ஒக்கத்தையுடைத்தாய்ச் சோலை செய்து நின்ற குருந்தை முறிந்ததும். *6.4.6-36.*

**ஒக்கி வைத்தல்** - ஆக்கி வைத்தல். தன்னை எனக்காக ஒக்கி வைத்த க்ருஷ்ணனுக்கு. *6.7.9-36.*

**ஓசழக்கு*** - *1.* எளிதாக (லகுவாக). தாய்மார் பிள்ளைகளை ஓசழக்காக எடுக்குமா போலே. *1.9.5-24.* *2.* தளர்த்தியாக. ஓசழக்காக மயிரை விரித்துப் பொகட்டபடியென்? என்று அதிலே வித்தனாயிருக்கும். தி.மா.*33.*

**ஓத்து** - *1.* வேதம். ப்ராஹ்மணரைப் போலே ஓத்துச் சொல்லித் திரியும். பாவை, *11-6.* *2.* அத்தியாயம். கீதை பதினெட்டோத்திலும் நெறியெல்லாம் எடுத்து உரைக்க. அம.9, அழகு. அர்ஜுநனுக்குப் பதினெட்டு ஓத்திலும். பெ.தி. *1.1.4.*

**ஓம்** - சரி; ஆம். ஓம், அது செய்கிறேன். *6.2.1-36.*

**ஓய்ஞ்சு** - ஓய்ந்து என்பதன் சிதைவு. வெண்கல த்வநி போலே ஓய்ஞ்சு செல்லா நின்றது. *7.2.4-24.*

**ஓரம்** - ஒரு பக்க அன்பு. ஆச்ரிதர் பக்கல் நீ பண்ணியிருக்கும் ஓரங்களை வெளியிட்டும். *5.10.1-24.*

**ஓலக்கம்** * - அவை. ஓலக்கத்திலே சொன்னான். *3.10.4-24.*

**ஓலைப்புறம்** - *1.* ஏடு. இதுதான் ஓலைப்புறத்திலே கேட்டுப் போமித்தனை. தி.மா.3. 2. ஓலையில் எழுதிய கட்டளை. ஓலைப் புறத்தில் செல்லாத தேசத்திலே எடுத்துவிடும் ராஜாக்களைப் போலே. தி.மா.0.

**ஓவுதல்** - *1.* நீங்குதல். வந்திடாய் என்கிற இதுதானும் ஓவிற்று. *7.2.4-24.* *2.* அறுதல். ஸ்ரீகஜேந்த்ராழ்வான் வ்யாபாரம் ஓவுந்தனையும் பார்த்து. பெ.தி.1.8.5.

**கசம்** - கயம்; குளம். அராக்கசமான சுனைகளிலே. *6.10.2-12.*

கட்டக் குடியன் - தொல்லைப்படுகின்ற குடும்பி. அத்தைப் பொறுத்து ஆச்ரயித்தாலும் கட்டக் குடியன், அப்ராப்த ஸ்தலம். நான்.தி.53.

கட்டடங்க * - முற்றிலும். ஆகையாலே கட்டடங்க விடுங் கோள் என்கிறார். 1.2.1-36.

கட்டளை * - 1. ஒழுங்கு. கட்டளைப்பட்டு லக்ஷணோபேதமாய் இனிதான கவிகளை. 7.9.5-36. 2. முறைமை. இவன் ஆடின கட்டளை. பெரி.தி.2.7.6. 3. எல்லை. கழுத்தே கட்டளை யாக நீரைப் பருகி வருகிற மேகங்கள். பெ.தி.2.1.10. 4. பணியழகு; அதாவது வேலைப்பாடு. கட்டளைப்பட்டு "நான்மாடக்கூடல்" என்னும் பேரையுடைத்தாய் இருக்கும் மதுரைக்கு நிர்வாஹகனாய். பெரி.தி.4.2.7.

கட்டுக் குலைதல் - சிதைதல். கற்பும் மடமும் கட்டுக் குலையா நின்றாள். 2.4.3-1?.

கட்டுக்கொலைதல் - கட்டுக்குலைதல் என்பதன் சிதைவு. சரீரம் கட்டுக் கொலைந்து தளர்ந்து. பெரி.தி.3.6.6;3.6.1.

கடக்கிடல் - கணக்கிடல். கறியமுதும் நெய்யமுதுமென்று கடக் கிட்டு. தி.வி.99.

கடகம் - பரிசை; கேடயம். அந்த சரவர்ஷத்தைத் தகைகைக்குக் கடகம் கோத்துப் பிடிக்குமவன் போலே. பெரி.தி.3.5.8.

கடகு - (ரக்ஷகம்) காப்பு. கடகு - ரக்ஷகம் என்பது பெ.தி.2.8.3 இன் அடிக்குறிப்பு.

கடமை - வரி. செய்த பயிருக்குக் கடமை இறுக்குமா போலே. 5.2.9-36.

கடவது - உரியது; தக்கது. இவையிரண்டும் ஜ்ஞாநம் பிறந்தார்க்குப் பேற்றளவும் அநுவர்த்திக்கக் கடவதாய் இருக்கும். 7.9.10-24. ஆழக் கடவ கல்லைக்கொண்டு நீரிலே அணைகட்டினவன். நான்.தி.77.

கடவார் - உரியவர். அதுக்குக் கடவாரைக் கேளிகோள். 2.6.8-36.

கடிப்பித்தல் - நீக்குதல். துர்க்கடங்களேயாகிலும் கடிப்பிக்க வல்லவன் திருவடிகளை. 10.1.1-9.

கடுக * - விரைவாக. கடுகக் கால்வாங்கிப் போகப் பாராதே கிடாய். 10.6.5-36.

கடுப்பு - விரைவு. மலையை எடுத்த கடுப்பைச் சொல்லிற்று. 7.4.10-9.

கடுமை - வேகம். ஹிரண்யனுடலைப் பிளந்துகொடு புறப்பட்ட போதைக் கடுமை. 7.6.11-36.

கடைச்செறி - ஒருவகை மோதிரம். ராஜபுத்ரர்கள் கையிற் கடைச்செறிக்குத் தோற்பாரைப் போலே. தி.வி.12.

கடையா - கொடிய பசு. கடையாவும் கழிகோலும் கையிலே பிடித்த கண்ணிக்கயிறும்...பாவை, 28-6.

கடையீடு - கடையனான கணக்கனது ஓலை. திருமுகம் மறுத்தவன் கடையிட்டுக்குக் கேட்கப் புகுகிறானோ? 1.4.4-36.

கண்காட்டி - ஆட்சியாளன்; நிர்வாஹகன். தேவர்கள் தங்களுக்குக் கண்காட்டியான ப்ரஹ்மாவோடே சென்று ஆச்ரயிக்கும்படி. பெ.தி.1.2.8.

கண்குழிவு - வருத்தம். பிறர் கண்குழிவு காணமாட்டாத துர்ப்பலைகாண். 6.10.10-36.

கண்செறியிடல் - மறைத்தல். ஆகாசத்தைத் கண்செறியிட்டாற் போலே யிருக்கை. 5.9.1-36. பொய்கையைக் கண்செறியிட்ட தாமரை போலே. 9.2.3-36.

கண்டகர் - பகைவர். நலிகிற ராவணாதி கண்டகரை 7.5.2-36.

கண்டசர்க்கரை - கற்கண்டு. சேர்ப்பாலும் கண்ட சர்க்கரையும் சேர்ந்தாப்போலே ஒன்றுக் கொன்று ரஸாவஹமாய்ச் சேர்ந்து. பெரி.தி.4.8.8.

கண்ணநீர் * - கண்ணீர். கண்ண நீர் தாங்கி வாழ்ந்திடுக. 2.1.5-36.

கண்ணழிவு * - 1. குறைவு. ஏதேனும் கண்ணழிவுண்டோ. 1.7.6-36. கண்ணழிவற்ற அழகையும் குணங்களையும் அநுபவித்தார். திருவா.1. 2. தாமதம். இவள் படியையும் பார்த்து அவன் படியையும் பார்த்தால் பேற்றுக்குக் கண்ணழிவில்லையாய் இருந்தது. தி.வி.33.

கண்ணறையன் - அருளற்றவன். கண்ணறையனாய் இரா நின்றாய் என்னுதல். 7.2.4.

கண்ணிக்கயிறு - குறுகிய கயிறு. கண்ணிக்கயிறும், கற்றுத் தூளி யாலே தூஸரிதமான திருக்குழலும். பாவை, 28-6.

கண்ணெச்சில் - பார்வைக்குற்றம். நரஸிம்ஹத்தினுடைய அழகைக் கண்டு கண்ணெச்சில் படுவார் இல்லை என்னுமத்தைப் பற்ற. பெ.தி.1.7.4,

கண்முகப்பு - கண்முன்பு. கண்முகப்பே...தி.மா.11.

கண்வட்டம் * - கண்முன்பு. நீயுங்கூட என் கண்வட்டத்திலே உலாவித் திரிய வேணும் என்கிறாள். 10.3.8-9.

கண்வளர்தல் - உறங்குதல். கண்வளர்ந்தருளினவனே. 5.8.4-12.

கணக்கு - மைத்துனமை முறை. கணக்காலே அம்பாலே பூசல் செய்யலாம் ஜந்மமன்றே. அஜ்ஜாதிக் கடைத்த வெற்றியைக் கொண்டானாயிற்று. பெ.தி.2.2.4.

கணயம் - கோட்டை. கணயத்துக்குள்ளே இருக்கிற நாமோ அஞ்சுவோம். தி.நெ தா.21,பட்டர்.

கணிசம் - எண்ணம், நோக்கம். கணிசம் அவ்வளவல்லாமையாலே. 7.4.1-36.

கணிசிக்கை * - சிந்திக்கை. விரஹச்ரமஹரமான மார்வு தன்னைக் கணிசிக்கை. பெ.மடல், கண்ணி,74.

கணையம் - கோட்டை. கணையத்துக்குள்ளே இருப்பார். 5.4.7-36.

கதிரில்லி - நுண்துளை. கதிரில்லி போலே இருக்கிற பாஹ்யேந்த்ரியங்களாலே. நா.தி. 62.

கப்படம் - அழுக்குத்துணி. கழுத்திலும் கப்படங் கட்டி. 6.10.8-36.

கப்புக்கால் - பக்க பலமாகத் தரப்படும் ஊன்றுகோல். இரண்டு அருகும் கப்புக்கால் கொடுக்க வேண்டும்படியிறே இருப்பது. பெ.தி. 1.3.2.

கமர் - வெப்பம். கமர் பிளந்த இடத்தே ஒரு பாட்டம் மழை விழுந்தாப் போலே இருக்கை. 3.7.4-36.

கரைச்சல் - அச்சம். கரைச்சல்கெட்டு மார்பிலே கைவைத்து உறங்கப் புக்கார். தி.ப. 1.

கரைதல் - வருந்துதல். நீ ஒன்றுக்கும் கரையாதே, உன் ஸர்வ பரத்தையும் என் தலையிலே ஸமர்ப்பித்து நிர்ப்பரனாயிரு. நா.தி. 11-10.

கருவூலம் - திருவாபரணங்களிட்டு வைக்கும் அறை; ஸ்ரீபண்டாரம் என்றபடி. பழைய நெஞ்சைத் திருத்தின அளவு அன்றிக்கே, கருவூலத்திலே ஒரு நெஞ்சைத் தந்தாய். 2.7.7-36.

கலசப்பானை - நீர்கொண்டு வரும் சொம்பு. கலசப்பானை எடுப்பார்க்குக் கூச வேணுமோ? தி.நெ.தா 3.

கலசல் - கலத்தல். உன்னை உபாயாந்தரங்கள் கலசமாமே நெஞ்சிலே விளங்கும்படியாக அத்யவஸித்து. தி.மா. 40. நடுநடுவே கலசிக்கோத்த. பெரி.தி. 1.3.2.

கலம்பகன்* - பல்வேறு பூக்களால் ஆகிய மாலை. கலம்பகனல்லது தனிப்பூச்சூட்டப் பொறாத குழலைப் புஷ்பங்கொண்டு அலங்கரிக்கிறிலள். பெ.தி. 2.7.2.

கலவி* - கூட்டம். இப்படியுள்ள கலவியாலே என்னை அடிமை கொண்டவனே. 2.6.8-9.

கலவிருக்கை* - பொருந்தியிருக்கும் நிலையான இடம். ஸ்ரீவைகுண்டத்தைக் கலவிருக்கையாக உடையவன். 1.5.4-36.

கலிக்கட்டு - குஞ்சி என்பது அடிக்குறிப்பு. திரண்ட கட்டு எனல் தகும். இவள் குழலை வாரியெடுத்துப் பிடித்துக் கலிக்கட்டாகக் கட்ட என்று புக்கால் அதுக்குப் பிடி கொடாது. பெ.தி. 8.2.9.

கலித்தனம் - பசியனாகை. அடிமையில் கலித்தனமிருக்கிறபடி. பெ.தி. 9.3.8.

கலியர்* - பசியர். கலியர் சோற்றை வர்ணிக்குமா போலே. பாவை, 18-6.

கவட்டித்தல் - தாவுதல். தாவி - கவட்டித்து. 6.5.3-12.

கவிபாட்டுண்கிறவன் - கவியால் பாடப்படுபவன். கவி பாடுகிறவனுக்கும் கவிபாட்டுண்கிறவனுக்கும், கவிக்கும் குற்றமாகிற ஏதமில்லாதபடியிருக்கிற ஆயிரத்தில். 1.6.11-9.

கழகம் - 1. ஓலக்கம். திருக்குரவைக்கு முற்சாமமாகப் பெண்களோடே கழகமிருந்த இருப்பாதல். 5.10.6-36. 2. கூடியிருத்தல். அப்ஸரஸ்ஸுக்களோடே கழகமிருந்து. 6.4.1-36.

கழஞ்சு - ஒரு நிறுத்தல் அளவை. கழஞ்சு பொன்னுண்டு என்று அறிந்து. இ.தி. 33.

கழனிக்கட்டளை - வயல்ஒழுங்கு. அழகிய கழனிக்கட்டளையும் கண்டநுபவிக்க வேண்டும்படி நிரதிசய போக்யமாய் இருந்துள்ள தேசம். பெரி.தி. 4.4.9.

**கழனிமிண்டர்** - நன்றி கொன்ற பாவிகள். பாகவதர் அருகே கழனிமிண்டர்இருந்தால் அஸஹ்யமாய் இருக்குமா போலே. சி.மடல், கண்ணி, 33.

**கழிப்பன்** - கழிக்கப்படுவது. புருஷார்த்தத்தைப் பற்றக் கழிப்பன் ஆகிறது. 8.10.3-36.

**கழிய** - மிகவும். தீரக்கழிய அபராதம் பண்ணின பின்பு. பெரி.தி. 3.10.0.

**கள்ளன்** - திருடன். விடில் கள்ளனாகையாலே ஓடிப்போம். க.நு.சி. 1, நஞ்சீயர். கள்ளர் - திருடர். கள்ளர்பட்டது படுவதே. பாவை, 25-6.

**களிப்பு** - மிகுதி. 'ஈச்வரன் ஒருவன் உளன்' என்று அவனுடைய ஸத்பாவத்தை இசையாது ஒழிகைக்கு ஹேது உடம்பு தடித்து ருதிரக் களிப்பாலே ஆயிற்று. பெ.தி. 1.2.4.

**களிறு** - ஆண்யானை. பிடியை இழந்ததொரு களிறு தன் ஆற்றாமையாலே அமணானைப்பட்டுத் திரியுமா போலே. தி.வி. 15.

**கறியமுது** - சமைக்கப்பட்ட காய்கறி. கறியமுதும் நெய்யமுதும் என்று கடக்கிட்டு. தி.வி. 99.

**கறைச்சீரை** - அழுக்குக்கந்தை. குப்பை கிளறினால் உள் மறைந்து கிடக்கிற கறைச்சீரை முதலாயுள்ளவையிறே வெளிப்படுவது. 3.9.5-36.

**கனக்க** - மிகவும். கனக்க நோவுபட்டு. பெரி.தி. 3.9.5.

**கனவிது** - கனமானது. கனவிதான காதுப்பணியை உடைய. பெரி.தி. 1.2.12.

**கனவியது** - கனமானது. மோக்ஷத்தைப் பெறுகைக்கு அடியாய் இருப்பதொரு கனவியதொன்று சேதநன் தலையில் கிடக்க வற்றோ? 7.2.2-24.

**காக்கைப்பொன்** - பொம்மைமீது ஒட்டும் பளபளப்பான தாள். ஒருவன் ஒரு குழமணனைப் பண்ணி அதின் கழுத்திலே காக்கைப் பொன்னைத் தொற்றி. 3.1.10-36.

**காட்டழைப்பு** - முகங்காட்டுவதற்காகச் செய்யும் அழைப்பு. அத்தேவதைகளை ஆச்ரயிக்கைக்காகப் பண்ணும் வ்யாபார மாகிற காட்டழைப்பும் அவன் நெகிழ்ந்தபோது ஒழியும்-முடியும். நான்.தி. 38.

காடிச்சால் மூலை - வடகிழக்குத்திசை. எம்பெருமானார் காடிச்சால் மூலையில் தேவதையை ஆச்ரயித்தாராகில் அதுவே எங்களுக்கு ஆச்ரயணீய வஸ்து. க.நு.சி. 1,பெரி.

காணியாளல் - நிலத்தை ஆளுதல். அவ்வூரிலே சென்று காணி யாள வேண்டும்படியான. தி.மா. 29.

காதுப்பணி - காதணி. இவர்களுடைய காதுப்பணியும் செவிப் பூவும் பட்ட விமர்த்தத்தாலே. பாவை, 27-6.

காரியப்பாடு - செயல். ஒரு காரியப்பாடு இல்லாமையாலே நாலுபாடும் பேருகிறபடி. பாவை, 23-3.

காருகால் - இந்தளம்; நெருப்பு. காருகாலிலே கருமுகை பூத்தாற் போல. பெ.தி. 3.6.7.

கால்கடியர் - ஆற்றலுள்ளவர். இப்பங்களத்தை விட்டுக் கால் கடியரானவர்கள் ஏத்தப் புக்கால் எல்லை காணப் போமோ? 3.1.7-36.

கால்காணித் தெய்வம் - வேறு சிறு தெய்வம். அவனையொழியப் புறம்பே கால்காணித் தெய்வம் உடையோமோ நாம்? திருவா. 7.

கால்பிடித்தல் - வேண்டுதல். எல்லோரையும் ஒக்கல் கால் பிடிக்கிறார். 3.9.1-24.

கால்வாங்குதல் - மீளுதல். பொய்யிலே வ்யவஸிதராய் நின்ற நிலையில் நின்று கால்வாங்கிய நாம். தி.மா. 15.

காவணம் - பந்தல். பாடுவார்க்குக் காவணமிட்டுக் கொடுப் பாரைப் போலே. பெ.தி.3.8.1.

காற்கடை - காலடி. அப்ராப்த விஷயங்களின் காற்கடையிலே. பெரி.தி. 5.4.7.

காற்ற - 1. மீட்க. இரும்புண்ட நீரானது காற்றவொண் ணாதாப் போலே. 10.10.5-24. காற்றப் போகாத நஞ்சானவனை. 2.3.6-24. 2. தணிக்க. நம்முடைய பாபங் களுக்குக் காற்ற ஒண்ணாத நஞ்சு. பெ.தி. 1.1.10.

கிட்டம் - உலோகத்துண்டு. அருகில் என்று பொருள்படும் பேச்சு வழக்காகக் கொள்ளலாம். இரண்டு கிட்டம் தன்னிலே சேரக் கிடக்க அதிலே யொன்று பொன்னாயிருக்குமா போலே. 5.1.0-36. இதன் எதிர்ப்பதம் எட்டம் (நீளம்).

கிடக்கிடும் - கிடக்கட்டும். அது கிடக்கிடும் உன் மகள்தான் இவ் ஈடுபாடுகள் தானே பொறுக்கக்ஷமையோ என்ன; இவற்றுக்கு இளைக்குமவளோ இவள் என்கிறாள். பெ.தி.8.2.7.

கிடங்கு - வெற்றிலைக் கொடிக்கால்; நீர்நிலை. படர்ந்த இலைகளை யுடைத்தான தெங்குகள் கிடங்கின் கரையிலே நிற்கும். பெ.தி.5.2.8. குறிப்புரையில் வெற்றிலைக் கொடிக்கால் என்று பொருள் காணப்பட்டாலும் பாட்டினை நோக்கும்போது நீர்நிலை என்பதே சரியான பொருளாகத் தோன்றுகிறது.

கிடை - கிடத்தல்; அதாவது படுத்திருத்தல். ஆர்த்த ரக்ஷணத்துக்காகவிறே இக்கிடை. பாவை,3-6. 2. வேதம் ஓதுமிடம். ஒரு கிடையிலே பல பிள்ளைகள் ஓதா நின்றால். பாவை, 10-6.

கிடைப்பாடு - கிடக்கை. நாயகன் பக்கலிலே அபிலாஷை சென்ற அளவிலே நெஞ்சில் கிடைப்பாடுஞ் சொல்லுகைக்கும் அவனைக் கிட்டுவிக்கைக்கும் துணையானாய். தி.நெ.தா. 21, பட்டர்.

கிடையழகு - கிடக்கும் அழகு. தன் கிடையழகைக்காட்டி ரக்ஷித்தான். அம. 9, அழகு.

கிண்ணகம்* - வெள்ளம். கிண்ணகம் பெருகாநின்றால் ஆறுகளும் கால்வாய்களுங் குளங்களும் நிறைந்து ஸமுத்ரத்திலுங் குறைவற்றுப் புகுமோபாதி. தி.வி.2.

கிலாம் - ஊடற் காலத்துக் கோபம். பாட்டுத்தோறும் கிலாம் தோற்றச் சொல்லுகிறாள் என்று பட்டர் அருளிச் செய்யும்படி. 6.1.1-36.

கிலாய்க்கை* - வெறுத்தல். தனிமையைப் பார்த்துக் கிலாய்க்கையும்...ஆத்ம தர்மமிறே. தி.நெ.தா.9.

கிழாயார் - பெரிய மனிதர். கிழாயார் படுகிறது இதுவானால் நான் உன்னை அறிகை என்று ஒரு பொருள் உண்டோ? திருவெழு. அடி, 21.

கிழார் கிழார் - மிகப் பெரியவர். எத்தனையேனும் கிழார் கிழார்க்கும் அதுவல்லது வலிய புகலில்லை. 6.3.7-36.

கிழிச்சீரை - பணம் வைத்திருக்கும் துணிமுடிப்பு. முன்பு தோற்றினவற்றைப் பறித்துக்கொண்டு பின்பிறே கிழிச்சீரை யறுத்துக் கொள்வது. 5.3.2-36.

கிளப்பம்* - கிளர்ச்சி. திரைக்கிளப்பத்தை யுடைத்தான கடலில். பெரி.தி.1.3.6.

கிளர்த்தி* - கிளர்ச்சி. தாயும் தகப்பனுஞ் சேரவிருக்க ஸம்வதியாதபடியிறே அவனுடைய கிளர்த்தி. 2.4.10-24.

கிளவி - பேச்சு. நலம் பாராட்டு என்பதொரு கிளவியாய் அவளைக் கொண்டாடுகிறான். தி.வி.55.

கிளற்றி - கிளர்ச்சி. பெரிய கிளற்றியோடே. பெ.தி.10.6.3.

கிற்றல் - சாதித்தல்; வற்புறுத்திச் சொல்லல். நீ கிற்ற நினைத்த இன்மை காட்ட வொண்ணாதாப் போலே. 1.1.9-9.

கினிய - விழுங்க; கபளீகரிக்க. ஒரு மேருவைக் கினிய ஒரு மேகம். 3.10.1-24. ஒரு மேருவைக் கினிய காளமேகம் படிந்தாற்(ர்) போலே. 3.8.1-36. கினிய என்பது குனிய என்பதன் பிழை பட்ட வடிவம் என்று தோற்றுகிறது.

கீசகம் - தலைக்கட்டு. கர்ணன் விட்ட ஸர்ப்பசிரஸ்ஸூப்போலே கீசகத்தோடே போக்குமென்னுதல். தி.மா.40.

கீண்ட - கிழித்த. கேசியை நெடிக்கோரையைக் கீண்டாற்போலே கீண்டு. மு.தி.27.

கீர்த்தித்தல் - பரக்கச் சொல்லல். தம்முடைய வ்ருத்திஇருந்தபடி அடையக் கீர்த்தித்தாரிறே முன்பே. பெ தி.1.6.9.

கீழாண்டைச்சிகை - பழங்கணக்குகளிலே இருக்கிற பாக்கி. கீழாண்டைச் சிகையாயிற்றுக் கணக்கிடுகிறது. 1.4.7-24.

கீழுற்றை - கீழ் உள்ளது. இது மேலுற்றைக்கிட்ட மர்யாதையோ! கீழுற்றைக்கும் ஏதேனுமுண்டோ. 5.7.3-36.

கீழோலை - மறைமுகமாக அனுப்பும் ஓலை (ரகசிய ஓலை). அராஜகமான தேசத்தில் வன்னியர் அடையத் தங்கள் லே கைசெய்து கீழோலைவிட்டு நாலுவாசலையும் வந்து பற்றுமா போலே. பெ.தி.9.5.1.

குச்சி - திறவுகோல் துவாரம். மேகமானது மின்னாகிற கை விளக்கைக் கொண்டு குச்சிவழியே புக்குத் திருவாராதநம் பண்ண இருக்கின்ற ஆச்சர்யபூதனை. பெ.மடல், கண்ணி, 124.

குசவன் - குயவன். குசவனையும் புறமடக்கியையும் போலே. திருவா.7.

குசாண்டு - மிறுக்கு. சேதநனுடைய நன்மை தீமைகளைக் கணக்கிட்டுப் படிவைக்கும் குசாண்டுள்ள ஈச்வரகோஷ்டி. பாவை, 4-3.

குஞ்சித்தல் - மடங்குதல். நடந்த போதைக் குஞ்சித்த திருவடிகளில் வீரக் கழலுக்கும் அகவாயில் சிவப்பையுங் கண்டு காப்பிடுகிறார்கள். பாவை, 24-6.

குட்டம் - குழி. துர்மாநம் கிடந்த இடத்தைக் குட்டமிட்டு இடந்தான் காணும். 10.6.4-36.

குடல்துடக்கு* - உடல் தொடர்பு. குடல் துடக்கையுடையவனே. 4.9.2-36.

குடல்தொடக்கு - உடல்தொடர்பு. இழவுபேறு தம்மதாம்படியான குடல்தொடக்கு உண்டாயிருக்க, குற்றத்தைக் கணக்கு இட்டது அமையாதோ. 1.4.7-24.

குடிக்காடு - ஊர். ஐந்து குடிக்காடு அமையும். 8.5.8-36.

குடிநீர் - கஷாயம். நோவு மிக்கதனையும் நாலைந்து குடிநீரெழக் குடிக்குமாப்போலே. பாவை, 5-6.

குணாலையிடல் - கூத்தாடுதல். ஒரு கோவையாகக் கூடிக் குணாலையிட்டுத் திரியுங்கோள். பெரி.தி.4.6.9.

குணுங்குநாற்றம் - முடைநாற்றம். இன்றும் அகப்பட அந்தக் குணுங்குநாற்றம் வாயிலே தோன்றும்படியிறே பெரிய பெருமாள் கண்வளர்ந்தருளுவது. அம.10, அழகு.

குதறல் - அதிகமாதல். வ்யாமோஹத்தாலே குதறிச் சிவந்த கண்களை உடையவனே. தி.மா.35.

குதை - முயற்சி, சீற்றம். குதை மாறுகிறிலன். 5.1.10-36. சீறா எரியும் - இவை முடிந்துபோகச் செய்தேயும் கொண்ட குதை மாறாதே, இரை பெறாப் பாம்புபோலே ஜ்வலியாநிற்கும். 6.10.2-36.

குந்தாலி - மண்வெட்டி. அதன் (கங்கையின்) கரையிலே குந்தாலி கொண்டு கிணறு கல்லித் தன் விடாய்க்கு உதவ நாக்கு நனைக்க இருக்குமா போலே. 4.10.1-36.

குந்தியடியிடல் - உட்கார்ந்து அடியிடல். சேதந த்வாரா குந்தியடியிட்டு நிற்குமவனிறே அவன். 10.7.3-36.

குமிழ்த்தல் - முகுளித்தல்; குமிழிபோலே ஆதல். இரண்டு கடைவாயையும் குவித்து ஊதுகிறபோது சிவந்த திருப்பவளமானது அகவாயில் உண்டான வாயுவினுடைய பூரிப்பாலே குமிழ்க்க. பெரி.தி.3.6.8.

குருச்சி - ஊர். குறிச்சி என்பதன் சிதைவு. சேதநரிலே ஒரு குருச்சியில் பிறவாதார் இல்லையிறே. தி.மா.29.

குருவிந்தக்கல் - காவிக்கல். குருவிந்தக்கல்லை மாணிக்கமென்று நினைத்திருந்தால் ரத்நமாகாதிறே. இ.தி.44.

குலைசெய்தல் - கரைகட்டல். காவேரி... பெருவெள்ளமாக நீரைக் கொண்டு வந்து சிலர்க்குக் குலைசெய்து தகைய வொண்ணாதபடி ஸர்வோதிக்கமாகப் பாயாநிற்கும். தி.மா.24.

குவால் * - மிகுதி. இத்தையே குவாலாகக் கொண்டு. 2.7.3-36

குழமணன் - மரப்பாச்சி. ஒரு குழமணனைப் பண்ணி. 7.5.4-36 எங்கள் குழமணன் கொண்டு அடிக்கழிவு செய்தால்... 6.2.6 - 9.

குழைச்சரக்கு * - குழையென்று பையாய், பையில் சரக்குப் போலே ரக்ஷ்யம் (பாதுகாக்கப்படுவது) என்றபடி என்பது பெ.தி.1.5.1 அடிக்குறிப்பு. ஆற்றலற்ற பொருள். பெரிய திருவடியும் குழைச்சரக்காம்படிகாண் போன கடுமை இருக்கிறபடி. தி.நெ.தா.23. நீ ரக்ஷகையாக, நாங்கள் உனக்குக் குழைச்சரக்கானபடி அழகிதாயிருக்கிறது. பாவை, 10-3.

குழைசரக்கு - மென்மையான பாதுகாக்கப்பட வேண்டிய பொருள். குழை சரக்கு அறுத்துக்கொண்டு போனபடி. 6.7.0-36.

குளப்படி - மாட்டின் குளம்புபட்ட அடிச்சுவடு. குளப்படியிலே கடலை மடுத்தாற்போலே. 6.2.6-36.

குளித்தல் - மூழ்குதல். இலக்கான ஆனையிலேபட்டு உள்ளே குளித்தது என்கிறான். தி.வி.22.

குளிர்த்தி * - குளிர்ச்சி. அக்குளிர்த்திக்கு அடியான உள்ளில் வாசத் தடம் இருக்கிறபடி. 9.7.3-36.

குளிரடியுண்ணல் - குளிரால் வருந்துதல். அவர்கள் குளிரடியுண்கிற தசையிலே ரக்ஷித்தவன். 3.3 8-24.

குறந்திடல் - வார்த்தல். புண்ணிலே புளியைக் குறந்திட்டால் கரிக்குமாபோலே. பெரி.தி.2.9.1.

குறள்கயிறு - குறுகிய கயிறு. இவன் அகப்பட்ட அப்போதாக ஒரு நெடுங்கயிறு தேடப்போகாதே, பல பிணைகளையுடைய குறள்கயிற்றாலே. பெரி.தி.11.5.5.

குறளர் - குறுகிய வடிவினர். கூனர் குறளர் ஸஞ்சரிக்குமா போலே. தி.நெ.தா.6.

குறிச்சி - ஊர். இருக்கைக்கு ஒரு குறிச்சியுங் கொடோம். 6.6.4-36.

குறியழிதல் - வேறுபாடு உறுதல். குறியழியாத முலை படைத்தவர்கள். சி.மடல், கண்ணி, 13.

குறுணி - ஒரு மரக்கால் குனியக் குறுணி பற்றுங் காலமெல்லாம் வ்யர்த்தமே இருந்தேன். பெ.திருவந்.8 ż.

குறுந்தெரு - சிறதெரு. குறுந்தெருவோடு நெடுந்தெருவோடு வாசியறச் செங்கழுநீரின் பரிமளம் பரக்கிறபடி. 9.6.1-24.

குறை - செய்யவேண்டுவது. நீர் கிட்டி அநுபவிக்கும் அதுவே குறையாக நாம் வந்திருந்தோமே? பெ.தி.1.7.0.

குன்றிச்சூடு - குன்றிமணியின் உச்சி. சிறு ப்ரஜை 'குன்றிச்சூடு' என்று நெருப்பிலே கைவைக்குமாபோலே. 9.1.3-36.

கூட்டரவு * - கூட்டம், கலப்பு. இனி விச்லேஷவ்யஸநம் பிறவாத கூட்டரவாக வேணும். பாவை, 27-6.

கூடு - உடம்பு. இவளைக் கூட்டோடே கொடுத்து. 4.9.3-36.

கூர்க்கப்பார்த்தல் - கூர்ந்து பார்த்தல். தன்னைக் கூர்க்கப் பார்த்துக்கொண்டு நின்றவர்களை ஸம்போதிக்கிறாள். சி. மடல், கண்ணி, 25.

கூரியன் - கடியன். தன் செயலிலே நோக்காக இருப்பவன். கடியன் - கூரியன். 5.3.5-36.

கூழ்ப்பு - ஐயம். கூழ்ப்பை அறுத்துத்தந்த உபகாரத்தை உண்டறுக்கப் போமோ? தி.நெ.தா.2.

கூழைக்காது - நீட்சியில்லாத காது. 'கூழைக்காது சுணைக்காது' என்றாப் போலே சொல்லிச் சிரியாதபடியாக. பெரி.தி. 2.3.10.

கூறுசெய்வார் - மணியக்காரர். ராஜாக்கள் ஊர்தோறும் கூறு செய்வார்களை வைக்குமா போலே. 5.2.8-36.

கூறை - புத்தாடை. பின்னை கூறையுடுக்கையிறே அடைவு. பாவை, 27-6.

கூறைப்பை - ஆடை வைக்கும் பை. தானே கூறைப்பையும் சுமந்துகொண்டு. 4.1.2-36.

கூறையுடை - புடைவை. ஆருடைய கூறையுடை கண்டு உகக்கக் கடவ நெஞ்சு இதிலே அகப்பட்டது. அம. 2, அழகு.

கெடுவாய் * - வார்த்தைப்பாடு. கெடுவாய், அவ்வடிவு ஹேய ப்ரத்யநீகங் காண். 5.3.1-36.

கெடுவிகாள் - கெட்டுப்போகிறவர்களே! கெடுவிகாள். 1.3.7-36.

கேவலர் - கைவல்யப் பேற்றை விழைபவர். ஆத்மலாபத்துக்காக உபாஸிக்கிற கேவலர் வந்து தோற்ற. 8.3.2-36.

கேழ்வி - கேள்வி என்பதன் சிதைவு. கேழ்வியாலே அநுஸந்திக்கப் படுவதான. பெ.தி.2.5.9.

கைக்கூட்டம் - அணிவகுப்பு. கைக்கொண்டு - உடன்வந்திபோலே; கைக்கூட்டம் இட்டாப்போலே என்னவுமாம். கைக்கூட்டம் இட்டாப்போலே என்றது அணிவகுத்தாப் போலே என்றபடி என்பது அடிக்குறிப்பு. பெரி.தி.5.2.1.

கைக்கூட்டன் * - கூட்டாளி; உடன் சேர்ந்து இருப்பவன். ராஜபுத்ரனோடு வினையுண்ட கைக்கூட்டனுக்கும் பால்திரளை இடக்கடவதுகாண். திருவெழு. அடி, 13.

கைக்கூலி * - கைமேல் கூலி; கைக்கூலி கொடுத்துக்கொள்ள வேண்டும் நோய். தி.வி.53.

கைகழிதல் - 1. எல்லைகடந்து போதல். ஸம்ஸாரத்தில் கைகழிந்த ஆழ்வாரை. தி.மா.0. 2. நெடுத்தொலைவு விலகிச்செல்லல். கை நீட்டி எடுத்தாலும் எட்டாதபடி கைகழியப்போனேன். பெ.தி.1.1.1.

கைசெய்தல் - ஒன்று கூடுதல். அராஜக தேசத்தில் வன்னியர் அடையத் தங்களிலே கைசெய்து கீழோலை விட்டு நாலு வாசலையும் வந்து பற்றுமா போலே. பெ.தி.9.5.1.

கைத்தளை - கைவிலங்கு. கூறுசெய்த ஊரிலே கையும் கைத்தளையுமாய்த் திரிவாரைப் போலே. பெ.தி.1.5.8.

கைதவம் - பொய். ஆழ்வார் ப்ரபாவம் சொன்ன அது கைதவமன்று. க.நு.சி.10, அழகு.

கைதொடன் - 1. அருகில் இருப்பவன். ஆச்ரிதர் கைதொடனான என்னையுங் கண்டுகந்து நிற்கிறவனை. பெ.மடல், கண்ணி, 123. 2. தன்கையாலேசெய்பவன். "அத்தனையோ இன்னும் செய்தது உண்டோ?" என்ன, "கைதொடனாய்க் கொண்டு கொன்றே போந்தேன்" என்கிறார். பெ.தி.1.6.6.

கைதொடுமானம் - உதவி. இவன் ஸத்தை பெறுகையாவது - அவன் ப்ரீதிக்குக் கைதொடுமானமாகை. தி.மா.45.

கைப்பற்று -முயற்சி. இது தான்தோன்றியான கைப்பற்று அடியாக வந்தது ஒன்றல்ல. 9.4.9-36.

கைப்பாணி - மணியாசகம்; மெழுகும் பலகை. கைப்பாணியிட்டு மெழுக்கு வாசியிலே ப்ரமிக்கும்படி பண்ணின. 5.1.5-36.

கைப்புடை - திண்ணைப்பக்கம். ப்ரஸாதத்தைச் சூடிக் கைப்புடையிலே கிடப்பாரைப்போலே. 2.7.5-36.

கைம்முதல் - கைப்பொருள். கைம்முதல் அற்ற காலைக்கு ரக்ஷகனாவான் ஒருவன் வேணும் என்று. 9.1.4-36.

கையடைப்பு - அடக்கமானது; வசமானது; கட்டுப்பட்டது. நெஞ்சும் இவள்தனக்குக் கையடைப்பாகையாலே. 2.4.3-36.

கையிலான் - ஆற்றலற்றவன். தன்னுடைய ரக்ஷகத்வம் இழந்து கையிலான். பெ.தி.2.5.8.

கைவந்திருக்கை - நன்கு பயின்றிருக்கை. கைவந்திருக்கையாகிற. 1.3.3-6.

கைவாங்குதல் - சோர்தல். கடலைக்கடையப்புக்கு தேவஜாதி இளைத்துக் கைவாங்கின அளவிலே. 3.8.1-36.

கைவாரம் - கையழகைக் காட்டிக் கவர்தல்; வாரம் என்பதற்குக் குத்தகை என்பது நேரான பொருள். என்னை நோக்கிச் சில கைவாரங் கொள்ளத் துடங்கினார். தி.நெ.தா.21,பட்டர்.

கொட்டகம் - சிற்றில். சிறுசோற்றையும் கொட்டகத்தையும் அழித்திட்டு. பெ.தி. 2.8.2.

கொட்டில் - இல்லம். தன் கொட்டில் ஏறப் போனானிறே ராவணன். பாவை,21-6.

கொடுக்கு - முன்தானை. கொடுக்கும் கொய்சகமும் வைத்துடுக்கலாம்படியான அளவையுடைத்தாய். திருவா.1.

கொடுவைப்பசு - பொல்லாத பசு. கொடுவைப் பசுக்களை நியமித்துக் கறக்கைக்காக வீசுகோலைக் கையிலே கொண்டு திரியுமவர். 4.8.4-36.

கொண்டக்கோல் - கொண்டைக்கோல் என்பதன் சிதைவு. அர்ச்சாவதாரத்துக்குக் கொண்டக்கோல் நாட்டின தேசமிறே திருமலை. பெ.தி.8.2.6.

கொண்டாட்டம் - பாராட்டு. இவன் கொண்டாட்டத்தை 4.1.5-9.

கொண்டி - கொள்ளையடிக்கப்பட்ட பொருள். கொண்டி யோடே பிடித்துக்கொண்டு. பெ.தி.2.10.6.

கொண்டிதிரிதல் - பட்டிமேய்தல். கொண்டிதிரியும் பசுப்போலே. பெ.தி.1.6.2.

கொண்டைக்கோல் - 1. மேலே முடிச்சுப் பெற்ற கொம்பு. 2. ஆழத்தை அளத்தற்கு நீரில் நடும் கொம்பு. ருஷிகள் கொண்டைக்கோல் கொண்டு ஆடுகை தவிர்ந்து மயில்கள் ஆடப்புக்கன. அம.4,பெரி. ஆழங்காலிலே இழிந்து அமிழ்ந்துவார் அவ்விடத்தே கொண்டைக்கோல் நாட்டுமா போலே. 10.7.1-36.

கொத்து - இனம். ஒரு கொத்துக்கு ஒருவரைக் கொண்டு வருகை. 3.10.1-36.

கொத்தை* - குறை. கொற்றை என்பதன் பேச்சுவடிவம். உங்கள் அளவில் போமதல்ல. உங்கள் ஸந்தாநத்துக்கும் கொத்தை. 4.6.8-36.

கொதுகுலம் - மகிழ்ச்சி. பள்ளியோதும் பருவத்தில் ஏதேனும் சொல்லிலும் கொதுகுலமாயிறே இருப்பது. தி.வி.46.

கொல்லை - வரம்பழிந்தவள். அடியிலே இவள் கையில் மடலைக் கொடுத்துக் கொல்லையாக்கிப் புறப்படவிட்ட அந்நறையூரர் கார்யமே நன்றாய்த் தலைக்கட்டிற்றிறே என்கிறாள். பெ.தி. 8.2.2.

கொலைக்க - குலைக்க என்பதன் சிதைவு. நிற்கிற நிலையை ஒருவரால் கொலைக்க வொண்ணாதபடி. பெ.தி 5.6.2.

கொழுகொம்பு - தாங்கும்கொம்பு. பர்த்தாவாகிற கொழு கொம்பை யொழிய ஜீவியாமையும். பாவை,11-3.

கொள்கலம் - பாத்திரம். கல்யாண குணங்கள் சேருகைக்குக் கொள்கலமாய். 1.6.4-6.

கொள்கொடை - கொடுத்தல், கொள்ளல். அவ்வூரில் உள்ளா ரோடே ஒரு கொள்கொடையால் வரும் ஸம்பந்தமாதல். தி.மா.29.

கொளுந்துதல் - 1. ஊட்டுதல். நாற்றம் கொளுந்தினபடி. தி.ப.8. 2. பற்றுதல். பெருநெருப்புக் கொளுந்தி வெந்திட்டால், பெரி.தி.5.4.2.

**கொற்றை** - குறை. நம்முடைய ஜ்ஞாந வ்ருத்தஜந்மங்களி னுடைய கொற்றை பார்க்க வேண்டாவோ. மூ.தி. 78.

**கொறுக்கோல்** - கன்றுகளின் முகத்தில் கட்டும் கோல். முன்னணைக்கன்று பசுக்களோடே போனால் முலையுண்ணா மைக்குக் கொறுக்கோலென்று அதின் மூஞ்சியிலே கட்டி விடுவர்கள். 4.8.4-36.

**கோகுள் இலை** - ஒருவகைச் செடியின் இலை. கோகுள் இலை யைக் கொண்டு கடலைவற்ற இறைப்பதாக நினைப்பாளே. 7.2.1-36.

**கோட்பாடு** - கொள்கை; உத்யோகம் (முயற்சி) என்பது பெரிய திருமொழிக் குறிப்புரை. இவை எனக்குப் போராதென்று தான் கொண்ட கோட்பாடு மாறாதே ரக்ஷ்யமளவுபட்டு ரக்ஷகத்வமே விஞ்சியிருக்கிறவன். பெ.தி.2.4.6.

**கோட்புகுதல்** - புதிதாகத் தோன்றுதல்; மலர்தல். வெறும் புறத்திலே ஆலத்தி வழிக்க வேண்டும்படி இருக்கிற நீ, அதுக்குமேலே கண்களும் கோட் புக்கால் பொறுக்கப் போமோ. 5.10.3-36.

**கோடரம்** - மரச்செறிவு. கோடரத்தில் பற்றின அக்நி போலே. 2.1.10-24.

**கோடாலம்** - ஓர் ஆபரணம். திருவடிகளிலே கிடந்து ஆரவாரிக்கிற கழல்கள் சதங்கைகளும் குளிர்முத்தின் கோடாலமுமாய் நிற்கிற உபாயவேஷம். பாவை,28-6.

**கோடித்தல்** - அலங்கரித்தல். பெருமாளுடைய திருவபிஷேகத் துக்குத் திருப்படை வீடெல்லாம் கோடித்துக் கிடக்கிறபடி யையும். பெ.தி.4.8.4.

**கோத்தல்** - பாய்தல். வயல்கள் அளவும் வர வெள்ளம் கோத்த படியாலே. பெ.தி.3.4.7.

**கோது** - சாரமற்ற பகுதி. அம்மாலையில் பரிமளம் இங்கும் கோது அங்குமாகப் பண்ணவேணும். 10.3.5-36.

**கோப்பு** - கட்டு. கர்மாநுகுணமாக நலியக் கடவ நரகம் கோப்புக் குலைந்தது. 5.2.1-9.

**கோமுற்றவர்** - அரசர். கோமுற்றவர் தண்டிக்குமிடத்தில் தலை யைச் சிரைக்கிறது அபிமானத்தைப் போக்குகிறபடியாய்த்து. தி.மா.38. மணியகாரர் என்பது பெ.தி. குறிப்புரை. கோமுற்றவர் படுக்கைப் பற்றிலே நலியக் கோலுமா போலே. பெ.தி.6.2.7.

கோயிலாழ்வார் - கோயிலாகிய ஆழ்வார். நம்பெருமாள், கோயி லாழ்வாரில் நின்றும் புறப்பட்டருளி. பாவை. 23-6.

கோயிற் கட்டணம்* - பள்ளியறை. பெரிய பிராட்டியாருக்குக் கோயிற் கட்டணமாயிருக்கிற ஏற்றத்தையும். அம.5, அழகு.

கோயிற்சாந்து* - ஒப்பற்ற சாந்து, அரசற்குரிய சாந்து. இப்படி ஸர்வத்தையுமுடையவனாய்த் தான் போகத்தில் அந்யபர னாய்க் கோயிற்சாந்து பூசி நித்ய விபூதியிலேயிருக்குமோ? 1 1.3-36.

கோல்விழுக்காடு - த ற் செ ய ல். கோல்விழுக்காட்டாலே பரிஹாரமாயிருக்கையிறே ஸாத்விக புராண லக்ஷணம். 4.10.5-24.

கோலுதல் - திட்டமிடுதல். தாம் உள்ளபடியே பேசுவாராகக் கோலி. 2.5.11-24. 2. திட்டம்; சூழ்ச்சி. கம்ஸன் கோலின கோலுதலை அவன் தன்னோடே போம்படி பண்ணி அவனை முடித்து. பெ.தி.5.7.5.

கோவை* - 1. ஒத்தது. இருளோடு ஒரு கோவையான நிறம். 5.4.2-36. 2. வரிசை. நித்யஸூரிகளோடு ஒரு கோவை யாய்ச் சென்று கிட்டி. 10.2.6-36.

கோள்வாய் - புதுப்புண். அவன்வந்து கலந்து பிரிந்த கோள்வாய் பொறுக்க அரிதாயிருக்கும். 6.2.0-36.

கோற்குத்து - கோல் அளவு நிலம். ''பந்துக்களுக்கு ஒரு கோற் குத்துங்கொடேன்'' என்று அவன் சொன்ன வார்த்தைக்கும் வாசியறியாத கோஷ்டியிலேயிறே போயப் புக்கது. 7.5.0-36.

சக்கரவர்த்தித் திருமகன் - இராமன். சக்கரவர்த்தித் திருமகன் முனிந்தால். பெ.தி.1.2.2.

சங்காயம் - ஆனைப்புல் மூன்றுகளையும் பறித்துச் சங்காயமும் வாரின பயிர் சதசாகமாகப் பணைத்துப் பலிக்குமா போலே. 4.2.0-36.

சட்டைப்புரை - சட்டைப் பை. ஒரு உபாதியாலே தம்மை வந்து கிட்டினாருடைய ஆத்ம வஸ்துவை அபஹரித்துச் சட்டைப் புரைக்குள்ளே இட்டுக்கொள்வர் என்று தோற்றியிருக்கும், தி.மா.24.

சடக்கு* - விரைவு. பிரித்துச் சடக்கெனக் கொடுபோகையாலே. 1.4.1-9.

சதுகை - கூளம். நீரையும் சதுகையும் மண்ணையுங் கூட்டித் துகைத்து(க்) கடசராவாதி கார்யங்களாக நிர்மிக்குமா போலே. பெ.தி.3.6.3.

சதுரன் - விரகன். சதுரனானேன் என்கிறார். க.நு.சி.5, நஞ்சீயர்.

சம்பு - ஒருவகைக்கொடி. சம்பறுத்தார்கைக்குப் போக வேணுமோ? 4.6.9-36.

சமைகை - இசைகை. நான் சமைகையாலே. 10.8.2-36.

சரக்கு - பண்டம். சரக்குப் பிடித்துக்கொண்டுவந்து ஒரு பந்த விலே தங்குவது. 1.2.7-36.

சலகு - முத்துச்சிப்பி. சலகில் கிடந்து முத்துக்கும் பொன்னுக்கும் அழுக்கேறின நாள் அறிவாரில்லை. 5.1.5-36.

சளைத்தல் - தளர்தல். பிரிவுக்குச் சளைத்துத் தூதுவிட. 6.8.1-36.

சறாம்புகை - தன்னைப்பேணாமை. சறை என்று சறாம்புகை யாய், அல்லாத இடையர் விஷ்வயநஸங்க்ரமணங்களுக்கு உடம்பிருக்கத் தலைகுளித்தல், உடம்பிலே துளிநீரேறிட்டுக் கொள்ளுதல் செய்வர்களாகில். 4.8.4-36.

சறைமணி - இடையர் அரையிற் கட்டும் மணி. சறைகை மணி என்று ஒரு மணி உண்டாயிற்று, இடையர் அரையிலே கோத்துக்கட்டி முன்னே போகாநின்றால் அந்த த்வநி வழியே பசுக்களெல்லாம் ஓடிவரும்படியாய் இருப்பது ஒன்று. 4.8.4-36.

சாடி - துணி. ரத்நங்களை எல்லாம் சாடியிலே பதித்துக் காட்டுமா போலே தன்னழகு தெரியாதார்க்குத் திருவனந் தாழ்வான் மேலே சாய்ந்து காட்டினபடி. அம. 7, அழகு.

சாணரைப்புல் - ஒருவகைப் புல். சாணரைப்புல்லாய்ப் பசுகு பசுகு என்று அறுக்க அறுக்கத் தொலையாதே கிடந்தாற் போலே. தி.வி.1.

சாத்து - கூட்டம். திருவனந்தபுரத்துக்குச் சாத்தாகப் போகா நிற்கச் செய்தே. 8.10.11-36.

சாத்துப்படி - சாத்துவதற்குரிய சந்தனம் போன்ற பொருள். காவேரியானது, ஆதரத்தோடே வந்து, தான் கொண்டு வந்த சாத்துப்படியையும் பெரிய பெருமாளுக்கு ஸமர்பித்துத் திருவடிகளைத் தொழாநிற்கும். பெரி.தி.4.8.7.

சாமந்தன் - அரசன். ஏழைக்கும் பேதைக்குமன்றோ சாமந்தனார் பத்திரம் கட்டிற்று. தி.மா.11.

சாமாதல் - உண்ணுதல். சாமாயிற்று என்றதுக்கும் புஜிக்குமென்று கருத்து என்பது பெரிய திருமொழிக் குறிப்புரை. வேம்புக்கு இட்டுப் பிறந்த புழுவானது கரும்பைக் காணச் சாமாயிற்று. பெ.தி.11.8.7.

சாய் கரகம் - நீர்வார்க்கும் கரகம். விடாயர் இருந்த இடத்தே சாய் கரகம் போலே உயர வைத்துக் கொண்டுவந்து காட்டும் பரிகரம் உடையவனே என்னா நின்றாள். 2.4.4-36.

சாரிகை - வையாளி. திருவடி திருத்தோளிலே ஏறி அங்குள்ளார்க்கு உஜ்ஜீவமாகச் சாரிகை வந்து காட்டுமாப் போலே. 7.3.1-36.

சால் - பானை. ஓர் ஊசி நிற்கிறதாகவும், அதின்மேலே கலசம் இருக்கிறதாகவும், அதின்மேலே சால் இருக்கிறதாகவும். 1.1.3-36.

சால* - மிகவும். சாலப்பணியாயிருக்கும். 6.1.7-36.

சாவி - வீணான பயிர். விளை நிலங்களைக்காட்டில் ஏரிக்கட்டே விஞ்சியிருக்குமாயிற்று; இல்லையாகில் சாவி போமிறே. 3.9.2-36.

சிகல் - குறைவு, கேடு. அபிநிவிஷ்டனானால் சிகலுண்டோ என்னில். 9.6.4-6.

சிகை - வட்டி. பின்பு இவனிட்ட காசு தன்னையடையத் தன் பேரிலே செலவு எழுதிச் சிகைக்கடிப்பிக்கும். 4.9.6-36.

சிங்கவிளக்கு எரித்தல் - தலையிலே சாணத்தை வைத்து விளக்கேற்றுதல். சிறை கட்டுதல், சிங்கவிளக்கு எரித்தல் செய்யில் செய்வதென்? 1.4.1-36.

சிந்து - பாட்டு. சிந்துக்காடுவாரைப் போலே. அம.4, அழகு.

சிமிழ்த்துக்கொள்ளல் - சுற்றிக்கொள்ளல். முற்பட உடுத்ததுக்கு ஈடுபடாமையாலே அதுக்குமேலே ஒரு சிவப்பு நிறப் புடவையைச் சிமிழ்த்துக்கொண்டு வந்தானாயிற்று. பெ.தி. 10.8.2.

சிலவர்* - சிலர். அவர்கள் சிலவர் நாள் நடையாடாத, தேசத்திலே வார்த்திக்கிறவர்கள் காணும். 5.8.6-36.

சிலவை - சில, அநுபவித்தாலல்லது நசியேனென்று கொண்டு சிலவை நிற்றல்; ப்ராப்தங்காண் என்று சிலவை நிற்றல் செய்யவற்றோ. பெ.தி.7.3.8.

சிலுகிடல் - குற்றங்கூறல், சண்டையிடல். உன் மேலே சிலுகிட்டுப் பிணங்க. பெரி.தி.2.2.3: சிலுகிடாதே கொள்ளுங்கோள் என்கிறாள். பாவை, 3-6.

சிலுகு - குற்றம். ஒருத்தி வந்து தன் மகன் குறைகளைச் சொல்லப் புக்கவாறே 'இதுவுமொரு சிலுகோ' என்று தாயான யசோதைப் பிராட்டி குபிதையாக. பெரி.தி.2.9.10.

சிலுகுவாரிகள் - சில்லைவாய்ப் பெண்கள். சிலுகுவாரிகளான நம் சேரியில் உள்ளாரும் அயற்சேரியரான அந்ய ஸ்த்ரீகளும். 6.7.4.

சிவிகையார் - பல்லக்குச் சுமப்பவர். சிவிகையார் சொல்லும் வார்த்தையை விண்ணப்பம் செய்ய. மு.தி.80.

சிவிட்கு* - சீற்றம். திருவுள்ளத்தில் சிவிட்குத் தாரையையிட்டு ஆற்றவேண்டிற்றுக் காணும். 1.4.3-36.

சிவீல் - சீற்றம். என்னுடைய பாசுரம் கேட்டால் தேவர் திருவுள்ளத்துக்கு(ச்) சிவீல் என்ன வேண்டும்படியாயிருக்கும். பெ.தி.6.2.7.

சிழகிச் சிழகி அழுதல் - பொருமி அழுதல். காலமெல்லாம் நான் இருந்து சிழகிச் சிழகி அழுதால் என்ன ப்ரயோஜநம் உண்டு? 3.2.7-36.

சிளைத்தல் - இளைத்தல். பிரிவுக்குச் சிளையாத இது (ஆவி) இனி முடியப் புகுகிறதோ என்றிருக்கிறாள். 5.4.1-36.

சிற்றடிப்பாடு - சிறிய நடைபாதை. அச்சத்தாலே வழியான இடம் கிடக்க, சிற்றடிப்பாடே நுழைந்து போம்படியாகப் பண்ணும். பெரி.தி.4.2.8.

சிறாங்கை - கையளவு. பரமபதம் ஒரு சிறாங்கை என்னும்படி உபயவிபூதியும் ஒதுங்கலாம்படி பெருமையை உடைத்தான ஊர். க.நு.சி.3, அழகு.

சிறாம்புதல் - குறுகுதல், கூசுதல். இந்திரன் கண்ணீர்கண்டு சிறாம்பினபடியும். பாவை, 3-6.

சிறாய் - ஓடம். ஒரு சிறாயை விச்வஸித்து. 3.6.8-36.

சிறுக்கன்* - சிறுவன். சிறுக்கனுடைய விரோதி போகப் பெற்றது என்று உகந்தபடி. 4.8.7-24.

சிறுகால் - விடியற்காலம். கன்றுகள் மேய்க்கத் தகுதியான பருவத்தை ப்ராப்தனான இவனை(ச்) சிறுகாலே ஊட்டி ஒருப்படுத்தி, கன்றுகள் மேய்க்கும்படி போகவிட்டு. பெரி.தி.3.2.0.

சிறுபேர் - செல்வப்பெயர். குன்றத்துச் சீயர் எம்பெருமானார் ஸ்ரீபாதத்திலே புக, அவருடைய சிறுபேரைச் சொல்லி 'சிங்கப்பிரான்' இன்று அயநங்கிடாய் என்ன. 1.2.9-36.

சிறுமுறி - சீட்டு. நாயன்றே! பரமபதமென் சிறுமுறிப்படி யழியும். தி.வி.44.

சின்னம் - காசு. நாலு சின்னம் கைப்பட்டவாறே 'நமக்கு இனி உள்ளதனையும் ஜீவிக்கைக்கு ஒரு குறையில்லை' என்று நினைத்திருக்கச் செய்தே அத்தையிழந்து கிலேசப்பட்டும் கூப்பிடும்படியும். 4.9.2-36.

சீர்மை* - சிறந்த தன்மை. இப்படி அவயவ சோபையும் ஆபரண சோபையுமான சீர்மைக்குக் காத்தூட்டும்படியான பரிகர பலமில்லையோ வென்ன. தி.நெ.தா.21, பட்டர்.

சீரியது - சிறப்பானது. ஆத்மாவுக்கு அத்தோடொத்த சீரியது இல்லை. 1.2.3-24.

சீரை - ஆடை. தலைகளில் கறையையுடைத்தாய் இருப்பதொரு சீரை கிடைக்குமென்றும். பெரி.தி.4.6 1; வழியில் நின்று சீரை யுரிந்ததுக்கு பலம். பெ.தி.4.5.5.

சுடுதடி - தீ வட்டி. சுடுதடி போலே இவற்றையடைய அழித்துக் கொண்டு நிற்கிற ருத்ரனுமாம். 2.8.3-36.

சுணை - நாணம். அவன் சுணையுடையவன். 8.2.8-36.

சுணைக்கேடன் - நாணமற்றவன். தானும் ஒக்க மடலெடுப்பானொருசுணைக்கேடனாகையாலும் மடல்இவ்விஷயத்தில் பலியாது என்று பார்த்து நோற்கிறார்கள். பாவை, 0-3.

சும்மாடு - சுமை தாங்கும் தலைப்பாகை. கருமுகை மாலை தேடுவார் சூடவிறே தேடுவது? சும்மாட்டைக் கொள்ள அல்லவிறே. 2.4.2-36.

சுரவன்பாக்கு - உயர்ந்த பாக்கு. ஆச்சான் திருவாலிநாடு தாஸர் நல்லன சில சுரவன் பாக்குகளை(ப்) பட்டருக்குக் கொடுவந்து கொடுத்தாராய். 10.2.2-36.

சுருக்கடிக்க உண்டாதல் - அடிக்கடி இருத்தல். இந்த உருவு வெளிப்பாடு 'எங்ஙனேயோ'விலும் சுருக்கடிக்கவுண்டு. 7.7.0-24.

சுவடு* - 1. அடையாளம். ஹிரண்யனுடைய மார்வை முற்காலத்திலே பிளந்து பொகட்டவனுடைய் அச்சுவடு தோன்றும்படி இருக்கிற. பெரி.தி.1.2.5; 2. அடித்தடம். பசுக்களுக்குச் சுவடு படாத புல்லும் தண்ணீரும் உண்டாம்படியாகவும் தலைகீழாகக் கவித்த மலை. பெரி.தி.3.5.6. 3. சுவை. தாஸ்ய பரிமளத்திற் சுவடறியாதவனாய். 9.8.4-36.

சுவடர் - சுவைஞர்; ரசிகர். சுவடர் பூச்சூடும் போது புழுகிலே தோய்த்துச் சூடுமா போலே. தி.பல்.9.

சுவைப்பாடு - சுவை. இனிமையால் நினைக்கிறது சுவைப் பாட்டை. பெ.தி.1.2.10.

சுளைப்பிடாம் - கம்பளி என்பது குறிப்புரை. அப்பொருள் சரியாகத் தோன்றவில்லை; பிழைபட்ட சொல்லாக இருக்கலாம். இவன் ஆண்ட பரிகரமடங்கலும் வினைக்கு உடலாயிற்றதில்லை; எடுத்தெடுத்துக் குலைக்கிறபோது சுளைப் பிடாமிட்டு அமுக்குகைக்கு உடலாமித்தனை. பெ.தி.8.1.1.

சூடு - தானிய அரிக்கட்டு. பழைய பையலைப் போலே வரம்பிலும் வாய்க்காலிலும் சூடுபொகடாதேகொள் என்னுமதுவேயடியாக. சி. மடல், கண்ணி, 60.

சூழ்பு - சூழ்ச்சி. ஆயுதம் எடுக்கவொட்டோம். என்கையாலே சூழ்பாலே அழித்தான். 6.4.10-24.

சூழியம் - கொண்டை. நாயகன் பேணிச் சூழியஞ் சுற்றினால் இவள் வினை கேட்டாலே குலைத்தால் அதுக்கவன் கால் பிடிக்கும் அளவல்ல. தி.வி.60.

சூள் - தீப்பந்தம். சூளிலே கொளுத்திக் கையிலே கொடுபோகிற நெருப்பொளியிலே. மு.தி.40.

செங்கற்சீரை - காவியாடை. செங்கற்சீரை கட்டி வளைக்கலாம்படியிறே. 6.10.10-36.

செடி - அழுக்கு. அந்தச் செடி நீங்கக் குளிப்பாட்டும் க்ரமத்திலே பெரி.தி.2.4.0.

செண்டேறுதல் - சாரிகை புறப்படுதல். அழகு செண்டேறுகிறபடி. 7.3.1-36.

செதுகை - புதரும் கூளமும். செதுகையிட்டுப் புகைக்க அமையும் 1.6.1-36.

செந்தலித்திருக்கை - மகிழ்ந்திருக்கை. ஸம்ச்லேஷத்தாலே செந் தலித்து நினைத்த இடத்திலே. 1.4.1-9.

செந்தலிப்பு - மகிழ்ச்சி. அவனுடைய செந்தலிப்பேயிறே அத் தேசத்துக்குச் செந்தலிப்பு. தி.நெ.தா.12.

செந்தெங்கு - செவ்விளநீர். செந்தெங்குக்கு முட்கட்டினாப் போலே. 10.2.1-36.

செப்பு - செப்பம். ஸகல லோக ரக்ஷணம் பண்ணுகிற எங்கள் நிதியைச் செப்போடே நோக்குகிறவனன்றோ. பாவை, 16-6.

செப்பேடு - தாமிரசாசனம். ஆர்த்தியே செப்பேடாக இனி ஒரு க்ஷணமும் தாழாதே இப்போதே வரவேணுமென்று ஆசைப் படா நின்றேன். 4.7.5-24.

செம்பளித்தல்* - மூடுதல். செம்பிளித்தல், செம்புளித்தல் என்றும் வருகிறது. போக்கற்றவாறே என் கண்ணைச் செம்பளித்தேன். அம 1.பெரி. கண்ணைச் செம்பிளித்து வந்து கலந்தான். 2.5.8-36. அக்கண் தன்னையுஞ் செம்புளித் தாலுள்ளோடு புறம்போடு வாசியற விண்டிருக்கும். திருவா.1.

செம்பாட்டுத் தரை - செம்மண் நிலம். செம்பாட்டுத் தரையிலே மலையருவி விழுந்தாப் போலே ருதிரம்வந்து கொழிக்க. பெரு.தி. 10-2.

செம்பாதி - சரிபாதி. அதிலே செம்பாதி கடிக்கூறாகப் பாழாய் நித்திரையிலே கழியும். தி.மா. 3.

செம்பால் - குருதி. அத்யந்தம் செம்பால் பாய்கிற பருவத்தை யுடைய பாலனாய். பெ.தி. 2.2.5. (செம்பால்-தொட்டால் ரக்தம் பொசிகை என்பது அரும்பதம்.)

செம்முதல் - அடைத்தல். வாசல் செம்மினால் வாயும் செம்ம வேணுமோ. பாவை, 10-3.

செய்கால் - பயிர்நிலம். தரிசு கிடந்த தரையைச் செய்காலாம்படி திருத்துவாரைப் போலே. 2.7.4-36.

செய்தி - செயல். தன் செய்தித் தாழ்வைச் சொல்லி நோவு படுகிறாள். பெரி.தி. 2.3.7.

செய்திப்பாடு - செயல். செய்திப்பாட்டை உடைத்தான. 6.7.9-12.

செய்வுத்தை - செய்வதை. செய்வுத்தை யெல்லாஞ் செய்து சீறியருளாதே என்ன அமையுமாகாதேதான். பாவை, 28-6

செய்வுற்றை - செய்யுமவற்றை. உகவாதார் பக்கலில் செய்வுற்றை நம்பக்கல் செய்யான். 10.4.5-36.

செயல்மாட்சி - செயலற்ற நிலை. பயஸ்த்தாநத்திலே பயநிவ்ருத்தியுள்ள இடத்திற்போலே நிற்கும்படியாயிற்றுச் செயல் மாட்சி. 7.10.8-36.

செயலறுதி* - செயலற்ற நிலை. அன்னே - செயலறுதியாலே சொல்லும் சொல். 4.4.1-9. தன் செயலறுதியாலே தெய்வங்காள் என்று கூப்பிடுகிறாள். 6.7.10-6.

செருக்கடித்திருத்தல் - கர்வத்தோடிருத்தல். முன்பே என் தசையை அறிவியென்னச் செருக்கடித்திருந்தாய். 1.4.8-36.

செருக்கன் - செருக்கினையுடையவன். வில்லை வளைத்த செருக்கன். பெ.தி. 1.4.8.

செருந்து - கொழுந்து. அந்தச் சோலைதான் தளிரும் முறியும் செருந்துமாய் நிற்கையாலே கீழேயொரு பொய்கையும் உண்டென்று தோற்றிற்று. பெ.தி. 5.8.3.

செல்லாமை* - ஆற்றாமை. தன் செல்லாமையைப் பாராதே சேஷியுடைய ஹ்ருதயத்தைப் பார்த்து. க.நு.சி. 0,பெரி.

செல்வக் கிடப்பு* - செல்வமிகுதி. ஸார்வபௌமனான ராஜ புத்ரன் க்ஷாமகாலத்திலே அல்ப த்ரவ்யத்துக்குத் தன்னை எழுதிக் கொடுத்தால் பின்னை தன் செல்வக்கிடப்புக் காட்டி மீட்கவொண்ணதாப் போலே. 1.3.1-36.

செல்வு* - செல்வம். திருவுக்குந் திருவாகிய செல்வு. பாவை, 30-6.

செலுவு - கீழ்வயிறு. ப்ரளயந் தன்னைத் தன் செலுவிலே அடக்கவற்றான மத்ஸ்யமாயும். பெ.தி. 5.4.8.

செவ்வி* - அழகு. செவ்விக்கு ஆலத்தி வழிக்க வேண்டும்படியாயிற்று இருக்கிறது. 4.6.1-36.

செவ்வித் திருத்துழாய் - சிறந்த துளசி. செவ்வித் திருத்துழாய் மாலையையுடையனாய் இருந்துள்ள ஸர்வேச்வரன். பெ.திருவந். 51.

செவ்விப்பூ* - நல்ல மலர். மிகவும் பரிமளத்தையுடைய செவ்விப் பூவாகக் கொண்டு நம்பியுடைய திருவழகை முட்டக் காண்கைக்கீடான ப்ரபாவத்தையுடைய ஆழ்வார். 5.5.11-9.

செவ்வே - நன்றாக. அது உனக்குச் செய்யலாவது செவ்வே பரிமாறும் அவர்களோடு காண். 10.5.5-36.

செவ்வை - நன்று செவ்வையாய்த் தோற்றும். 9.6.5-36.

செவ்வைக்கேடு* - நேர்மையின்மை. அவன் செவ்வைக்கேட்டுக்கு ஈடாகத் தானும் செவ்வைக் கேடனாய் கொண்டபடி. 4.8.6-36.

செவ்வைப்பாடு - நேர்மை. முன்பு ரக்ஷகம் என்று சொன்ன மலை தன்னையே யெடுத்து ரக்ஷித்த செவ்வைப்பாட்டைச் சொல்லுகிறது. பெரி.தி. 3.5.6.

செவ்வைப்பூசல்* - அறப்போர். செவ்வைப் பூசலிலேயிறே அவன் நோவுபடுவது. தி.நெ.தா. 11. சக்ரவர்த்தித் திருமகன் செவ்வைப் பூசலாலே ராக்ஷஸரை அழியச் செய்தாப்போலே. தி.ச.வி. 32.

செவிப்பாடு - செவிக்கு இனிதாக இருத்தல். செவிப்பாடுடைத் தாக ஆளத்தி வையாநிற்கும். பெ.தி. 3.1.1.

செவியேறு - செவியில் விழுந்த வார்த்தை. அவனுக்குத் தோழி சொல்லச் செவியேறு கேட்டுச் சொல்லுகிறாள். 10.3.7-36.

செவிலி - வளர்ப்புத் தாய். செவிலி. தொடக்கமானாரைப் பார்த்து. 4.6.0-12.

செறியிடல் - மறைத்தல். அப்பரப்படங்கலும் கண்செறியிட்டாற் போலே பெருத்திருக்கிற மலராகிற ஆஸநத்திலே. திருவெழு. அடி, 1.

செறுத்தல் - நெருக்குதல். அதாவது இடம் கொடுக்கும்படி பண்ணுதல். கடலைச் செறுத்துப் படைவீடு செய்ததாகை யாலே திரைபொரு கடலாலே சூழப்பட்டிப்பதாய், திண்ணிய தான மதிளையுடைத்தாயிருக்கிற ஸ்ரீமத்த்வாரகைக்கு ராஜா வானவன். பெரி.தி.4.7.8.

செறுப்பு - சிறுமை. வானிளவரசு என்கிறபடியே அகம்படி வைத்த அரசாயிருக்கும் அங்கு, அச்செறுப்புத் தீர ஸ்வைரம் ஸஞ்சரிக்கப் போந்த இடமிறே இது. 5.8.2-36.

சேக்கள் - காளைகள். பிரிந்திருப்பார்க்கு மற்றும் பாதகமான சேக்கள். தி.வி.87.

சேர்க்கைப் பல்லி - ஒரே இடத்தில் சொல்லும் பல்லி; நிலைப்பல்லி. இவர்க்காகில் இது சேர்க்கைப்பல்லி போலே பணியன்றோ என்றிருக்க ஒண்ணாது. 4.9.3-36.

சேர்த்தி * - சேர்க்கை; தொடர்பு; பொருத்தம். இவ்விரண்டுக்கும் அடி இவளுடைய சேர்த்தியிறே. 1.3.1-36. பகவத் ஸமாச்ரயணம் பண்ணுகைக்கும் வினை கிடைக்கைக்கும் அக்நிநாஸிஞ்சேத் போலே என்ன சேர்த்தியுண்டு? 1.3.8-36. அக்கையும் வில்லும் சேர்ந்த சேர்த்தியும் தர்சநீயதையும் அநுபவிக்கிறார் ஆயிற்று இவர். பெ.தி.1.2.1.

சேர்த்தியழகு - பொருத்தமான அழகு. சேர்த்தியழகை யுடைத்தான திருவடிகளை ஆச்ரயிக்க. பெ.தி.1.4.1.

சேர்ப்பால் - குழம்புப்பால்; சுண்டக்காய்ச்சிய பால். சேர்ப்பால் போகரூபமாகப் பருகுமவனுக்குத் தன்னடையே பித்தம் போமாப் போலே. பாவை, 5-3. குறளாய் - சேர்ப்பால் போலே போக்யதை மிக்கிருக்கிறபடி. 2.3.3-24.

சேராச்சேர்த்தி - 1. அரிய சேர்க்கை. சேராச் சேர்த்தியாய் 7.1.7-12. 2. பொருந்தாத சேர்க்கை. சேராச் சேர்த்தியாய் இருக்குமோ என்னில், இரண்டுருவும், இசைந்து ஒன்றாய் இருக்கும். மூ.தி.63.

சேவகப் பாடு - வீரம். அத்தால் உங்கள் பக்கல் பிறந்த சீற்றம் வேணுமாகில் முந்துற முன்னம் சேவகப்பாடு சொல்லாதே கொள்ளுங்கோள். பெ.தி.10.3.7.

சொட்டை - வாள். சொட்டையை யுருவிப் பிடித்துக்கொண்டு. 7.4.1-36.

சொப்பன - நன்றாக. சொப்பனக் குடியேறுவதற்கு முன்னே. பெ.தி 6.8.7.

சொல்லுடைமை - சொற்செல்வம்; பல சொற்களைப் பயன்படுத்தும் ஆற்றல். சொல்லுடைமைக்கு உங்களிற் காட்டில் இல்லை. பெ.தி.1.1.7.

சொலவு * - சொல். சொலவு நினைவோடே கூடியிறே இருப்பது. 4.9.1-24,36.

சொற்றாழ்வி - சோறாள்வி என்பதன் சிதைவு. சமையற்காரன். ஆண்பிள்ளைச் சொற்றாழ்வியை ஆசைப்பட்டவனை. மு.தி.63.

சோறாள்வி - சமையற்காரன். இனி ஆண்பிள்ளைச் சோறாள்வியை ஸ்த்ரீ என்று துடர்ந்து திரிவாரைப் போலே. பெ.தி.2.6.1.

தக்கோர்மை * - நன்மை, தகுதி. இப்பிரளயங் கொண்ட பூமிக்கு என்ன தக்கோர்மையுண்டாய் நீ செய்தது. 5.7.4-36. பந்துக்கள் ஜீவிக்கவேணும், எங்களுக்கும் ஐந்து குடிக்காடு அமையும் என்னும் தக்கோர்மையுடைய ஐவர். 8.5.8-36.

தகணேறல் * - தழும்பேறல். இரப்பிலே தகணேறினபடி. 1.4.3-24.

தகைவு - தடை. பசுக்களுக்கும் இடையர் இடைச்சிகளுக்கும் புறம்பு போக்கறும்படி தகைவைப் பண்ண. பெரி.தி.3.5.2.

தசைந்திருத்தல் - பெருத்திருத்தல். அன்றிக்கே, கச்சாலே அடக்கி ஆளவேண்டுபடி பரிணதமாய்த் தசைந்திருக்குமவை இப்போது...சோஷித்திருக்கிறபடியைப் பற்றச் சொல்லுகிறானாதல். பெரி.தி.3.10.4.

தட்டி - சிறை. ராஜகுமாரன் தட்டியிலிருந்த போது ப்ரதிகூலித்தவர்கள். தி.வி.27.

தட்டித் திரிதல் - 1. தடுமாறித் திரிதல். பகலெல்லாம் தட்டித் திரிந்து அஸ்தமன வேளையிலே யாய்த்து ஜீவிப்பது. தி.மா.5. 2. நாடிச்செல்லல். இன்னும் எத்தனை திருப்பதிகள் தட்டிக் திரியக்கடவேன். 5.8.10-24.

தட்டு - தடை. எனக்குக் காணத் தட்டு என்? தி.வி.84.

தடவற்பொய் - விளையாட்டுப் பொய். ஒரு தடவற்பொய்க்காக நரக தர்சநம் பண்ணுமளவாய் நின்றவனையிறே இப்படி உபதேசிக்கிறது. 6.7.10-36.

தடவியது - அகன்றது. ஆமைத்தாலியைத் தடவியதான கழுத்திலே பூண்டு. பெரி.தி.2.6.1.

தடா - தவலை. தடாக்களோடும் அடுப்பிலே ஏற்றிவைத்து. பெரி.தி.2.9.5.

தண்டல் - தண்டனை. எமன் தண்டல். 2.6.7-36.

தண்டை - 1. தடை. இத்தனை தண்டையுடைய உடல் உருகச் சொல்ல வேணுமோ. பெரி.தி.5.4.4. 2. வால். ஒரு புலி

வந்து தோன்றி அந்தப் பசுவையுங் கொன்று...இவன் முன்னே வந்து தண்டையை முறுக்கியிட்டிருந்ததாய். தி.வி.72.

தண்ணளி * - அருள். அகவாயில் தண்ணளி தோற்றும்படி வாத்ஸல்யத்தாலே குதறிச் சிவந்த தாமரை போன்ற திருக்கண்களாலே. 5.3.2-36.

தண்ணிது - கடைப்பட்டது. தண்ணிதான முறைமையாலே வாழக்கடவ. 9.1.9-36.

தண்ணிமை - தாழ்வு. முன்பொலா இராவணன் என்னுமித்தனை போக்கி அவன் தண்ணிமைக்கு ஒருபாசுரமில்லையிறே. பாவை, 3-3.

தண்ணிய - தாழ்ந்த. தண்ணிய நெஞ்சு. 5.2.7-24,36.

தண்ணியர் - தாழ்ந்தவர். இப்படி(த்) தண்ணியராக நினைத்திருக்கிற. 1.5.0-36.

தண்ணியவை - தாழ்ந்தவை. தண்ணியவையெல்லாம் 5.2.6-36.

தண்ணியார் - தாழ்ந்தவர். எத்தனை யேனும் தண்ணியார்க்கும் முகங்கொடுத்து நிற்கிற இந்நீர்மையை. அம.3,பெரி.

தண்மை * - தாழ்வு. என் தண்மையைப் பாராதே. 2.5.8-36.

தந்தாமுக்கு - தங்கள் தங்களுக்கு. பிறர் தந்தாமுக்கு நன்மை தேடிவரும் இத்தனை யல்லது இவனுக்கு நன்மை தேடார்கள். பெரி.தி.5.1.9.

தமப்பன் * - தந்தை. தமப்பனாரைக் காணப் புகுந்த அளவிலே. பெரி.தி.3.9.4.

தமயன் - தமையன். உங்கள் தமயனாருகந்த பிராட்டியோபாதி என்னையும் நினையுங்கிடீரென்கிறார். நான்.தி.47.

தமிழர் - தமிழ் நூல் மட்டுமே கற்றவர். சொல்லுவார்களாயிற்றுத் தமிழர். பெ.தி.1.1.10.

தரவு - அனுமதி, சீட்டு. தரவு வேணுமாகில். 4.9.0-36.

தரிசு - கரம்புநிலம். தரிசுகிடந்த தரையைச் செய்காலாம்படி திருத்துவாரைப் போலே. 2.7.4-36.

தரைக்கிடை - தரையில் கிடத்தல். இத்தரைக்கிடை கிடந்தும். 4.8.0-36.

**தலக்கு** - 1. நாணம். தலச்கற்றுச் சொல்லும்படியான. 10.10.0-36. 2. உறவு; தாய்க்கிழடங்காதபடி தலக்கறுக்கும் விஷயத்தோடே கலந்து வந்தென்கை. பெரி.தி.3.6.2.

**தலை** - பக்கம். இரண்டு தலைக்கும். 5.3.8-36.

**தலைக்கட்டுகை*** - முடித்தல். நீ என் காரியஞ் செய்து தலைக்கட்டு மித்தனை போக்கி நான் என் கார்யம் செய்து தலைக்கட்டுகை என்றொரு பொருளுண்டோ? திருவெழு.0.

**தலைக்காவல்** - முதற்காவல். தலைக்காவலாக வைத்த இந்த்ரன் தான் பாதகனாக, நோக்கினபடி சொல்லுகிறது. பெ.தி.7.6.4.

**தலைச்சாவி வெட்டுதல்** - 1. பயிர் மதாளித்துப் போனால் நுனிகளை வெட்டுதல் .தைர்ய பங்கம் பிறந்து செருக்குக்குத் தலைச்சாவி வெட்டி ஆடினபடியிறே. 2.7.4-36. 2. குறைதல். கலந்த போதைச் செவ்வி விரஹத்திலும் தலைச்சாவி வெட்டப் போகிறதில்லை காணும். 9.5.7-36.

**தலைசாய்தல்** - நீங்குதல். வ்யாதி க்ரஸ்தமான ப்ரஜைகள் வ்யாதி தலை சாய்ந்து சோறு சோறென்று கூப்பிடப்புக்கால் த்வநிதானே தாய்க்கு உகப்பாமா போலே. தி·மா.36.

**தலைசீய்ப்பு** - 1. துன்பம். இனி எத்தைச் செய்வோமென்கிற தலை சீய்ப்போடே காலம் போக்குமித்தனை. க.நு.சி.10, அழகு. புண்பட்டுத் தலைசீய்க்கும் விஷயத்தை. 4.1.3-36. 2. கலக்கமுறுதல். தம்முடைய பூர்வ விருத்தத்தையும் பெற்ற பேற்றின் கநத்தையும் அநுஸந்தித்துத் தலைசீ(ய்)க் கிறார். தி·கு.தா.1.

**தலைத்தரம்** - மேலானது. புரவார்ந்திருக்கையாவது தலைத்தரப் பெருக்காய் இருக்கை. 8.9.9-36.

**தலைதுலுக்கு** - 1. தலையசைத்தல். பிராட்டியோட்டை ஸம்பந்தமும் ஒரு தலைதுலுக்கு மாத்ரமாய், அவன்றான் ப்ரஜைகள் பக்கலிருக்கும் இருப்பைச் சொல்லுகிறது. பெ.தி.6.3.2. 2. இசைதல். அவன் செய்கிறோம் என்று தலைதுலுக்கினால் 10.1.0-36.

**தலைநீர்ப்பாடு** - தொடக்கம்; முதல் மடை. இத்தால் நித்யஸூரிகள் அளவும் அன்றிக்கே தலைநீர்ப்பாட்டிலே அநுபவிக்கும் பிராட்டியும் இவ் ஆச்ரித பக்ஷபாதத்துக்குத் தோற்றிருக்கும் படியைச் சொல்லிற்றாய்த்து. தி.ச.வி.24.

தலைமடுத்தல் - மூழ்குதல். இதர புருஷார்த்தத்திலே ப்ரவண ராய்த் தலைமடாதே. 2.10.9-9.

தலையாடி - 1. கரும்பின் தோகை; தலைப்பகுதியில் ஆடிக் கொண்டிருப்பதால் அப்படிப் பெயரிட்டனர் போலும். கண் குறகின கரும்பினுடைய கழையுண்டு - தலையாடி. அத்தைத் தின்று. பெ.தி.3.8.6. 2. செய்யுளின் முற்பகுதி. அவன் 'என்னையே பற்று' என்று சொன்னதில், தலையாடியிலே 'ஸகல விரோதிகளையும் நானே போக்கி என்னைத் தருவன்' என்று சொன்னத்தைத் தெளிந்திருக்குமவர்கள். 7.5.10-36.

தவ - சிறிது (உரிச்சொல்). தவதவ நாறுகிறபடி. 10.10.6-36.

தழும்பேறல் - தகணேறல். இரப்பிலே தழும்பேறினபடி. 4.10.10-36.

தள்ளம்பாறல் - தவறுதல்; தடுமாறுதல். திருவடிகள் ஊன்றி நடக்கும் பருவமன்றிக்கே நடக்கிற தசையாகையாலே தள்ளம்பாறி நடக்கும் நடை. பெரி.தி.1.7.1.

தளப்பம் - கவலை. எம்பெருமானோடே ஸம்பந்தமுடைய இவளுக்கு நான் கரைய வேணுமோ என்று தளப்பமற்றாள். சி.மடல், கண்ணி, 54.

தளம் - உப்பரிகை. மங்களவாத்ய கோஷங்களையுமெல்லாங் கண்டு ஸஹிக்க மாட்டாதே தளத்தினின்றும் இறங்கிவந்து கைகேயியை பர்த்ஸித்து...துருக்திகளைச் சொன்னாளிறே. பெரி.தி.4.8.4.

தளர்த்தி* - தளர்ச்சி. தளர்த்தியின் மிகுதியாலே. 4.4.2-36.

தளர்தல் - நோவுபடுதல். உள்ளே கிடந்து தளர வொண்ணாது. என்று உமிழ்ந்து. பெ.தி 5.10.3.

தளிகை - உண்கலம். அமுதுசெய்து கைவாங்கின தளிகை மாற்றினால் ப்ரஸாதம் போஜ்யம். தி.பல்.9.

தளும்புதல் - கலங்குதல். இக்குடிக்குத் தீங்கு வரப்பொறாத லோகத்தில் அநுகூல ஜநமானது தளும்பிற்றென்கிறாள். பெரி.தி.3.7.5.

தற்பு - வலிமை. விரஹம் தின்று பண்டே தற்பு அற்ற. 9.5.7-36.

தறை - தரை. தரையிலே படரவிடுவதே. 7.2.7-36.

தன்னடை* - தானாக. தன்னடையே நிரஸ்தராவர்களிறே. 1.1.1-36.

தன்னரசு நாடு - தன்னுடைய ஆட்சியில் உள்ள நாடு. இது தன்னரசு நாடாய். 1.2.9-36.

தன்னுடைச் சோதி - பரமபதம். தன்னுடைச் சோதியேற எழுந்தருளுகிற போதும். 6.2.0-36.

தன்னேற்றம் - தனக்குரிய உயர்வு. தன்னேற்றம் உண்டிறே. 6.2.0-36.

தனிக்கிடை - தனியே படுத்திருத்தல். தனிக்கிடை கிடக்க வல்லள் அல்லையே நீ. பாவை, 13-3.

தனிசு - கடன். தன்பேர் சொன்னவளுக்குத் திருவுள்ளத்திலே தனிசு பட்டிருக்குமா போலே. பெ.திருவந்.53. தனிசு இறுக்கக் கடவன். 3.3.6-36.

தனிமாலை - ஒப்பற்ற மாலை. துளசி மாலையைக் குறிக்கும். ரக்ஷணத்துக்கு உறுப்பாகத் தனிமாலையிட்டுக் கொண்டிருக்கிறவன். பெ.தி.10.10.1.

தாய்த்தலைத் தென்றல் - அழுக்குப்படாத முதலேயுண்டான தென்றல். அதாவது புறம்பே சிலர்க்கு உடம்பு கொடுத்துச் சுணங்கழியாதே தாய்த்தலைத் தென்றலாய் இருக்கை. 1.4.7-36.

தாரை - பூந்தாரை. தாரையும் குளிர்த்தியையும் உடைய திருத்துழாயின். 10.1.2-24, 36.

தாவளம் - தங்குமிடம். தளர்ந்தார் தாவளம் ஆயிற்று. 4.6.4-36.

தாழ்ச்சி - தாழ்வு. தங்கள் தாழ்ச்சி தோற்றத் தறையிலேயிருந்து. 10.9.10-24.

திடர் - மேடு. பொன்னியானது திடர்களையெடுத்துப் பொகட்டுப் பூக்களைப் பரப்பா நின்றுள்ள திருநாங்கூர். பெ.தி.4.4.3.

திணுங்குதல் - பொங்கிப் படிந்திருத்தல். நெய் திணுங்கினாப் போலே அகவாயில் தண்ணளியினுடைய செறிவெல்லாம் வடிவிலே காணலாம்படியிருக்கை. தி.மா.2.

திமிர்த்திருத்தல் - 1. உணர்ச்சியற்றிருத்தல். மரம் போலே திமிர்ந்திருந்தாலும் ஆவது உண்டோ? தி.வி.4. 2. அக்கறையின்றி இருத்தல். அது (திருவுள்ளம்) தம் த்வரைக்கு அநுரூபமாக மேல்விழாதே திமிர்ந்திருந்தது. பெ.தி. 1.3.0.

திமிறுதல் - கட்டுமீறிச் செல்லல். பெருங்காற்றைத் தாம்பிட்டுப் பிடிக்கலாம். என் மநஸ்ஸை ஒரு அளவாக்கப் போகிற தில்லை என்னும் படியிறே மநஸ்ஸினுடைய சஞ்சலத்வமும் திமிறும்படியான மிடுக்கும். அம.10, அழகு.

தியங்குதல் - மதிமயங்குதல். யமபடரானவர்கள் பிடிப்பதற்கு முன்னே தியங்க எற்றி வந்து பிடிக்கும்போது. 4.10.3.

திரள் - கூட்டம். ஏகாந்தத்தில் அநுபவத்தைத் திரளிலே வெளி யிடுவாரைப் போலே. பெ.தி.5.8.9.

திரிய* - மீண்டும். திரிய ப்ரளயம்வர. 3.1.10-36.

திரியட்டும்* - மறுபடியும். ஆரை என் கண்களாலே காண்கிறது என்று அகன்றும், திரியட்டும் தம்முடைய அயோக்யதையைச் சொல்லுகிறார். பெ.திருவந்.14.

திரியவிட்டு வைத்தல் - ஏறிட்டு எழுதி வைத்தல். உன் க்ஷேத்ரத் தையும் என் பேரிலே திரியவிட்டு வை. 4.9.6-36.

திரியவும்* - மீளவும். திரியவும் கிருஷ்ணாவதாரமே பின்னாட் டிற்று. பெ.தி.2.2.4.

திருக்குற்றுடைவாள் - அரையில் வைத்திருக்கும் சிறிய கத்தி. அவளுடைய மூக்கை கூரிய திருக்குற்றுடை வாளை வாங்கிப் போக்கினான். பெ.தி.1.5.5.

திருநாடு - வைகுந்தம். இத்திருநாமத்தைச் சொன்ன அநந்தரத் திலே திருநாட்டுக்குப் போனான். பெ.தி.4.4.1.

திருநாள் - விழா. திருநாளிலே கொடுபுகுவார் உண்டோ. 6.5.2-9.

திருப்பரியட்டம் - மேலாடை. திருப்பரியட்டத்தலையாலே. பெ.தி.2.10.3. இது திருப்பரிவட்டம் எனவும் வருகிறது. ஸ்ரீகோபிமார் கரையிலே திருப்பரிவட்டங்களையிட்டு வைத்து. 3.5.1-36.

திருப்பல்லாண்டு - மங்களங்கள் உண்டாக வேண்டும் என்று வாழ்த்தல். இத்திருவாய்மொழி கற்றாரை, மதிமுக மடந்தையர் விரும்பித் திருப்பல்லாண்டு பாடி ச்லாகிப்பர் களென்கிறார். 7.6.11-36.

திருப்பவளம் - சிவந்த வாய். தயிரையும் வெண்ணெயையும் ஒக்க அமுது செய்த திருப்பவளத்தை உடையவன். பெ.தி. 1.5.6.

திருமலை - திருவேங்கடம். இப்பாஷை நடையாடும் இடத்துக்கு எல்லையாய் இருக்குமிறே திருமலை. பெ.தி.1.2.0.

திருமுளைத் திருநாள் - விழாத் தொடக்கத்திற்காகத் தானியங்களை ஊற வைக்கும் நாள், திருமுளைத் திருநாளில். 7.10.4-36.

திருமுன் காணிக்கை - அடியுறை. தான் திரட்டின பல பதார்த்தங்களையும் என்னுடைய நாதனானவனுக்குத் திருமுன் காணிக்கையென்று இத்தை ஸமர்ப்பிக்கையிலுண்டான த்வரையாலே மிகவும் விரைந்து வாராநிற்பதாய், தன் பக்கல் அவகாஹித்தாருடைய ஸகல ச்ரமங்களும் மாறும்படி குளிர்ந்திருப்பதான திருச்சிலம்பாற்றையுடைய திருமாலிருஞ்சோலையாகிற அதுவே - விமலன் மலை. பெரி.தி.4.3.9.

திருவடி - அனுமன். அஸ்ப்ருஷ்ட ஸம்ஸார கந்தரான திருவடி. பெ.தி.1.2.2.

திருவடிநிலை - காலணி. ஸ்ரீபரதாழ்வான் முடிசூடாமையாலும் திருவடிநிலை கொடுத்துப் போருகையாலும். பெரி.தி. 3.9.8.

திருவநந்தாழ்வான் - ஆதிசேடன். அஸ்ப்ருஷ்ட ஸம்ஸார கந்தரான திருவடி, திருவநந்தாழ்வான். பெ.தி.1.2.2.

திருவாட்டி - பணக்காரி. ஒரு திருவாட்டி பிள்ளை பெறும்படியே என்கிறாள். பாவை, 2-6.

திருவிடையாட்டம் - 1. திருமகளுக்குத் தரப்பட்ட கொடை. இவனுடம்பு தேவதாநமும் திருவிடையாட்டமுமாயிறேயிருப்பது. பெரி.தி.4.4.8. 2. செல்வம். திருவிடையாட்டத்திலே இழிய அமையும் ஐச்வர்யம் என்பது அடிக்குறிப்பு. பெ.தி.1.1.1. 3. நாராயணன். நாராயணா - ப்ரணவமாதல் நமஸ்ஸாதல், சதுர்த்தியாதல் கூட்டாமையாலே திருவிடையாட்டத்திலே இழிய அமையும். பெ.தி.1.1.1.

திறலிய - திரண்ட. திறலிய தோள்கள். 3.9.7-12.

திறை - கப்பம். உன்னுடை நெஞ்சைத் திறைகொள்ளும் பிராட்டிக்கு வல்லபனானவனே. பெரி.தி.2.3.3.

தீரக்கழிய - முற்றிலும் அதிகமாக. பெருமாள் திருவுள்ளத்திலே தீரக்கழிய அபராதத்தைப் பண்ண. அம.6, அழகு. தீரக்கழிய அபராதம் பண்ணின பின்பு இனி ஓரஞ்சலி நேராமற் போகாது என்றானிறே. 1.1.5-36.

தீற்றல் - தீனியாகத் தருதல். மதகரமான த்ரவ்யங்களைத் தீற்றிப் பிச்சேற்றி. பெரி.தி.4.2.5.

துடக்கம் - தொடக்கம். நாற்றந் துடக்கமானவற்றை. 2.6.5-24.

துடக்கு - சம்பந்தம். ப்ரஜைகளை எல்லாம் விஸ்த்ருதமாக்கின காரணத்வ ப்ரயுக்தமான குடல்துடக்கை உடையவனே. குடல்துடக்கு - சரீர சம்பந்தம் என்பது அடிக்குறிப்பு. பெ.திருவந்.18.

துடர்த்தி - தொடர்ச்சி. பின்துடர்த்தியறக் கொன்று பறிக்கும். பெ.தி.1.9.3.

துடர்ந்து - தொடர்ந்து. பிரியில் தரியாதே பின்னே துடர்ந்து கூப்பிட. பெ.மடல், கண்ணி, 47.

துடை - காலின் மேற்பகுதியாகிய தொடை. சில ராஜபுத்ரர் துடை குத்தவிட்டு உறங்குமாப் போலே. பெ.தி.1.2.3.

துடைப்பற்று - தொடைப் பகுதி. சேலையைக் கடுக்கித் திருவரையையுந் துடைப்பற்றையும் ஒருகால் காட்டியருள வேணும் என்றார். தி.வி.44.

துப்புரவு - திறமை. ஸர்வேச்வரனைக் கேள்வி கொள்ள வேண்டாதபடி துப்புரவுடையனாகையாலே பூர்ணனான சதுர்முகனைப் படைத்தவன். 1.5.3-36.

துரால் - கலந்திருத்தல்; தேவையற்ற கலப்பு. தழையும் தண்டும் கொம்பும் கொடியுமாய்த் துராலாயிராதே, வெறும் பூவேயாயிருக்கை. 6.7.6-36.

துருப்புக் கூடு - தூற்றாப் பொதி. துருப்புக்கூடாக அவ்வூரையன்றோ இவள் உகந்தது. 6.5.1-36.

துருவி நிலைகுத்துகை - தேடியறிந்து குத்துகை. நாமிருந்த இடந்துருவி நிலைகுத்தவல்ல நெஞ்சையுடையவனன்றோ? 2.4.1-36.

துலுக்குதல் - அசைத்தல். அவன் 'செய்கிறோம்' என்று தலை துலுக்கினால், அது பெற்றதாய் மேல் நடக்கலாம்படியாய் இருக்குமிறே கார்யம். 10.1.0-36.

துலைதல் - முற்றிலும் நனைதல். பசுக்களும் இடையரும் வர்ஷத்திலே துலையப் புக. பெ.தி.10.10.3.

துவக்குண்ணல் - மயங்குதல். நோக்கிலும் ஸ்மிதத்திலும் துவக்குண்டு. 2.9.4-24.

துவக்குதல் - மயக்குதல். தன்னுடைய போக்யதையாலே துவக்கி ஆச்ரிதர் குற்றம் நெஞ்சில்படாதபடி பண்ணுமவள். பெ.தி. 2.6.2.

துவக்குமவர் - மயக்குபவர். பருவத்தை இட்டுப் பகட்டித் துவக்குமவர்கள். பெ.தி.1.1.1.

துவட்சி* - 1. தளர்ச்சி. துவளுகிற துவட்சி பொறுக்க மாட்டாமையாலே. பாவை, 10-6. 2. சோர்வு. ஸம்ச்லேஷத்தாலே வந்த துவட்சி. பாவை, 20-3.

துழாவுதல் - தேடுதல். பிரிந்து துழாவுகிற ஸமயத்திலே. 6.8.1-36.

துறுத்தல் - சூட்டுதல். மண்ணாயினும் கொண்டு வீசுமினே என்னுமளவும்போய், அது கடக்க நின்று வீசுமளவும் போராதே, அது தன்னையேகொண்டு வந்து குழலிலே நிரம்பத் துறுக்க வேண்டும்படியாயிற்று, தசை முடுகினபடி. தி.வி.81.

துறை* - இடம். திருவடி தோற்ற துறையிலே இவரும் தோற்றது. 2.2.5-36.

துறோட்டி - அங்குசம். துறோட்டியிட்டுக் கொத்துகையாலே புண்ணாயிருத்தல். பெ.தி.3.8.3.

துன்னல் - சிறு திவலை. அன்னலும் துன்னலுமாய். 8.5.4-36.

தூசி* - படையின் முன்னணி. தூசியேறின பேர்க்கு உரமாக நின்ற பேரணி உறுபூசலானவாறே திரள அமுக்குமா போலே. 9.9.2-36.

தூர் - பாவம். உன்னுடைய ஸகல தூருக்கும் நானே கடவேன். நீ சோகிக்க வேண்டா. நான்.தி.71.

தெகுடாடுதல் - தடுமாறுதல். இப்பாட்டில் அவ்வுபகாரத்துக்கு ப்ரத்யுபகாரம் தேடிக் காணாமையாலே தெகுடாடுகிறார். க.நு சி.10, அழகு.

தெண்மை - தெளிவு. நான் கொண்டல்லது போகேன். புக்க காரியம் தலைக்கட்டாதே மீளுவனோ என்னும் தெண்மையையுடைய வாமநனாய். பெ.தி.4.10.7.

தெருவுபாடு - தெருப்பகுதி. அதாவது வீட்டின் முன்பகுதி. புத்தகங்களை அகவாய் பெருச்சாளி அறுத்துக் கிடக்கத் தெருவுபாட்டை நூலும் துரும்பும் வைத்து அலங்கரிக்குமா போலே. தி.மா.6.

தெற்குத் திருமலை - திருமாலிருஞ்சோலை மலை. க்ஷத்ரியர்கள் என்னது என்னது என்று அபிமாநிக்கும்படியிருக்கிற தெற்குத் திருமலையும். பெ.மடல், கண்ணி, 6.

தெற்றுதல் - கட்டுதல். அது வெள்ளிபோலே இருக்கையாலே அத்தை ஆபரணமாகத் தெற்றிப் பூண்பர்களிறே இடையர். பெரி. தி. 2.6.1.

தேக்கிட்டார் - எதிர்த்து வருமளவு உண்டவர்கள். தேக்கிட்டார்க்குச் சோறிடுகை யன்றிக்கே. தி.நெ.தா.1, பட்டர்.

தேக்கிடுதல் - நிறைவடைதல். அணியரங்கன் என்னமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணா என்று இவ்வளவிலே தேக்கிட்டு விடுவர்கள் இங்குள்ளார். 9.4.1-36.

தேட்டம்* - விருப்பம். இப்போது இருப்புத் தேட்டமானாற் போலே அப்போது முடிவு தேட்டமாமிறே. 1.4.9-24.

தேவர்* - தங்கள் முன்னிலையில் உள்ளவரைத் தேவர் என்று குறித்தல். தேவர் திருவுள்ளத்திலோடுகிறதென்? 10.7.0-36. தேவர் சீற வேண்டும்படியாய் இருக்கும். பெ.தி.6.2.7. தேவர் திருவடிகளுக்கு அடிமையானேன். பெ.தி.7.4.6.

தேவர்கள் - அமரர்கள். தேவர்கள் பார்த்துக் கிடக்கத் திருமார்பிலே ஏறினாள். மூ.தி.16.

தேவாரம் - வழிபடுகடவுள். இவர் தேவாரமான பெரிய பெருமாளையல்லது பர வ்யூஹ விபவங்களை அறியாதபடியும். அம. 0, பெரி. அழகு உம்முடைய தேவாரமோ. 6.8.10-36.

தேவை - 1. கட்டளை. தேவையிடாதார் எழுந்தருளினார். 3.6.8-36. 2. கடமை. நம்மைப் போலே தேவைக்குப் பரகுபரகென்று வருகையன்றிக்கே...பெ.தி. 2.6.6.

தைச்சு - தைத்து என்பதன் கொச்சை. சரீரமானது அம்பு தைச்சு பூமியிலே புரளும்படியாக. பெ.தி. 1.4.1.

தொக்கு - 1. மேல்தோல். தொக்குக் கழிந்த சுளைபோலே. 10.7.5-36. 2. உறவு. இவ்வடிவும் பவ்யதையுமாயிற்று புறம்புள்ளாரோட்டைத் தொக்கை யறுத்ததும், அபரிச்சிந்நமான காதலை விளைத்ததும். 5.3.4-24.

தொங்குகை* - தங்குகை; நிற்பது. கையில் ஒரு வளையும் தொங்காது என்னுமிடம் தோற்றுகிறது. பெரி.தி. 3.4.8.

தொடர் - ஈயம். உருக்குவதற்கு உறுப்பான மண்ணாலாகிய பாத்திரம். மாத்ரு போஜனத்தில் அந்தர்பூதங்களான க்ரூர த்ரவ்யங்களாலே தொடரிலிட்ட ஈயம்போலே துடியா நிற்கும். தி.மா.0.

தொடர்த்தி - தொடர்ச்சி. பின் தொடர்த்தியறும்படி கொன்று. 4.9.6-12.

தொடை - 1. பாடல். இசையோடே கூடியிருந்துள்ள தொடைகளான. பெரி.தி. 1.5.11. தமிழ்த்தொடை ஆயிரத்திலும். 8.9.11-36. 2. துடை. தொடைகுத்த. பெ.தி. 11.4.2.

தொற்று* - 1. தொடர்பு. பாஹ்ய விஷயங்களில் தொற்றற்று. 7.9.11-24. 2. பற்று. ஆதுமோர் பற்றிலாத - ஏதேனும் ஒரு தொற்று இல்லாத. 3.4.10-24.

தோயல் - உறவு. அவன் ஸ்வரூபகுண விபூதியித்தனையும் இவள் தோயல் வாசியிறே யென்னுதல். பெரி.தி. 4.9.2.

தோள்தீண்டி - 1. ஒப்பு. வெள்ளியேய்ந்த மதிள் என்றது தனக்கு ஸ்மாரகமாய், நலிந்த சந்த்ரனுக்கும் கடலுக்கும் தோள் திண்டியாயிறே யிருப்பது. பெ.தி. 8.2.7. 2. சார்ந்துள்ளது. கடற்கரையோடு தோள்தீண்டியான க்ருஹோபவநத்திலே சென்று. 2.1.0-9.

தோள்மாறல் - ஒரு தோளை விட்டு மற்றொரு தோளுக்கு மாறுவது. பல்லக்குச் சுமப்போர் ஒரு தோள் நொந்தவாறே மற்றொரு தோளிலே மாற்றிக்கொள்வது போல. ஜந்ம பரம்பரைகளிலே தோள்மாறி நித்ய ஸம்ஸாரியாய்ப் போந்த இவரை. 1.0.0. முதல் ச்ரிய : பதி.

தோள்வந்தி - தோள்வளைகள். அத்தோள்கள் தோறும் தோள் வந்தியை யுடையராய் இரா நின்றார். பெ.தி. 9.2.3.

தோற்புரை* - மேலாக. தோற்புரையிலே போகையன்றிக்கே உயிர் நிலையிலே நின்று நலியாநின்றது. 5.5.5-24.

தோற்றரவு* - தோற்றம். நரஸிம்ஹத்தினுடைய தோற்றரவிலே ஒத்துப் பதம்செய்து. 4.8.7-24.

நகடு - சோகை. மண்தின்று வந்த நகடு போலன்றிறே குணாதிக விஷயத்தைப் பிரிந்தால் இருக்கும்படி. 6.2.0-36.

நகழ்ந்து - நகர்ந்து என்பதன் சிதைவு. மேகங்களானவை கடலிலே போய்ப்புக்கு முத்தையடைய வாரிக்கொண்டு நகழ்ந்து நகழ்ந்து நடக்கமாட்டாதே. பெ.தி. 3.8.4.

நச்சுதல் - விரும்புதல். த்ருஷ்ட ப்ரயோஜநங்களை நச்சி. பெரி.தி. 4.6.0.

நசை - விருப்பம். ப்ரஹ்ம ருத்ராதிகள் பக்கல் நசையறுத்து. 1.3.7-24.

நடுவிலாய்ச்சி - நடுத்தாய். கைகேயீ இப்படிச் சுட்டப்பெறுகிறாள். நடுவிலாய்ச்சிக்கு ப்ரியமில்லாமையாலே போந்தோம். 10.8.6-36.

நடையாடல் - வழங்கிவருதல். இப்பாஷை நடையாடி சிஷ்ட ப்ரசுரமான தேசங்களெங்கும். 1.0.0-36, முதல் ச்ரிய:பதி.

நத்தம் - ஊர். ஒரு நத்தமில்லாதான் ஒருவனையோ நான் பற்றிற்று. 5.8.10-36.

நம்பி மூத்தபிரான் - பலராமன். அண்ணன் என்பது நேரடிச் சொற்பொருள். நம்பி மூத்தபிரானையும் ஒழியத் தனியே திரியாநிற்றி. 10.3.10-36.

நம்மது - நமது. நெடுநாள் நம்மது என்றிருந்து. 2.3.4-36.

நல்தரிக்கவிருத்தல் - நன்றாக இருத்தல். திருவடி தோளிலே நல்தரிக்க விருத்தல். தி.பல்.7.

நல்லடிக்காலம் - நன்மைக்கு இடமளிக்கும் காலம். த்ரேதாயுகமாகையாலே காலமும் நல்லடிக்காலம். பாவை, 16-6.

நல்விரகு - நல்வழி. அநாயாஸேந பெறலாவதொரு நல்விரகைப் பெற்று. 2.3.8-24.

நலுக்கம் - வருத்தம். கர்ப்பிணிகளான ஸ்த்ரீகள் தங்களுடைய ஆதரத்தால், ஸ்திதி கமந சயநாதிகளால் கர்ப்பத்திலிருக்கிற பிள்ளைகளுக்கு நலுக்கம் வாராதபடி பேணிக்கொண்டிறே திரிவது. பெரி.தி.3.2.8.

நற்கொலை - சித்திரவதையின்றி ஒரே முறையில் கொல்லுவது. அம்பு நற்கொலையாகக் கொல்லும். பாவை, 21-6. நற்கொலையாகாதே உயிர்க்குலை யாக்கி நலியாநின்றது. பெ.தி.11.1.2.

நற்றரித்தல் - நன்கு தங்குதல். இப்போதாயிற்று வளையம் செவ்வி பெற்றதும் முடிநற்றரித்ததும் திருக்கண்கள் விகஸிதமாயிற்றதும். 2.6.11-36,

நற்றாய் - ஈன்ற தாய். நற்றாயானவள். 5.6.10-12.

நறுவட்டாணித்தனம் - நல்ல கெட்டிக்காரத்தனம்; வாக் ஸாமர்த்தியம். நாழ் என்று தரமுடைமை. அத்தாலேற்றத்தைச் சொல்லுகிறது. அதாகிறது-நறுவட்டாணித்தனம். தி.வி. 71. நாம் நறுவட்டாணித்தனத்தை மிகவுடையோம். பெ.திருவந்.10.

நாகு - பசு. நாகின் மேலே பித்தேறின விடை.பெ.மடல்,கண்ணி, 92.

நாச்சிமார் - தேவிமார். நாச்சிமார் திருமுலைத் தடத்தாலே. 2.6.2-36.

நாயன் - தலைவன். திருத்துழாய் மாலையையுடைய என் நாயனை. 2.6.3-24. வீர ரஸத்தில் ப்ரதாநனான என் நாயன். பெ.தி. 1.4.1.

நாயனார் - தலைவர். திருவட்டாற்றில் நாயனார். 10.6.10-24, 36.

நாயிறு - ஞாயிறு. அழகியதாய் அத்விதீயமான நாயிறு. 4.4.2-24.

நாலு - நான்கு. நாலு கண்ணாலே. 5.3.7-36.

நாலுதல் - தொங்குதல். நாலும்படி கட்டின. பெரி.தி.1.4.1.

நாலுபாடு - நான்கு பக்கம். ஒரு காரியப்பாடு இல்லாமையாலே நாலுபாடும் போருகிறபடி. பாவை, 23-3.

நாவீறு - சொல்லாற்றல். நாவீறுடைய எனக்கு. 6.4.9-9.

நாளோட்டம் - காலப்போக்கு. பிறந்ததொன்று நாளோட்டத்திலே அறியார்களோ? என்ன. 6.2.7-24.

நாற்றம் - வாசனை. நாற்றந் துடக்கமானவற்றை. 2.6.5-24.

நாற்றுதல் - கவிழ்த்தல். தலைகளை மிகவும் நாற்றிக்கொண்டு. பெரி.தி.3.6.8.

நிமிதல் - நெளிதல். நிமியும் வாயும், கண்களும் இருக்கிறபடி. 9.9.3-36.

நியமங்கள் - சாஸ்த்ரங்களில் சொல்கிற அருந்தேவைகளெல்லாம் கிடக்க, கிட்டலாவதொரு விரகு பெறுவதே! 10.8.3-24.

நிரப்பம் - நிறை. நிறை என்பதற்கு நிரப்பம் என்று பொருள் எழுதப்பட்டுள்ளது. 5.3.3-12.

நிலக்கிடை - தரையில் கிடத்தல். ஒரு கொம்பிலே சேர்க்க வேண்டியிருக்க நிலக்கிடை கிடக்கிறபடி. தி.வி.9.

நிலம் - 1. கூடியது. தமக்கு நிலமாய்ப் பேசுகிறாரே இவர். 1.1.1-36. ஒருவர்க்கும் அறிய நிலமோ. 1.1.8-36. 2. மாடி. பல நிலங்களையுடைத்தாகையாலே அலங்க்ருதமான மாடங்கள். 5.9.4-36.

நிலமிதி - நிலத்தின் தொடர்பு. திருமலையின் நிலமிதியாலே வளரா நின்றுள்ள. 2.10.1-24.

நிலவர் - உரியவர். இதுக்கு நிலவரான நித்தியஸூரிகள். 2.3.0-36.

நிலவறை - பூமிக்கடியிலுள்ள அறை. நிலவறைகளிலேயிறே வளர்ந்தது. பாவை, 25-6.

நிலவன் - 1. வல்லவன். க்ஷத்ரியன் பருவம் நிரம்புவதற்கு முன்னே யுத்தத்தில் நிலவன் ஆமா போலேயும். பாவை, 11-6. 2.நிலத்திற்குரியவன். நிலவனுக்கும் ஸஞ்சரிக்க ஒண்ணாத படியாய்த்துக் காட்டின் வெம்மை இருக்கிறபடி. பெரி.தி. 4.2.8. அடிக்குறிப்பில் நிலவன் என்பதற்குக் காட்டின் வெப்பத்தையும் குளிரையும் தாங்கிக்கொள்ளும் தரித்திரன் என்று பொருள் கொள்ளப்பட்டுள்ளது. அஃது அவ்வளவு பொருத்தமாகத் தோன்றவில்லை.

நிலையழகு - நிற்கும் அழகு. நிலையார நின்றான் என்று நிலையழகிலே துவக்குண்பார்க்குத் திருமலையில் நின்றருளியும். தி.ச.வி.60.

நிலையாள் - நிலைத்துள்ள ஆள். உன் திருவடிக் கீழே பரிகைக்கு நிலையாளாக என்னைக் கொள்வது என்று? என்று அவன் தன்னைக் கேட்கிறார். 8.3.8-36.

நிழலிடல் - தெரிதல். உள்ளுள்ளவையெல்லாம் புறம்பே நிழலிட்டபடி. அம.10. பெரி.

நிறக்கேடு - பெருமைக் குறைவு. தண்ணியரோடு கலந்துவரும் நிறக்கேட்டில். 1.4.6-24.

நிறப்பாடு - வண்ணம். தன் நிறப்பாட்டாலே ஸ்ரீதண்டகாரண்யத்தை மயிற்கழுத்துச் சாயலாக்கா நின்றது என்றானிறே ஸ்ரீவால்மீகி பகவானும். தி.நெ.தா.21, பட்டர்.

நிறம்பெறல் - சிறப்புப் பெறல். நிறம்பெற்றபடி. 2.5.7-12.

நீஞ்சப்புகுதல் - நீந்தப்புகுதல் என்பதன் கொச்சை. நீஞ்சப்புக்குத் தெப்பத்தை இழந்தேன் என்னுமா போலே. அம.7, பெரி. ப்ரளயங்களை நீஞ்சிக் கரைகண்டாற் போலே. தி.வி.48.

நீர்க்களிப்பு - நீர்ப்பசை; நீர்க்களிப்பை அறுத்துக் கொடுக்கும். 7.8.2-36.

நீர்ச்சாவி - நீர் இன்றிக் காய்ந்த பயிர். ஒரு நீர்ச்சாவியாய் வாடினபடி. 2.7.0-36.

நீர்த்தாழ்வு - பள்ளம். நீர்த்தாழ்வுகளிலே இரையெடுத்துத் திரியா நிற்கும் பகம். பெரி.தி.2.5.4.

நீர்ப்புழு - நீரில் உள்ள புல்லிய மீன்போன்ற உயிர்; முதலை. க்ஷுத்ரமா யிருப்பதொரு நீர்ப்புழு பக்ஷ்யமாகக்கொண்டு, அத்தாலே வீற்றிருந்தேழுலகும் தனிக்கோல் செல்ல இருப்பாரைப் போலே பூர்ணம் மந்யமாநமாய் இருப்பதொரு நீர்ப்புழுவை இலக்காகக் கிடீர் வந்தது. தி.மா.28.

நீர்மை - 1. தன்மை. ஆச்ரித ஸம்ரக்ஷணம் பண்ணும் நீர்மைகளை அநுஸந்தித்து. 2.4.0-9. 2. எளிமை. நீர்மைக்கு எல்லையான திருமலை ஆச்ரயணீய ஸ்த்தலம். 6.6.11-36.

நுணி - நுனி என்பதன் தவறான வடிவம். மூங்கிலானது மலை முழஞ்சிலே வைத்த தேன் கூட்டளவும் வர வளர்ந்து தன்னுடைய நுணியாலே அதினுடைய வாயைக் கிழிக்க. பெ.தி.9.8.5.

நுணுக்குதல் - பாடுதல். திருநாமத்தைச் சொல்லி அதுதன்னை வீணையிலே யேறிட்டு நுணுக்கினாள். தி.நெ.தா.15.

நுமுந்தல் - செருகுதல். திருக்குழலைக் குலைத்து நுழுந்த. 10.1.1-36. கிண்ணகத்தில் இழிவாரைப் போலே மயிரைப் புகுந்துமுடித்து நுழுந்தி, வலியுடைத்தான கச்சையிட்டுக் கட்டி. பெ.தி.10.8.2.

நெஞ்சாறல் - மனக்கலக்கம்; இழவு. புறம்பே ஒருவனுக்கு ஒருவன் விருந்திடும்போது நெடுநாள் பச்சைதேடி விருந்திட்டால் 'இவன் உண்டு என்ன குறைசொல்லப் புகுகிறானோ?' என்று நெஞ்சாறலோடே தலைக்கட்ட வேண்டிவரும். 1.6.1-36. அவ் இழவு தீர்ந்தேன் - நெஞ்சாறல் கெட்டேன். பெரி.தி. 5.4.8.

நெஞ்சுளுக்குப்படுதல் - நோவுபடுதல். நீர் இங்ஙனே கிடந்து நெஞ்சுளுக்குப் படாநிற்கிறதென்னென்ன. பெரி.தி.3.5.4.

நெடுகுகை - நீளுதல். ராத்திரி நெடுகுகையன்றிக்கே ராத்ர்யவயவயங்கள்தான் நெடிதாகை. 2.1.2-24.

நெடுந்தெரு - பெரியதெரு. நெடுந்தெருவோடு வ ா சி ய ற. 6.9.1-36.

நெடும்பாடு - பெருங்குறை விலையில்லாத ரத்நங்களாலே செய்த ஏகாவலியிலே ஒரு ரத்நம் குறைந்தாலும் நெடும் பாடாய் இருக்குமிறே. பாவை, 30-6.

நெடுவாசி - பெரும் வேற்றுமை. ப்ரபந்தாந்தாங்களிற் காட்டில் இப்ரபந்தத்துக்கு நெடுவாசியுண்டு. தி.மா.0.

நெய்யாடல் - எண்ணெய் தேய்த்துக் குளித்தல். அந்த ப்ரீதிக்குப் போக்கு விட்டு நெய்யாடல் போற்றிக்கொண்டு திரியுமாப் போலே. பாவை, 4-3.

நெற்றி - 1. முயற்சி. நெற்றி பெருத்துப் பலமொன்றும் இன்றிக்கே இருக்குமென்னுமது - இளிம்பிறே. 9.1.4-36. 2. போர்த் தலை. முனை முகத்து - பூசல் நெற்றியிலே. பெ.தி.4.6.4.

நென்னேற்று - நேற்று முதல்நாள். அடியாய் இருப்ப தொன்று நென்னேற்று இல்லை. 10.6.3-24.

நேர்கொடு நேர் - நேருக்கு நேர். ப்ரஹ்ம ஸ்ருஷ்டி போலே ஸங்கல்பத்தாலே செய்கையன்றிக்கே நேர்கொடு நேரே பூசலிலே நின்று அழியச் செய்தாய். திருவெழு. அடி, 5-6.

நேர்த்தரவு - செல்லும் சீட்டு; அபராதத்துக்கு நேர்த்தரவு கொடுக்கும் முறுவலிறே. தி.நெ.தா.18.

நேர்த்தி - முயற்சி. இப்படி நேர்த்தியற்றிருக்குமாகில் பலமும் அளவு பட்டிருக்குமோ? 4.6.4-36.

நேர்தரவு - செல்லும் சீட்டு; அதாவது நேரில்தரும் ஆணை. தம்பொறையாகிற நே ர் த ர வை க் காட்டுங்கோள். 1.4.7-36.

நேர்ப்பம் - நேர்த்தி. மரக்கலம் அலசாதபடி கடைந்த நேர்ப்பம் சொல்லுகிறது. பாவை, 30-6.

நேர்பாடு - வாய்ப்பு. திருநாட்டிலே வேறொருவர் அபிமாநிக்கக் கடவரின்றிக்கே எல்லாரும் உங்கள் அபிமாநத்திலே அடங்கும்படியாகப் பெரிய பிராட்டியாரும் நீயுமே வர்த்திக்கக் கடவதாகக் கண்டு வைத்த நேர்பாட்டைக் கண்டு திருவடிகளை அடையவும் பெற்றேன். 4.9.10-9.

இத்தோடொக்கும் நேர்பாடு மற்றிலை நெஞ்சே. பெ.திருவந்.40.

நேரிய - அழகிய. நேரிய இடையையுடையளாவது. பெ.தி.1.2.3.

நொய்ப்பம் - திறமை. பர்வதத்தை மத்தாகக் கொண்டு அத்தை வாஸுகியையிட்டுச் சுற்றிவைத்த நொய்ப்பம் எல்லார்க்கும் கடையலாம்படி இருக்கை. 7.1.7-36.

நொழுந்தி - அமுக்கி. சேற்றிலே தலையை நொழுந்திப் பட்டுப் போகா நிற்பர் சிலர். 1.3.0-36.

நோக்காடு - நோவு. உன் தலையிலே நோக்காடு உண்டாமென்று அப்போது செய்யாமல் விட்டுவைத்த என்னுடை குற்றமே யன்றோ. பெரி.தி.2.3.10.

நோக்குதல் - பாதுகாத்தல். எங்களால் நோக்கலாம் எல்லை கழிந்தது. பெ தி.2.7.2. இப்ரஜையை (தைவத்திடமிருந்து) நோக்கித் தரவேணும். பெ.தி.5.8.8.

நோவாட்டி - துன்பப்படுபவள். படுகிற து:க்கத்தை உங்களுக்குச் சொல்ல வேண்டாதபடி நோவாட்டியான நான் இப்போது இது சொல்லும்படி அறிகிறிலேன். 8.2.2-36.

நோவு - துன்பம். தம்மைப் பிரிந்து நோவுபடுகிற இற்றைக்கு மேற்பட்ட ஆற்றாமையில்லையிறே எனக்கு. 9.7.9-36.

நோவுபாடு - துன்பம். வேழத்தரந்தையை - எளியராயிருப்பர் நோவுபட்டாற் போலன்றிறே இதினுடைய நோவுபாடு. திருவெழு. அடி,12.

பகலமுது - பகல் உணவு. பெருமாளுக்குப் பகலமுது லங்கையில் வடக்கு வாசலில் விடுவித்ததாயிருக்கும். உங்களுக்கு த்வரை யற்றிருந்ததீ என்னும் ஆய்த்து. தி.மா.27.

பகலிருக்கை - பகலில் தங்குமிடம். உகந்தருளின நிலங்களெல் லாம் பகலிருக்கை என்னும்படி ஆச்ரித ரக்ஷணத்துக்கு ஏகாந்த மான இடமென்று நித்யவாஸம் பண்ணுகிற ஸ்த்தலமான திருவரங்கம் திருப்பதியில். பெரி.தி.4.3.0.

பகைத்தொடை - பரபாகம்; எதிர்த்தட்டான பொருள்களின் சேர்த்தி. நல்ல நிறத்தை உடைத்தான மாணிக்கங்களை யும் அப்படியிருந்துள்ள மரகதங்களையும் பகைத்தொடை யாகக் கொண்டு ஒழுங்குபட அழுத்தி. பெரி.தி.4.4.3.

பகைப்பு - வெறுப்பு. மேகங்களினுடைய பகைப்பையும் திருவாய்ப் பாடியிலுள்ளார் எளிமையையுங் கண்டு. பெரி.தி.4.7.6.

பகையர் - பகைவர். இப்பேச்சைக் கேட்டால் பகையரும் இரங்க வேண்டும்படியிருக்கை. 5.8.11-24.

பங்களம் - 1. பதர்க்கூட்டம்; பயனற்றது. அர்ஜுநனுக்குத் தன்னைக் கொடுத்து, துர்யோதநனுக்குப் பங்களத்தைக் கொடுத்துவிட்டானிறே. 1.3.1-36. 2. கூட்டுப்படை. சேர்க்குமவள் ஒருத்தியுமேயாக அல்லாத பங்களம் அடங்கலும் 'நமக்கு நிலமன்று' என்று கைவாங்கிற்று. 7.3.3-36.

பச்சிறச்சி - பச்சை இறைச்சி என்பதன் சிதைவு. புதிய புலால் என்பது பொருள். பச்சிறச்சி தின்னும். பெ.தி.10.3.4.

பச்சை - காணிக்கை. இப்படி ஆழ்வார் உம்மை விஷயீகரிக்கைக்கு நீரிட்ட பச்சை என்னென்னில், ஸத்துக்களும் கைவிடும்படி தண்ணியனானேன் என்கிறார். க.நு.சி.4, நஞ்சீயர்.

பசல் - பயல். பசல்களோடும். பெ.தி.8.8.6.

பசலைக்கலம் - சுடப்படாத மட்கலம்; பசலைக்கலம் போலே உடையும்படி கண்டவன். மு.தி.18.

பசலைத்தனம் - அறியாத் தன்மை. பசலைத்தனத்தில் செய்த செயல் என்று விடலாம் அது. பாவை, 24-6.

பசளைக்கலம் - சுடப்படாத மட்கலம். மயிரைப்பிடித்துக் கீழே விழவிட்டு மேலே பாய்ந்து பசளைக்கலம் போலே உடைத்தான். 8.4.1-36.

பசுங்கலம் - பச்சைப் பானை. பசுங்கலம் உடைந்தாப் போலே. பெரி.தி.4.2.6.

பசுங்கூட்டு - செழுமையான கலவை. வடிவழகும் மேன்மையும் நீர்மையும் ஒரு பசுங்கூட்டாயிறே பரத்வமிருப்பது. தி.மா.:.

பசுத்த - 1. பசுமையான. பசுத்த கமலத்தினுடைய குளிர்ந்த மாலை. பாவை, 30-6. 2. பச்சை. சிவந்த நிறத்தையும் பசுத்த நிறத்தையும் உடைத்தான அவையிரண்டோடும் (நாரணன் திருவடி திருத்துழாய் ஆகிய இரண்டோடும்) கலந்து ஆகாசத்தில் நின்றும் பூமியிலே இழிந்து ப்ரவஹிக்கிற ஜலத்தாலே. பெரி.தி.4.7.2.

பசும்பொய் - முழுப்பொய். பச்சை பசும்பொய்கள் - மெய்கலவாத புதுப் பொய்களை. 3.9.7-12.

பசை - 1. ஈரம். ஆத்மாவை உள்ளுள்ள பசையெல்லாம் அறும்படி உலர்த்த. 2.1.9-9. 2. பயன். வழக்குப் பேசினால் பசையுண்டோ. 3.3.3-36; உருவமே மருவிலும் பசை போரும். பெ.தி.1.1.3.

பட்டணம் - நகரம். என்ன பட்டணத்தே புக்கான். பெ.மடல், கண்ணி, 137.

பட்டோலை - பதிவேடு. என்பின்னே வந்து பட்டோலை எழுதிக் கொள்ளுங்கள். சி.மடல், கண்ணி, 75.

பட அடித்தல் - துன்புறுத்தல். லோகத்தை யெல்லாம் பட அடித்துக் கிடந்து கூப்பிடும்படி யிறே இவன் செய்து திரிவது. பெரி.தி. 4.8.5.

படாம் - போர்வை, துணி. பச்சைப் படாத்தையிட்டு முட்டாக்கிட்டு நின்றான். 4.4.4-36.

படி - 1. தன்மை; தன் படிகளைக் காட்டக் கண்டு. 4.5.5-24. 2. வகை. இப்படிகளாலே அடிமையே புருஷார்த்த மென்னு மிடத்தை நிர்ணயித்து. 1.0.0. இரண்டாம் ச்ரீய:பதி. 3. உருவம். உடம்பினுடைய படியில். பெ.தி.2.5.3. 4. கூலி, அரிசிப்படி. கைமேலே இலக்கை பெறாதார்க்கு அன்றாடப் படிவிடவேணுமிறே. 4.8.7-36.

படிக்கம் - 1. திருவாராதனத்தில் திருவபிஷேக நீர் சேர்த்து வைக்கும் ஒரு பாத்திரம். படிக்கம் வைத்தல். பாவை, 29-6. 2. எச்சில் துப்பும் பாத்திரம். ஸர்வேச்வரனும் பிராட்டியுமாய்த் திரையை வளைத்துக் கொண்டிருந்தாலும் படிக்கம் குத்துவிளக்குப்போலே அவ்வளவிலும் நின்று அந்தரங்கமான வ்ருத்திகளைச் செய்யவேணும். 3.3.1-36.

படிகாப்பார் - தலையாரி. பாடிகாப்பார் எனவும் வருகிறது. ஒன்று கெட்டவாறே படிகாப்பாரைப் பிடிக்குமாபோலே. 10.1.4-36.

படிமா - எடுத்துக்காட்டு. நம்மோடு ஸஜாதீயர்பக்கல் பரிமாறின தன்றோ நமக்குப் படிமா, 10.4.5-36.

படியாணி - ஆணிப்பொன். படிச்சோதி - படியாணியான ஒளி என்னவுமாம். 3.1.1-36.

படுக்கைப் பற்று - 1. சீதனம். தன் படுக்கைப் பற்றான பூமியை 4.5.10-36. 2. அந்தப்புரம். படுக்கைப் பற்றிலே செல்லாதே கொள். பாவை, 4-3.

படுக்கை வாய்ப்பு - படுத்தற்கு நல்ல இடம் கிடைத்தல். படுக்கை வாய்ப்பாலே கிடந்து உறங்க. பெ.தி.3.5.7.

படுகுலைப்படுதல் - குலையிலே பட்டுவிழுதல். பொறுக்க மாட்டாமே படுகுலைப்பட்டார் போலே. 3.2.1-36.

படுகொலையடித்தல் - அடாவடித்தனமாக நடத்தல். படுகொலை யடித்தவனைத் தப்ப ஒரு தார்மிகன் கீழே ஒதுங்க நினைப் பாரைப் போலே. 9.6.0-36.

படுபாடர் - பிடிவாதக்காரர். சொல்லலாம், ஆகாது என்று அறியாதே சொல்லு சொல்லு என்று அலைக்கிற படுபாட ரான உங்களுக்கு நான் எதைச் சொல்லுவது. 5.6.4-36.

படை - அஸ்திவாரம், கடைக்கால். பகவத் விஷயத்தில் இட்ட படை கற்படையிறே. 3.8.5-36.

படைக்குறி - படைகளை எண்ணிச் சரிபார்த்தல். ராவணவதம் பண்ணிப் படைக்குறி காணாநிற்கிற அளவிலே முதலிகளிலே சிலரைக் காணா தொழிய. 3.6.8-36.

படைவீடு - நகரம். படைவீட்டிலே இருக்குமது சுகம். 2.10.7-36?

பண்ணறையன் - பண்பற்றவன். பண்ணறையனாகையாலே நிர்லஜ்ஜனாய் வந்து கொடுநின்றேன். தி.மா.33.

பண்ணை - முறை. நாலிரண்டு பண்ணை வலித்தாலும் மெல் காதுவில். பெ.தி.2.8.3.

பண்பு - அழகு. பரிவட்டப் பண்பிலே. பெ.தி.9.1.10.

பணயம் - ஈட்டுப்பொருள். தனிசுடையார் பணயமெடுப்பாரைப் போலே. பெ.தி.8.2.6.

பணி - 1. தொல்லை. செயல் முடிக்கையிற் பணியுண்டோ. 9.5.1-24. லபித்தாவாகை பெரும் பணியிறே. பெ.தி. 3.5.4. 2. உறுதி. இப்படி ப்ராக்ருத விஷயங்களின் பேரிட்டால் இம்மையில் நீங்கள் ஆசைப்படுகிற க்ஷுத்ர ப்ரயோஜநங்கள் தானும் ஸித்திப்பது பணியில்லை. பெரி.தி. 4.6.0.

பணிக்கொட்டில் - பானை செய்யும் இடம். த்ரௌபதியை மீட்டுக்கொண்டு போகிறபோது தங்கின பணிக்கொட்டிலிலே சென்று முகங்காட்டிக் கூடக் கதறியும் துணையானாப் போலேயும். 9.1.2-24.

பணித்தல் - சொல்லுதல். திருமாலையாண்டான் பணிக்கும்படி. 2.3.3-36.

பணிதி . பேச்சு. ஸ்நிக்த்தமான பணிதியாலும், வடிவில் பசுமையாலும் வாயில் பழுப்பாலும் நாயகனுக்கு ஸ்மாரகமாய் எலும்பை இழைக்கிற கிளியென்னுதல். 1.4.7.36.

பணிப்புடவை - விளிம்பில் வேலைப்பாடுடைய புடவை. காம்பு துகிலவை கீறி - பணிப்புடவைகளானவற்றையும் கிழித்து. பெரி.தி.2.7.3.

பணிப்பூ - வழிபாட்டுக்குரிய மலர். பணிப்பூவிட்டுத் திரிவர்களாயிற்று தேவர்கள் முன்பு. பெ.தி.1.4.1.

பணிமாறல் - படைத்தல். தூவுதல். செவ்விப்பூவைத் திருவடிகளிலே பணிமாற நினையுங்கோள். 10.5.10.9,24. நல்ல புனலொடு மலர்கள் தூவி - நல்ல புனலோடே கூடின மலர்களை ப்ரேமபரவசராய்க்கொண்டு பணிமாறி. 10.2.5.

பணை - கிளை. ஏற்கவே பணையோடு பணைபாயும். பெரி.தி. 3.5.9.

பணைத்தல் - கிளைத்தல். கற்பகச் சோலை போலே இருக்கிறது அநேகம் ஆயிரமாய்ப் பணைத்த திருத்தோள்கள். திருவா.5.

பதம் - இடம். எங்கள் பதத்தைக் கைக்கொள்ளவேணுமென்று. 10.9.9-9.

பதிக்கிடை - அருகில் இருத்தல். பரமபதத்தில் இருக்கில் அஸத்கல்பராவர்கள், அந்தர்யாமியாய் முகந்தோற்றாதே நின்று இரண்டு தலையையும் நோக்கித் தெளிவு பிறந்து, அம்மே என்றால் ஏன் என்கைக்கு,பதிக்கிடை கிடக்கிறபடி. பாவை, 25-6.

பதிப்படை - அருகில் உள்ள வாகனம். பெரிய திருவடியைப் பதிப்படையாக வைத்து வந்து புகுந்து கலந்து, இத்தலையகப்பட்டவாறே அவன் கடுமை போராதென்று அசேதநமான தேரை நடத்துமாபோலே பெரிய த்வரையோடே பெரிய திருவடியை நடத்துகிற க்ருத்ரிமனே! தி.நெ.தா.23.

பதிபடை - அவ்வவ் இடங்களில் கிடந்த படை. பதிபடை கிடந்த மல்லர். பெ.தி.2.5.5.

பயர்த்தல் - வெளுத்தல். உடம்பு வெளுத்துப் பயர்த்து. பெ.தி. 7.3.5.

பயலி - பாவனது செயலையுடையவள். நான் முதலியாகிலும் ஆகிறேன்; பயலியாகிலும் ஆகிறேன். 6.2.6-36.

பயலைமை - பசலைத்தன்மை. விரஹஸஹமல்லாத முலைகள் பயலைமை பூக்க. பெ.தி.3.6.5.

பரப்பறுதல் - சுருக்கமாதல். பரப்பற ஏழு பாட்டாலே. 1.1.0-36.

பரப்பன் - செல்வப் பரப்பையுடையவன்; அதாவது பெருஞ் செல்வன். இத்திருவாய்மொழியில் வாராமைக்கு அடி பரப்பனாகை என்று பார்த்தாள். 6.8.0-36. இதில் தன் ஐச்வர்யப் பரப்பாலே மறந்திருந்தான் அத்தனை என்று இருபத்துநாலாயிரப்படியில் வருதல் காண்க. 6.8.0-24.

பரம்புதல் - பரவி. இவை பரம்பி. பெ.தி.3.5.5. ஆதித்ய கிரணங்கள் புகுந்து பரம்பாது பகலாயே இருக்கிற மலை முலைஞ்சுகளிலே. பெ.தி.1.2.8.

பரமபதம் - வைகுந்தம். இட்ட வழக்கு பரமபதம் என்கிறார். 10.8.11-36.

பரவைவழக்கம் - செவிவழிச்செய்தி. இவ் வார்த்தை தான், ஸ்ரீநந்தகோபர் வஸுதேவர் பக்கலிலே கேட்டு வந்து சொன்னாராதல், ஸ்ரீமதுரையில் பரவை வழக்கமிங்கே வந்து பிறந்ததாதல். பெரி.தி.2.8.6.

பராக்கு - வேறொன்றில் கருத்தோடு இருத்தல். பராக்குக்கு ஸம்பாவனையுள்ள ஓலக்கத்திலே சொல்லாதே கொள்ளுங்கோள். 6.8.10-36.

பரிகணித்தல் - கணக்கிடுதல். பக்திமான்களில் பரிகணிக்கப் படாதே இருக்கிற எனக்கும் அயத்நஸித்தப் போக்யமே. 2.3.5-9.

பரிசை - இலாபம், ஊதியம். பரிசையாசைப்பட்டு முதலை இழப்பாரைப்போலே. பெ.தி.9.4.7.

பரிமாற்றம் - அனுபவம். அவர்களோடு பரிமாறுமா போலே ஒரு வழியால் வந்த ரஸத்தைத் தந்து விடுகிறிலன். 1.9.3-36. உடனுறவு. அல்லாதவற்றோடு பரிமாறும் அத்தை ஜநநி பக்கலிலேயும் பரிமாறத்தேடும். பெ.தி.1.1.5.

பரியட்ட வாய்ப்பு - அரையாடையின் பொருத்தம். பரிவட்டம் என்றும் வழங்குகிறது. பரியட்ட வாய்ப்பை அநுபவிக்கும் இதுக்கு மேற்பட மற்றொன்றில் போக ஒட்டாது ஆயிற்று இதில் அழகு. பெ.தி.1.2.5.

பரிவட்டம் - அரையாடை. நல்ல பரிவட்டத்தை உடைத்தான அகன்ற நிதம்ப ப்ரதேசத்தையுடைய தோழீ. 5.3.7-36.

பரிவர் - அன்புடையவர். இப்படி ப்ரளயார்ணவத்திலே பரிவ ரொருவரின்றிக்கே தனியே கண்வளர்ந்தருளுகிறவன். தி.ச.வி.22.

பரிவன் - அன்புடையவன். எல்லார்க்கும் பரிவனானவன். 1.5.3-9.

பருக்கை - கோது. அதில் பருக்கை தட்டாதபடி அதின் வாயிலே பிழியுமாயிற்று. பெ.தி.1.2.5.

பல்லி பற்றல் - கிளைத்தல், கண்தோறும் பல்லி பற்றுமாயிற்று வெற்றிலைக் கொடி. பெ.தி.3.1.9.

பலகணி - காலதர், ஜன்னல். பெண்கள் பலகணி வழியே நுழைந்து பார்ப்பாரும் நிற்பாரும். பெரி.தி.3.4.0.

பலகை - கேடயம். வாளும் பலகையும் பொகட்டு. பெ.மடல், கண்ணி, 74.

பலிசை - வட்டி. முதலில்லாதார் பலிசை இழக்குமித்தனை யன்றோ. 1.4.2-36.

பழம்புணர்ப்பு - 1. பழையநூல். பழம்புணர்ப்பான வேத மென்னுதல். 5.9.3-24. 2. வேதம். வேத ஒலியும் - அவன் நெஞ்சொழிந்து பழம்புணர்ப்புக் கேளா நின்றான் காணும். 7.3.1-36.

பழு - படி. ஆகையிறே ஒரு பழு ஏறப்பெற்றது. 10.6.5-36.

பழுது - தவறு. தர்மாதர்மங்கள் எல்லாமறிந்து, ராஜ்யத்தில் ஒருவர் ஒரு பழுதும் செய்யாதபடி நோக்கிக் கொண்டு போந்தவனாகையாலே. பெரி.தி.3.10.3.

பழுப்பு - சிவப்பு. கோவைக் கனிவாயில் பழுப்பிலும். பாவை, 29-6.

பழையவர் - முன்னோர். என்று பழையவர்கள் நிர்வாஹம். தி.வி.24.

பள்ளநாலி - பள்ளமடை. நீருக்குப் பள்ளநாலியான கோயில். தி.மா. 20.

பள்ளியந்துலாம் - தண்டிகை; பல்லக்கு. அந்த:புரக் கட்டிலிலே தெருவிலே பள்ளியந்துலாத்திலே ஏறி. பெ.தி. 8.1.8.

பற்றாசு* - 1. அடி, காரணம். அதுவே பற்றாசாக எனக்கு முகம் தந்து. க.நு.சி. 4, அழகு. ஆந்ருசம்ஸ்யம் பற்றாசாகத் தூதுவிடுகிறாள். 6.8.0-36. 2. பற்றுக்கோடு. எனக்குப் பற்றாசு ஆனார் இருக்க. பெ.தி. 8.1.5.

பாங்கு - உகப்பு (பவ்யம்) தன்னை அவர்களுக்குப் பாங்காக நியமித்து, அவர்களோடே பரிமாறுமென்று. 1.8.0-24.

பாசுரம் - பேச்சு; வார்த்தை. என்றாய்த்து அவர்கள் பாசுரம். 10.9.9-36.

பாஞ்சு - பாய்ந்து என்பதன் சிதைவு. மேய்ந்து என்பது பொருள். ஏறப்பாஞ்சு. பெ.தி. 10.7.12.

பாட்டம் - மழையளவு. ஒருபாட்டம் மழை விழுந்தாற் போலே. பெ.தி. 2.7.8.

பாட்டுண்கிறவன் - பாடப்படுபவன். கர்த்தாவுக்கும் கவிக்கும் பாட்டுண்கிறவனுக்கும் உள்ள மூன்று குற்றத்தையுஞ் சொல்லுகிறது. 1.6.11-24.

பாடாற்றல் - வருத்தம் தாங்குதல்; சகித்துக்கொள்ளல். ஸ்நேஹியுமான அவள் கையாலே கட்டுண்டது பாடாற்றலாமிறே. சி. மடல், கண்ணி, 37.

பாடிகாப்போர் - தலையாரி. பாடிகாப்பாரே களவு காணுமா போலே. 5.3.3-36.

பாடு - பக்கம். என்பாடு வருகைக்காக. 10.4.4-9.

பாத்தம் - தகுதி. து:க்காநுபவத்துக்குப் பாத்தமில்லாத என் மகளைச் சொன்ன இப்படியே பிச்சேறப் பண்ணினான். 4.4.4-9.

பாரித்தல் - பெரிதும் விழைதல். வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம் என்று பாரித்து, பாரித்தபடியே பாகவத சேஷத்வ பர்யந்தமாக வாசிகமாக அடிமை செய்து தலைக்கட்டுகிறார். 1.0.0. இரண்டாம் ச்ரிய:பதி.

பாரிப்பு - மிகுந்த விழைவு; மனோரதம். ஸர்வேச்வரனுடைய பாரிப்புக்கு அவதி என்னோ? 10.7.3-24.

பாலிபாய்தல் - பிரிந்து போதல். பலர் பக்கலிலே பாலிபாயக் கடவதான ஸ்நேஹத்தை. 1.4.4-36.

பாழ்ந்தாறு - படுகுழி. என்னுடைய தண்மையாகிற பாழ்ந்தாறு நிரம்பும்படியான பூர்த்தியை உடையவர் என்னும் அத்தனை. க.நு.சி. 4, பெரி.

பாழி - 1. இழியும் இடம். உணர்ந்தாராகில் தம்முடைய பாழியான க்ருஷ்ணாவதாரத்திலே மண்டுமித்தனை. தி.வி. 21. 2. இயற்கை. இந்தக் க்ரித்ரிம பக்தியானது பண்டே உன் பாழியிறே, இங்கும் அது தன்னையே முடிய நடத்தினாய் அத்தனையிறே. தி.மா. 24.

பாற அடித்தல் - சிதற அடித்தல். அஸுரவர்க்கங்களைப் பறக்க அடித்தாப் போலே, இந்த்ரிய வச்யதையையும் பாற வடித்துத் தரவல்லையே? 7.1.10-24.

பிச்சர் - பைத்தியக்காரர். பிச்சராய் இரா நின்றார்கள். பெ.தி. 7.1.8.

பிச்சன் - பித்தன். பிள்ளை அவற்றைச் சொன்ன சொல் தன் அளவிலே பர்யவஸிக்கும்படி நிற்கிற பெரும்பிச்சன். பெ.தி. 3.6.3.

பிச்சு - பித்து. பிச்சேற பண்ணுமவள் பேச்சும் அஸஹ்யமாம். பாவை, 2-6.

பிசகுதல் - 1. கலைதல். ஸம்ச்லேஷத்தாலே பிசகின திருத்துழாய் மாலையைச் சூடிக்கொண்டு. பெரி.தி. 3.7.5. 2. தயங்குதல். மத்த கஜம்போலே பிசகி நின்று உலாவா நின்றது. அம. 4, அழகு. 3. வருந்துதல். இவனைக் கொல்லில் ருக்மிணிப் பிராட்டி மநஸ்ஸு பிசகும் என்று. பெரி.தி. 3.9.3.

பிசல் - தசை. பிடரியிற் பிசல் பெருகும்படி. 3.5.7-12.

பிடாகை - வயல். இதுவாயிற்று ஊரும் பிடாகையுமிருக்கும்படி. பெ.தி. 3.9.5.

பிடாம் - போர்வை. படாம் என்பதன் திரிபு. பிடாத்தை விழவிட்டு வடிவழகைக் காட்டினான்; திருத்திரை எடுத்தாப் போலே கூப்பிட்டேன், அது கவியாயிற்று. 7.9.1-24.

பிடார் - வன்மை, உயர்வு. கங்கையை ஜடைமேலே அடக்கினேன் என்னும் பிடாரைக் கொண்டு ஸர்வேச்வரனைக் காணலாமோ? தி.மா. 44.

பிணந்தின்னி - பேய். பிணந்தின்னியையும் அகப்பட ஆழங்கால் படுத்தும் பருவம் இவளை விடுமோ? தி.நெ.தா. 16.

பிணையல் - முடிச்சு. பல பிணையலை உடைத்தாயிருக்கை. க.நு.சி. 1, நம்பிள்ளை.

பிரட்டு - மாறான செய்தி. இந்த ஸந்யாஸி பிரட்டுப் பாடத் தொடங்கினார். 6.2.2-36.

பிராட்டி - 1. தேவி. பிராட்டியோடே கூடவந்து ஒரு பிராட்டி தசையை ப்ராப்தராய். பெ.தி. 3.6.0. 2. சீதை. இராவணன் பிராட்டி பக்கல். 3.6.0-36.

பிள்ளு - பிள்ளைத்தன்மை. தன் பிள்ளுழியாமே எதிரிகளை முடிக்கும்படி. தி.வி. 14.

பிள்ளைப்பணிகள் - 1. குழந்தைக்குரிய விளையாட்டுப் பொருள்கள். தேவதாவர்க்கம் க்ருஷ்ணன் திருவவதரித்தபோதே தொடங்கித் தொட்டில்கள் தொடக்கமான பிள்ளைப் பணிகள் வரவிட்டு. பாவை, 20-6. 2. குழந்தைக்குரிய அணிகலன்கள். பிள்ளை தலைகாயாமல் தப்புகைக்கு எண்ணெய் பெறலாம், பிள்ளைப்பணிகளானவை பெற்றுப் பூட்டலாம் என்றாய்த்து - பிறர் பேரிடுகையில் இழிகிறது. பெரி.தி. 4.6.3.

பிற்காலித்தல் - பின்வாங்கிச் செல்லல். நரஸிம்ஹமும் பிற்காலிக்க வேண்டும்படியிருக்கை. பெ.மடல், கண்ணி, 101.

பிற்கூழை - பின்வரிசை. அவன் தான் முற்கொழுந்திலே வாராதே பிற்கூழையிலே நிற்குமாய்த்து, நடுவுபடும் அலமாப்புக் காண்கைக்காக. 9.9.0-36.

பிற்பாடர் - பின்வந்தவர். பிற்பாடர்க்கு உதவும்படி. 5.9.3-36.

பிற்பாடு - தாமதம். பிற்பாட்டுக்கு நொந்து ஆனைக்கு உதவ வந்து. 1.5.0-36.

பிறகுவாளி - பின்புறம் சாத்தும் ஆபரணம். பெருமாள் புக்கு அருளினால் பின்னும் முன்னும் நின்று வைத்த அனைத்தையும் பின்பு பிறகுவாளியையும் கண்டேத்துகையிலே துணிந்தேன். இ.தி.65.

பிற்பாடை - பின்னால் வந்தவள். பிற்பாடையாம்படி. 5.3.7-36.

பிறங்குதல் - மாறுபட்டு நிற்றல். எம்பெருமான் ஸந்நிஹிதனாய் இருக்கச் செய்தே பிறங்கி ஆழ்வார் தாம்பட்ட துக்கம் படவேண்டா என்கிறார். 6.2.11-9.

பிறவிப்பாடு - பிறப்பு. பிறவிப்பாடும் பின்தொடருமிறே. 10.3.4-36.

பின்புத்தை - 1. பின்பு. தனக்கேயாக என்ற பின்புத்தை எனக்கே யிறே. 2.9.4-36. 2. பின்பக்கம். பின்புத்தைக்கு எட்டம் போராமையாலே. 4.1.5-24.

பின்னாட்டுகை* - பின்னும் தொடர்கை. தாம் அநுபவித்த திருப் பவளத்தின் வைலக்ஷண்யம் பின்னாட்டுகையாலே அந்தத் திருவதரத்தை உடைத்தான திருமுகத்தைப் பிரித்துச் சொல் கிறார். அம.8, அழகு.

பீங்கான் - மட்பாண்டம். மஹாப்ருதிவி ஒரு பீங்கானுக்கு உட்பட்ட சந்தந பங்கம் பட்டது படா நின்றது. 7.2.1-36.

பீட்கன்று - அன்று ஈனப்பட்ட கன்று. பீட் கன்றுபோலே படுக்கையோடே கொடு போந்தபடி. பெ.மடல், கண்ணி,63.

பீறல் - கிழிதல். இட்ட சட்டை பீறும்படியாய் இருக்கை. 6.6.4-24

புகர்* - ஒளி. பஞ்சசக்தி மயமான புகரைச் சொல்லுகிறது. 1.1.1-36.

புகர்த்த - ஒளிபெற்ற. அவனும் அவளுமாய்க் கலந்து புகர்த்த வடிவு எங்கே பெற்றிகோள். தி.வி.32. பொன்போலே புகர்த்துக் கறுத்து மேகம் போலேயிருக்கிற திருமேனியுடைய க்ருஷ்ணனே. தி.ச.வி.103.

புகடு - போடு. என் கையிலே புகட்டுவை. 9.1.2-24.

புகலறுதி - புகலின்மை (அநந்யகதி). திறந்த வாசல் எல்லாம் நுழைந்தாலும் நம்மைக் கொள்வார் இல்லாத புகலறுதியை உடையோம். தி.மா.28.

புகுகிறார் - போகிறார். இரங்காதவரோ கேட்டு இரங்கப் புகுகிறார் என்னுமத்தாலே. 1.4.4-36.

புகுருதல் - புகுதல். புகுரப் பார்த்தார் உண்டாகில். 5.2.5-36. வெளிநிலத்திலும் சிலர் புகுராதபடி பண்ண வல்லனாயிற்று. பெ.தி.1.2.2.

புகுதி - புகுவது. அவளுக்கு வழிப்போக்கோடு, ஊரில் புகுதி யோடு, அவன் தன்னைக் காணுமத்தோடு வாசியற எல்லாம் உத்தேச்யமாய் இருக்குமிறே. 6.7.6-36.

புடரி - பிடர் என்பதன் கொச்சை. நரகவாஸம் கர்ப்பவாஸம் முதலானவை புடரியைப் பிடித்துக்கொண்டு நிற்க, கேவலம் தேஹபோஷணபரராய் இருக்குமவர்கள். தி.மா.14.

புடவை - ஆடை. நல்ல புடவைகளையும். பெ.தி.10.8.1.

புடை - 1. தன்மை, வகை. இப்புடைகளிலே பலவற்றையும் சொல்லி. பெரி.தி.2.9.0. குவளை மேகம் என்றாப் போலே. இன்னும் இப்புடைகளிலே சொல்லப்படுகிற வடிவை. பெ.தி. 4.7.1. 2. கூன், புடைப்பு. புடையுடைமையாலே கூனியாய் 4.5.9-12.

புடைவை* - ஆடை. புடைவையை முடிந்து எறட்டுக் கூத்தாடினான். 10.9.4-36.

புண்ணறை - புண்பட்ட இடங்கள். புண்ணறைகளைக் காட்டும் இத்தனை. பெ.தி.9.5.8.

புண்பாடு - வருத்தம். ஸ்ரீபரதாழ்வான் ராஜ்யத்துக்கு நிமித்த பூதனானேன் என்றத்தாலே ஒரு புண்பாடும். 5.8.0-36.

புணர்ப்பு - பாட்டு; வேத கோஷத்தைக் கேட்டவாறே, நாயகன் பேர் வைத்துப் புணர்த்த புணர்ப்புக் கேட்டாப்போலே காணும் அஸஹ்யமாய் இருக்கிறபடி. 5.9.3-36.

புத்தகம் - புதிய வீடு. புத்தகங்களை அகவாய் பெருச்சாளி அறுத்துக் கிடக்கத் தெருவுபாட்டை நூலும் துரும்பும் வைத்து அலங்கரிக்குமா போலே. தி.மா.6.

புதிசு - புதிது என்பதன் கொச்சை. புதிசாய் இருக்கிற மதிளையுடைய. பெ.தி.2.8.10.

புதுக்கணித்தல்* - அழகுபெறல். இவரைப் பெற்ற பின்பு புதுக்கணித்த தென்னுதல். 1.5.10-36.

புதுக்கணிப்பு - புத்தழகு. அத்தாலே வடிவில் பிறந்த புதுக் கணிப்பு. தி.கு.தா.9.

புதுக்கோமுற்றவன் - புதிய அரசன். வேறேயொரு படைவிடும் ஒரு புதுக்கோமுற்றவனும் இடவேணும். பெ.தி.1.6.6.

புதுத்தண்டன் - புதிய வணக்கம். புதுத்தண்டன் கண்டு இறுமாந்து விளைவது அறியாதே வரம் கொடுத்தபடி. மு.தி.45.

புரணி - சாரமற்றது. சோலையின் போக்யதை புரணி என்னும்படி யாய்த்து ஊரில் போக்யதை இருப்பது. தி.மா.17.

புரவர் - தலையாரி. ஈச்வரனுக்குப் புரவர் போலே இவ் ஆத்மாக்கள் செய்யும் கர்வங்களை ஆராய்க் கடவரான சந்த்ராதித்யர்கள். மு.தி.75.

புரித்தல் - திருப்புதல். அதின்வாயிலே கையையிட்டுப் புரித்தான். பெ.தி.2.10.7.

புரிந்துபார்த்தல் - விரும்பிப் பார்த்தல். கூடப் போருமித்தனை என்று பின்தொடர, புரிந்துபார்த்து, 'ஆய்ச்சி, நீர் என்னைப் பின்தொடருகிற இடம் தர்மஹாநி கிடீர்' என்று முகத்தைப் பார்த்து ஒரு வார்த்தை அருளிச்செய்ய. 9.3.0-36.

புரிப்பு - கோணமான வளைப்பு. புரிப்புடைத்தான மதிள் என்னுதல். பெ.தி. 2.7.6.

புரை - 1. வேற்றுமை. அவதாரந்தன்னில் புரையில்லை. 1.3.0-36. பரார்த்தமாகத் தாழ நின்றோம் என்று தன் பக்கலிலும் புரையின்றிக்கே இருக்கை. 1.3.2-24,36. 2. இடம். இருட்டுப் புரைகளிலும். 4.1.1-36.

புரைதல் - முளைத்தல். முலை புரைகிற இத்தனை. பெ.தி.8.2.9.

புரையறுகை - வேற்றுமையின்றி இருத்தல். அதாவது ஒத்திருத்தல். ஸஜாதீய பாவத்தில் புரையறுகையும். தி.ச.வி.82.

புரையறுதி - வேற்றுமையின்மை; அதாவது ஒத்திருத்தல். முன்பு நின்ற நிலையில் புரையறுதி தோற்றுகைக்காகவிறே. பெரி.தி 4.1.2.

புறணி - புறக்கணிக்கத்தக்க சிறுமையுடையது. தம்முடைய அர்த்தித்வாதிகள் புறணியாய் இருக்கிறபடியை. 8.7.0-9.

புறத்தொழில் - வெளித்தொழில். புறத்தொழிலைக் கொள்ளுவோம். 1.6.5-24.

புறமடக்கி - பானையைத் தட்டும் கட்டை. இவர்கள் இருவரும் இரண்டு கார்யத்துக்குக் கடவராய் அதிகாரிகளாயிறே இருப்பது, குசவனையும் புறமடக்கியையும் போலே. திருவா.7.

புறவாய் - வெளிப்பகுதி. அகவாயும் இருண்டு புறவாயும் இருண்டு இருக்க. 6.7.7-36.

புறவீடு - மற்றொருவர் இடம்; பரஸ்த்தாநம். பெருமாள் திருவுள்ளமாய், ஆழ்வார் திருவரங்கப் பெருமாளரையர் திருமாளிகையிலே புறவீடுவிட்டிருக்கிற அளவிலே. பெரி.தி. 4.4.7.

பூசல் - சண்டை; போர். போன இடமெங்கும் பூசல் விளைக்கு மவனிறே. 10.3.7-36.

பூசல்களரி - போர்க்களம். பூசல்களரியில் தேர்த்தட்டில் வார்த்தை போலேயும். பாவை, 23-6.

பூசல்தலை - போர்க்களம். பெருமாள், ராவணன் பூசல்தலையில் நிராயுதனாய் நின்றபடியைக் கண்டு கொல்லாதே, 'இன்றுபோய் நாளை வா' என்றாரிறே. பெரி.தி.4.5.8.

பூண்கட்டுகை - வலிவூட்டுகை. ஸம்ஸாரத்தைப் பூண்கட்டுகையிறே. 10.8.2-36.

பூண்டு - செடி. ஸ்ரீப்ருந்தாவநத்தில் எழும் பூண்டுகளும். 10.3.9-24.

பூணித்தல் - உறுதிமொழி பூணுதல். எனக்குத் தருவானாக என்னோடே பூணித்து. 10.8.5-24.

பூரித்தல் - நிறைத்தல். திருமஞ்சநத்தைக் கடாரத்திலே பூரித்து வைத்தேன். பெரி.தி.2.3.3.

பெண்டாட்டி* - பெண். கூனி சாந்துகொண்டுபோகாநிற்க, 'ஏடீ, சாந்து கொண்டுவா' என்ன, பெண்டாட்டியாகையாலே மறுக்க மாட்டாதே...தண்ணிய சாந்தைக் கொடுக்க. தி.வி. 21.

பெண்பிள்ளை - பெண். கூந்தலையுடைய பெண்பிள்ளை. 6.6.3-9.

பெண்பெண்டுகள் - சிறுமியும் மணமான பெண்டுகளுமாகியவர்கள். பெண்-சிறுமி; பெண்டு-மனைவி. பெண்பெண்டுகளும் நோக்கலாம்படி ஆயிற்று ஊர் அரண். பெ.தி.1.2.2.

பெரியகிழாயர் - பெரியவர். அபரிச்சேத்யம் என்று அறியில் அறியலாம், பெரியகிழாயர். மு.தி.56.

பெரிய திருநாள் - திருவரங்கத்தில் நடைபெறும் சிறப்பான திருவிழா. இரண்டருகு உள்ளாரும் மலைக்கப் பெரிய திருநாளில் போலே உலாவித் திரியலாயிருக்க. பெ.மடல், கண்ணி, 18.

பெரிய திருவடி - கருடன். பெரிய திருவடி தோளில் இருப்பை மாறி என் தோளிலே இரா நின்றான். 1.9.6-24.

பெரிய பிராட்டியார் - திருமகள். பெரிய பிராட்டியார் பக்கல் போலே என்பக்கல் அத்யந்தாபிநிவிஷ்டனாய். 10.10.6-36.

பெரிய பெருமாள் - திருவரங்கப் பெருமான். பெரிய பெருமாள் திருவடிகளில் இவர் புகும்போதும். 4.6.10-36.

பெரிய முதலியார் - பெரிய தலைவர். பெரிய முதலியார் வார்த்தை. 6.2.2-36.

பெருங்குடியாட்டம் - கிராமண்யம்; ஊராட்சி. நடுவில் பெருங்குடியாட்டமும் என்னென்பதுதான்? 3.5.6-36.

பெருந்திருப்பாவாடை - வேதம். பெருந்திருப்பாவாடையிலே மண்டுகிறார். பெரி.தி.5.1.6.

பெருநிலைநிற்றல் - சான்றாக நிற்றல்; உதவியாக இருத்தல். பெருநிலை நிற்பதறியப் பெற்றிலோம். 6.2.8-36; அதுக்குப் பெருநிலை நின்ற. 6.2.5-24.

பெருநேர்த்தி - பெருமுயற்சி. இழிந்த துறையில் பெருநேர்த்தி பட்டாலும் ஒரு பயனில்லை. 4.6.4-24.

பெரும்பாரிப்பு - பெரும் விழைவு. பெரும்பாரிப்பை உடையையாய். 6.10.1-9.

பெருமாள் - இராமன். பெருமாள் காடேறப் போனார். பெரி.தி. 3.9.5.

பெருமிடுக்கன் - மிகுந்த வலிவுடையவன். பெருமிடுக்கனான ராவணனை. 2.3.11-24.

பெருவிடாய் - மிக்க விழைவு. பெருவிடாயையுடைய ஆழ்வார் சொல். 3.8.11-24.

பெருவிரகன் - மிகுந்த திறமையுடையவன். பெருவிரகனான ஸர்வேச்வரன். 4.8.6-36.

பெறாப் பேறு - அரிய பாக்கியம். இது என்ன பெறாப் பேறு. 1.9.6-36.

பெருவிலையன் - மிகுந்த மதிப்புடையது. குளிர்ந்து பெருவிலையனான ரத்நம் போலே. 1.10.1-24.

பேகணித்தல் - கலங்குதல். தாமரைப்பூப் போலே இருக்கிற கண்கள் அச்சத்தினாலே நீர்மல்கும்படி 'அடிபடுகிறது' என்று பேகணித்து நின்ற நிலையும். 5.10.3-9.

பேச்சாட்டுத்துணை - பேச்சுத்துணை. பேச்சாட்டுத் துணையாகச் செல்ல. 7.5.7-9.

பேய்த்தேர் - கானல்நீர். பேய்த்தேரையும் வெயிலையும். 4.1.2-36.

பேரணி - பெரிய படை. முன்பு தூசியேறின பேர்க்கு உரமாக நின்ற பேரணி உறுபூசலானவாறே திரள அமுக்குமாபோலே. 9.9.2-36.

பேரளவு* - பேரறிவு. பேரளவுடையரான சக்ரவர்த்தி திருமகனும் 1.4.0-24.

பேரவிருத்தல் - பிரிந்திருத்தல். அபிமத விஷயங்களோடு கலந்த போது அவற்றை நினைத்து, பேரவிருந்த போது அவற்றை மறந்திருப்பர்கள். 5.3.3-36.

பேரோலக்கம் - பெரிய அவை. திருநாவாயிலே பேரோலக்கமாக இருக்க. 9.8.3-36.

பேறு* - லாபம். பேறு இழவு அறியும் நீங்களும் செய்யுமதோ. 3.9.5-36.

பையல்* - பயல். இராவணன் துரியோதனன் போன்றோரை இழிவுதோன்றப் பையல் என்று குறிப்பர். பையல் தானும் ஸ்த்ரீகளுமாய் இருக்கிற இருப்பை. 2.9.10-36.

பையாத்தல் - பயந்தோன்ற நிற்றல். நெய் களவு போயிற்று என்றாள். அவ்வளவிலே பையாக்க விழிக்கத் தொடங்கி னான். 5.10.3-36.

பையாப்பு - அச்சக்குறி. வெண்ணெய் களவு போயிற்று என்ற மாத்ரத்திலே இவன் முகத்தில் பையாப்பைக் கண்டு தாயார் சீறி. மூ.தி.91.

பொகடுகை - போடுதல்; விழுதல். உன் திருவடிகளிலே நான் பொகட்டு. 5.8.10-36. என்னைப் பொகட்டுப் போனான். 9.7.7-36.

பொகடு சரக்கு - கழிக்கப்படும் பொருள். இப்பொகடு சரக்கைக் கொள்வாரில்லையிறே. 8.7.6-24.

பொசிதல் - பாய்தல். அவ் அநுபவ ஜநித ப்ரீதியானது புறம் பொசியாதபடி அடக்கிப் போந்தோம். பாவை, 8-3.

பொடிதல் - கோபித்தல். பொடிய விரகுண்டோ? பாவை, 28-3. பொடிவார் - கோபிப்பார். நிஷேதிப்பாரும் பொடிவாரு மாக. 7.3.0-9.

பொத்தல் - செய்தல்; நிகழ்த்தல். நெய்யாடல் பொத்தப் பெற்றது இல்லை. பாவை, 25-6.

பொய்த்தரவு - பொய்யோலை; கவிபாடினால் தான் தருவது ஒன்று இல்லாமையால், நூறு கற்றையாதல் ஒரு பொய்த் தரவாதல் ஆயிற்று எழுதுவது. 3.9.0-36.

பொல்லாங்கு - தீங்கு. தீயுமான இடத்திலே பொல்லாங்குகள் விளையும். 10.3.9-36.

பொல்லாநிலம் - சுடுகாடு. உங்களைப் பொல்லா நிலத்திலே இடுவதற்கு முன்னம். தி.பல். 4.

பொளிதல் - சிதைவாகப் போதல். கண்ட இடமெல்லாம் பொளிந்து உபயோகார்ஹம் இன்றிக்கே போகட்டுக் கிடந்தது ஒன்றை எடுக்கும். 4.1.1-24.

பொளிந்த பாண்டம் - சிதைந்த பாண்டம். பொலிந்த பாண்டங் களைக் கொண்டு. 4.1.1-9.

பொற்களரி - பொன்பணி செய்யும் இடம். கரியும் முத்தும் நெருப்பும் பொன்னுமாயப் பொற்களரி போலேயாயிற்று வயலடைய இருப்பது. பெ.தி. 2.10.3.

பொற்கென்று தோற்றல் - பொன்மயமாகத் தோற்றல். மாடங் கள் ஓங்கி உயர்ந்து பொற்கென்று தோற்றிற்று. க.நு.சி. 5, அழகு.

பொறி - பொறிக்கப்பட்ட எழுத்து. உங்கள் தலையோட்டில் பொறி. பெ.தி. 11.5.1.

போக்கடி - 1. போக்கிடம். என் தசையைக் கண்டு இதுக்கு ஒரு போக்கடி பாராதே. 1.4.4-36. 2. கழுவாய். அநர்த்தத் துக்குப் போக்கடி சொல்லாய். 3.2.1-36.

போக்குவீடு - வெளிச்செல்லும் வழி. அவ் அநுபவத்துக்குப் போக்குவீடாக...என்கிறபடியே பாடி விஸ்த்ருதராகை யாகிற ஸம்பத்தைப் பெறவேண்டியிருப்பீர். 1.6.1-24.

போகடுகை - போடுதல். ஆஸுர ப்ரக்ருதிகளின் மேலே போகடும்படியான சுத்தியை உடையவனே. 2.6.1-36.

போச்சுது - போயிற்று என்பதன் கொச்சை. பரிச்சேதிக்கப் போச்சுது இல்லை என்றபடி. சி.மடல், கண்ணி, 11.

போட்கன் - உள்ளீடற்றது. அவன் பக்கலுள்ளது போட்கனாக வுமாம். 1.5.0-36. போட்கனாய் இருக்கிற ஆபர்ண விஷயங்களை. க.நு.சி. 4, நம்பிள்ளை.

போது - பொழுது; காலம். அறப் போதோடே புறப்பட்டு வரும்படியன்றோ எங்கள் திவரை இருந்தபடி. பாவை, 29-6.

போது செய்தல் - தோன்றுதல். மிடற்றைச் சொல்லாதே, நரம்பைச் சொல்லிற்று - கர்மத்தாலே போது செய்யாதது ஆகையாலே. 2.3.7-24.

போதுபோக்கு - காலக்கழிவு (காலக்ஷேபம்). போதுபோக்கு கைக்கு. பெ.தி. 4.7.2.

போய்த்து - போயிற்று என்பதன் கொச்சை. என் பிராண னோடே போய்த்திறே. 9.5.8-36.

போர - 1. வர. ஓர் இருப்பைக் குலைந்து போரக் கடவையான பின்பு. 10.3.10-24. நீயும் என்வழியே போரப் பார். 10.6.1-24. 2. மிகவும். நீர் நம்மைப் போர இன்னாதாகா நின்றீர். 4.7.7-36. 3. ஆக. திருவுகிருக்கு இரைபோர வளர்ந்த மார்வு. பெ.மடல், கண்ணி, 102.

போராதிருக்கை* - போதாதிருக்கை. எட்டம் போராதிருக்கை. க.நு.சி.1, பெரி.

போராது* - 1. போதாது என்பதன் கொச்சை. எட்டுத்திக்கும் சூழ இடம் போராது. மூ.தி. 90. 2. பொருந்தாது. ஆத்ம குணங்களுக்குப் போராது. பெ.தி. 11.2.9. 3. நீங்கமாட் டாது நெஞ்சத்துப்போராது நிற்கும் பெருமாளை. 3.8.7-36.

போராய் - வாராய். இங்ஙனே போராய். 2.8.1-36.

போரு - வா. ஸ்ரீபாதத்திலே ஆச்ரயிக்கப் போரு. 2.3.2-36.

போரும்* - 1. போதும் என்பதன் கொச்சை. உஜ்ஜீவநத்துக்குப் போரும் மின்னும்படி இருக்கிற பத்துப்பாட்டையும். பெரி.தி. 3.8.10. 2. ஆகும். அத்தசையில் சாபலத்தோபாதி போரும் இப்போதை விரக்தியும். 9.9.3-24.

போருவார் - செல்வோர். ஆத்ம ஸமர்ப்பணம் பண்ணி என்றும் இதுவே யாத்ரையாய்ப் போருவார் பெறும் பேற்றைப் பெற்றேன் என்கிறார். பெ.தி. 1.1.9.

போழ்க்கன் - உள்ளீடற்றது. இவ்வார்த்தை போழ்க்கனாய் இருக்கையன்றிக்கே. ப்ராப்தி ஸமயத்திலும்...போக ஸாம் யத்தையும்...தேஹ ஸாம்யத்தையும் கொடுத்திறே வைப் பது. பெ.தி. 5.8.1.

பையாக்க - அச்சம் தோன்ற நெய்களவு போயிற்று என்றாள். அவ்வளவிலே பையாக்க விழிக்கத் தொடங்கினான். 5.10.3-36.

மச்சம் - அடையாளம்; தட்டார் வெட்டி வைக்கும் பொன். நாட்டுக்கு மச்சமாகப் பெண்பிள்ளை பெற்ற பாக்யவான். பெ.மடல், கண்ணி, 65. தேவதாந்தரபஜநம் பண்ணு வார்க்கு பலமிது என்னுமிடத்துக்கு மச்சமாகவும். தி.பல்.7.

மட்டம் - குறைவு. தன் நிலத்தில் நின்றபோது மணம் மட்டமாய், திருக்குழலிலே ஏறினவாறே இரட்டிற்றாயிற்று இருப்பது. பெ.தி. 8.4.9.

மட்டு - மட்டம்; அளவு. தான் அரைமட்டு நீரிலே இழிந்து பின்னே கையைக் கட்டிக் குனிந்து நின்று தண்ணீர் பருகக் காட்டும் ஆய்த்து. நா.தி. 14.1.

மடக்கோலை - திருமுகம். பாண்டவர்கள் தூதுவிடுகிறபோது கட்டிவிட்ட மடக்கோலை இன்றும் நம் பக்கலிலே அன்றோ கிடக்கிறது. அம. 6, அழகு.

மடிச்சரக்கு - புடவை. கைக்கடங்கினத்தையும் (வளையல்) கொண்டு மடிச்சரக்கையும் கொண்டு போனான். 9.7.7-36.

மடிதடவுதல் - திருடுதல். உடனே கிடந்தவனை மடிதடவினான். 7.9.1-36.

மண்டுதல் - ஈடுபடுதல். இதர விஷயத்திலே மண்டின என் மநஸ்ஸிலே. பெரி.தி. 5.4.8.

மண்ணீடு - மண்ணுக்குச் சமம். இதடைய மண்ணீடாய்க் கழிந்தது ஆயிற்று. பெ.தி. 2.7.6.

மண்பாடு - மண்ணின் தொடர்பு. மண்பாட்டாலே ராமபக்தி உண்டாமா போலே. 4.9.11-24.

மணவாட்டுப் பிள்ளை - மணப்பெண். மணவாட்டுப்பிள்ளை யாக நினைத்துத் தான் செய்யக் கடவ சீர்மைகள் செய் யுமோ. பெரி.தி. 3.8.5.

மணாட்டி - மணவாட்டி. யமன் தலையிலும் அவன் மணாட்டி தலையிலும் அடியிட்டு ஸஞ்சரியா நின்றோம். தி.மா. 1.

மதிப்பன் - 1. மதிப்பு. பெரிய மதிப்பனைக் கண்டு வைத்து. 6.8.4-24. 2. பெருமையுடையவன். எதிரிகள் கூசிப் போம்படி மதிப்பனாய் இருப்பான் ஒருவனைப் பற்ற வேணுமிறே. 10.1.10-36.

மதிப்பர் - பெருமையுடையவர். ஸ்வர்க்கத்திலே மதிப்பராக. 7.4.5-24.

மதில் - கோட்டைச்சுவர். மதிலையும் தூகளாகச் செற்று. 6.1.10-24.

மதிள் - கோட்டைச்சுவர். மதிளையுடைத்தாய். 4.10.4-24.

மயிர்க்கத்தி - முடியை மழிக்கும் கூரிய கத்தி. அகவாய் மயிர்க் கத்தியாய் இருக்கச் செய்தேயும். 9.1.5-36

மயிர்ப்பாடு - முடிபெற்றிருத்தல். பாவநத்வத்துக்கும் மயிர்ப்பாடு உண்டாய்த்தே. தி.மா.23.

மருபூமி - நீரும் நிழலும் அற்ற நிலம். மருபூமியான ஸம்ஸாரத் திலே. 5.5.11-24,36.

மருவுதல் - சேர்தல். வலம்செய்து மருவுங்கள். 2.10.7-6.

மலக்குதல் - அழித்தல். இவளுடைய அவயவங்கள் அவனையுங் கூட மலக்கவல்ல போலே காணும். தி.வி.67.

மலக்குண்கை - கடையப்படுகை. கண்ணன் கையால் மலக்குண்கை யாலேயிறே சுரந்தது. பாவை, 30-6.

மலடுநிற்றல் - பிள்ளையின்றி இருத்தல். சக்ரவர்த்தி நெடுநாள் மலடுநின்று பிள்ளை பெற்றவனாகையாலே...பெ.தி.1.2.6.

மறம் - கோபம். பெண்கள் நெஞ்சில் மறம் மாறும்படி. 6.4.2-24.

மறித்தல் - புறம்பு செல்லாது தடுத்து நிறுத்தல். அறியாதார் பசுக்களை மறிக்க ஊதினான் என்று இருப்பார்கள். 6.2.2-36.

மறு - அடையாளம். பிறையில் மறுவோபாதி ஆய்த்துத் திருவெயிற்றில் கிடந்த பூமி. 10.10.7-24.

மறுகுதல் - அஞ்சுதல். ராஜ லோகம் அடைய இவனுடைய பக்ஷபாதம் இருந்தபடியால் நாம் இவனை வெல்லுகை என்று ஒன்று உண்டோ? என்று குடல் மறுகிற்று ஆய்த்து. 10.6.4-36.

மறுதலைத்தல் - மாறுபடுதல். இவர்களை நலிய வேணும் என்று திருவடியோடே மறுதலைத்து. க.நு.சி.4, அழகு.

மறுநனைதல் - நன்கு நனைதல். கமர் பிளந்த இடமெங்கும் மறுநனையும்படி. 9.4 7-24.

மறுபாடு - மறுபக்கம். தோற்புரையன்றியே மறுபாடுருவ வேர்ப் பற்றிலே நோவுபட்டாயாகாதே. 2.1.1-36.

மறுமாற்றம் - பதில். ஒரு மறுமாற்றம் கேட்டுச் சொல்ல வேணும். 1.4.5-24.

மறுவலிடுகை - மீண்டும் உண்டாதல். ஸம்ஸாரத்தை மறுவலிடாத படி நிச்சேஷமாக்கி. 7.5.10-9. மீள்கின்றதில்லை - இனி மறு வலிடுகிறது இல்லை. 10.4.3-24.

மன்னி - கன்னி. பிற்றை நாள் மன்னியைக் கொண்டுவந்து நீர்வார்த்தார்கள். 5.5.7-36.

மனிச்சர் - மனிதர். மனிச்சர் நோவறிந்து கார்யஞ் செய்யும் இடத்தில். பாவை, 18-6.

மனிச்சன் - மனிதன். அறப்பெரிய மனிச்சன் கிழர் நான். அம.8, அழகு.

மனிச்சி - 1. மனிதப் பெண். பூதனை மனிச்சியாய் வஞ்சித் தாளன்றே. பெ.திருவந்.14.2. மனிதத்தன்மை அவதரித்து மனிச்சு ஏறிட்டுக் கொண்டு. 4.5.7-24.

மனிசர் - மனிதர். மனிசரையும் பொய் என்றிறே காலனையும் உடனே படைத்தது. பெரி.தி.5.4.4.

மனைதல் - படைத்தல். வனைதல் என்பதன் சிதைவு. உன்னாலே மனையப்பட்ட ப்ரஹ்மா. 3.1.10-36.

மனையடைவு - படைப்பினை எண்ணும் முறைமை. சேஷசேஷிபாவ ஸம்பந்தம் ஒண்டொடியாள் திருமகளும் நீயும் என்கிறபடியே அடைவுபட்டிறே அங்கிருப்பது; இங்கு மனையடைவே 'யானே என்றனதே' என்று அடைவு கெட்டிருக்கும். பெரி.தி.4.4.8.

மாணிக்கப்படி - இரத்தினம் பதிக்கப்பெற்ற மேலாடை. மாணிக்கப்படி சாத்தி. 4.4.3-24,36.

மாந்துதல் - தளர்தல். அது பொறாமல் மாந்தும்படியான ஸ்த்ரீத்வத்தை உடையவள் என்கை. பெரி.தி.3.7.6.

மாம்பழவுண்ணி - மாம்பழத்தோடு தொடர்பில்லாத ஒரு புழு. மாம்பழவுண்ணிபோலே பேரைச் சுமந்து காணவேணும் என்று கூப்பிடா நின்றேன். 1.5.7-24.

மார்வு - மார்பு என்பதன் சிதைவு. ஹிரண்யனுடைய மார்வைப் பிளந்த. 10.6.4-9 மார்பு என்பதும் அருகிக் காணப்படு கிறது, திருமார்பில் முல்லை மாலையாலே. 10.3.5-9.

மாலை - வரிசை. அவன் வடிவுக்குப் போலியான மேகமாலையைக் கண்டு. 9.5.7-36.

மாளிகைச் சாந்து - உயர்ந்த சாந்து. மாளிகைச் சாந்தை மறைக்கப் போமோ. பாவை, 10-6.

மாற்று - மாற்று மருந்து. தீரா மாற்றாலே நெஞ்சைப் புண்படுத்து வைக்கும். 9.5.8-36.

மாறாட்டி - சக்களத்தி. உன் மாறாட்டி மகன் அபிஷேகம் செய்யத் தேடுகிறான். பெரி.தி.4.8.4.

மானாவிச் சோலை - வானம் பார்த்த சோலை. தானே வளர்வதும் அழிவதுமாய் உள்ள சோலை. வானம்பார்த்த நிலத்தை மானாவாரி நிலம் என்பது போலும் வழக்கு இது. மானாவிச்சோலை போலே ஆவது அழிவதான இது போனால் என் செய்யவேணும் என்று இருக்கிறாயாகில், அவ் விபூதியும் அழியுங்கிடாய். 6.9.1-36.

மிகை - எல்லை மீறிய செயல்; அதாவது கொடுமை. பிரித்த மிகையை உடையவன். 4.8.5-24.

மிகைத்தல் - செருக்கடைதல். இலக்குப் பெற்றால் மிகைக்கும் அத்தனையிறே. 6.1.11-36.

மிடற்றோசை - குரல். உன்கம்பீரமான மிடற்றோசை. பாவை, 19-6.

மிடறு - கழுத்து. மிடற்றுக்குக் கீழ் இழியப் பெற்றோமோ? மு.தி.24.

மிடறு தின்னல் - தொண்டை அரித்தல். மிடறுதின்றால் சொறிய ஒண்ணாதாப்போலே. பெ.தி.1.1.5.

மிடா - அண்டா. காச்சுகைக்காக மிடாக்களோடும். பெரி.தி. 2.9.5.

மிடி - 1. வருத்தம். தன் நிலத்திலே மிடியற வளருகை. பெரி.தி. 3.3.9. 2. வறுமை. உங்கள் மிடி தீர்க்கவல்லர் என்றோ அத்ருஷ்டத்துக்குத்தான் உறுப்பாவர் என்றோ ஏதுக்காகப் பிறர் பேரிட்டீர். பெரி.தி.4.6.3.

மிடுக்கர் - ஆற்றல் வாய்ந்தவர். மிடுக்கரான ராஜாக்களை 6.2.10-36.

மிடுக்கன் - ஆற்றல் வாய்ந்தவன். தரித்துக்கொண்டு நின்ற மிடுக்கனை. பெரி.தி.1.1.8.

மிடுக்கு - ஆற்றல். தோள்மிடுக்கு அறுத்த. 2.4.2-12.

மிதி - மிதித்தல். இவனுக்கு இவ் ஔதார்யம் உண்டாயிற்றது திருமலையின் மிதியாலே. 2.7.11-9.

மிதியடி - காலணி. மிதியடியாம்படி ஸ்ரீசடகோபனாக்கி 5.8.9-24.

மிறுக்கு - தொல்லை; இடர்ப்பாடு. இப்படி மிறுக்குக்கள் எல்லாம் பட்டது. 6.2.0-36. என்னால் பாசுரமிட்டுச் சொல்லப்புகில் மிகவும் மிறுக்குடைத்து. 2.5.10-24.

மிறுங்கியோடுதல் - இசையாமல் திமிரிக்கொண்டு ஓடுதல். அவனுக்குத் திருக்குழல் வாருவதாக உத்யோகித்து அவன் மிறுங்கியோடாமல் இசைந்து நிற்கைக்காக. பெரி.தி.2.5.0.

மினுக்கம்* - ஒளி, மேன்மை, சிறப்பு. கிடையழகால் வந்த மினுக்கம் தோற்றும் படியாக. பெரி.தி.4.9.5. க்ருஷ்ணனுடைய மினுக்கம் பொறாதவர்கள். பாவை, 11-6.

மினுங்குதல் - ஒளிர்தல். மாற்று மினுங்கின. க.நு.சி.5, அழகு.

முக்குதல் - தின்னுதல். மண்ணை முக்கவோ. 2.7.10-36.

முக்குணுக்கிடல் - பணிவு தோன்ற வளைந்து நிற்றல். இளைய பெருமாள் தலைமேல் வைத்த கையும், முக்குணுக்கிட்ட உடம்புமாய் பெருமாள் கண்படும்படி நின்றாரிறே. பெ.தி. 8.2.5.

முகப்பு - 1. முதன்மை. இவள் முகப்பாகத் தன்னுடைய க்ருஹ க்ருத்யமெல்லாம் நடத்தியென்கை. பெரி.தி.3.8.7. 2. முதலில், அஃதாவது தொடக்கத்தில். முகப்பிலே ஒன்றாய் முடிவிலே ஒன்றான செயல்கள் செய்கிறதில்லை. 9.6.3-24.

முகம் - காரணம். இவர்கள்தான் வழி தப்பிப்போய் அநர்த்தப் படுகிற முகம் ஏதோ. 3.6.0-36.

முகமலர்த்தி - முகமலர்ச்சி. அதாவது மகிழ்ச்சி. ஆழ்வாருடைய முக மலர்த்திக்காகவும். க.நு.சி 1, பெரி.

முகவணைக்கல் - முகப்புக்கல். முகவணைக்கல் ஏற்றுவாரைப் போலே. சி. மடல், கண்ணி, 31.

முசல் - முயல். முசல் வேட்டைக்கு. 9.5.0-9.

முசிக்கை - 1. கசங்குகை. உடுத்து முசித்து பாவை, 27-6. 2. துன்பப்படுகை. கொடுத்துக் கொள்ளுதல், கொடுக்க முசித்தல் செய்கையாகிற குற்றம் இல்லாத கொடையை உடையவன். பெரி.தி. 1.3.5. 3. அஞ்சுதல். வெளியிலே வேளாளராய்த் திரியில் தலையிலே முடியை வைப்பார்கள் என்று ராஜ்யம் பண்ணுகைக்கு முசித்து அந்தரங்கமான ஓலக்கத்திலே ஸேவிக்கிறபடி. பாவை, 22-6. 4. தளர்தல். மூவாது ஒழிகையாவது முசியாது ஒழிகை. 2.8.5-24. 5. படிகை. திருவரையிலே முசிக்கையாலும். தி.பல்.9. 6. வாடுதல். வெறி கமழும்காம்பேய் மென் தோளி-பிள்ளை முசியாமைக் கென்னுதல். மு.தி. 22.

முசிப்பு - வெறுப்பு. அத்யந்த விஸத்ருசங்களை ஒக்குமோ என்று சொல்ல வேண்டின முசிப்பாலே அந்தோ என்கிறார். 6.9.10-9.

முசிவு - 1. குலைவு. திருவரையிற் சாத்தின பரிவட்டத்துக்கு மேலே முசிவற விரித்து. பெரி. தி.3.4.2.2. கசங்குதல். செருக்கராய் இருக்கும் ராஜபுத்ரர்கள் முசிந்த படுக்கையைக் காற்கடைகொண்டு செவ்விப் படுக்கையிலே சென்று ஏறுமா போலே. பெ.தி 3.6.1.

முசுகுவால் - கோலங்கூலம்; வாலுள்ள குரங்கு. முசுகுவால் எடுத்தாற் போலே. 3.1.7-36.

முசுமுசுப்பு - அக்கறை. அவள் சீராட்டி வளர்த்த முசுமுசுப்பு எல்லாம் திருநிறத்திலே தோன்றும்படி இருக்கும் ஆயிற்று. பெ.தி.1.2.12.

முட்ட - 1. முற்றிலும். முட்ட உணர்ந்தவர் பேரழகை உடையவனுடைய குணங்களை அன்றிக்கே கற்பரோ? 7.5.8-9. 2. வரை. தன்னைக் காண வேண்டியிருப்பார்க்குத் திருநாடு முட்டப் போக வேண்டாதபடி அணித்தாகத் திருமலையிலே வந்து நின்றருளினபடியை. 9.3.8-9.

முட்டாக்கிடல்* - மூடிக்கொள்ளல். திருமலையை முட்டாக்கிடப் பூத்துக் கிடக்கும் அத்தனை. 2.10.10-24.

முட்டு - தடை. சிலநாள் சென்றவாறே. முட்டுப்படக் கடவது அன்றிக்கே. 3.10.3-36.

முட்டுக்கோட்டை - வழிதெரியாக் கோட்டை. இம்முட்டுக் கோட்டையிலே அகப்பட்டேன் என்று இருக்கிற என்னை. 4.9.8-24.

முடுகுதல் - விரைதல். தம்மைத் திருநாட்டுக்குக் கொடுபோக முடுகுகிறமையை அநுஸந்தித்து. 10.5.0-9.

முடை - நாற்றம். திருமேனி எங்கும் வெண்ணெய் முடையாயிறே இருப்பது. பெரி.தி.2.4.1.

முத்தக்காசு - கோரைக் கிழங்கு. ஸ்ரீவராக கல்பத்திலே முத்தக் காசை அமுது செய்விக்கச் சொல்லிற்று. பாவை, 5-6.

முத்திறம் - ஆடு, மாடு, எருமை ஆகிய மூன்று மந்தைகள். ஸ்ரீநந்த கோபருக்கு முத்திறம் உண்டே. பாவை, 8-3.

முத்தூட்டு - முற்றூட்டு என்பதன் சிதைவு. முத்தூட்டு ஆக்கினவனை. பெ.தி.7.3.3.

முதல் - அடி; காரணம். ராவண பவநத்திலே இருந்தவளோடே சேரவர்த்தியாநின்றான் என்று சொன்னதிறே, இரண்டாம் பிரிவுக்கு முதல். 7.5.2-24.

முதன்மை - தலைமை; ஆட்சி. முதன்மை செய்த ஊரிலே புடைவையை ஒதுக்கிக்கொடு திரிவதில் அங்கு நின்றும் சடக்கெனக் கால்வாங்குகை அன்றோ அழகு. பெ.திருவந். 30.

முதலி - 1. நாயகன். திருவாசல் காக்கும் முதலியை எழுப்புகிறார்கள். பாவை, 16-6. 2. நம்பி. வாமனநம்பீ என்பதற்குக் கொடுங்கோளால் நிலங்கொண்ட வாமநனான முதலியானவனே என்று உரை கூறப்பட்டுள்ளது. பெரி.தி.2.3.8.

முதவுதல் - மேலாகத் தங்குதல். பருத்து மேல் முதவாதே அழுந்தும் என்று அஞ்சுகிறார். க.நு.சி.1, நஞ்சீயர்.

முதலிகள்* - முதன்மையானவர்கள்; அதாவது சமயச் சான்றோர்கள். எம்பார் கோஷ்டியிலே இவ் ஆத்மாவுக்கு ப்ரதம குரு ஆர் என்று பிறந்ததாய், இருந்த முதலிகளில் சிலர் 'ஆசார்யனன்றோ' என்றார்கள். 2.3.2-36.

முதலியார் - 1. முதன்மையானவர். முதலியாராய் வர்த்தித்த நம் பாபத்தினார்...சிதைந்த முகமாய்த் திரியும் அத்தனையிறே. பெ.திருவந். 69. 2. மேற்சாதியினருள் ஒரு பிரிவு. அவஸ்துவாய்ப் போந்தான் ஒருவன் ஜீவிக்கப் புக்கவாறே, பிள்ளை, முதலியார் என்பர்கள். 4.9.3-24. 3. தந்தையார். ஸ்ரீநந்தகோபர்க்கு ஆயிற்று அஞ்சுவது. அத்தாலே அவனுக்கு அச்சமுறுத்துகைக்காக யசோதைப் பிராட்டி சொல்லும் பாசுரம் ஆயிற்று. உங்கள் முதலியார் சிறுவர்கிடீர். பெ.தி. 10.4.8.

முரடு - வன்மை. முரட்டு மல்லரோடே பொருகிறபடி கண்டால். பெ.திருவந்.41.

முரலுதல் - இசைத்தல். வண்டுகள் தேனைப் பருகி முரலாநின்ற திருக்குழலை உடையளாகையாலே. திருவெழு. அடி, 31.

முரி - அணை. முரிக்குக் கிழக்கு என்னிலும் இவர் நாவீறுதான் இங்ஙனல்லது இராமையாலே யாதல். பெ.தி.5.8.5.

முருடு* - வன்மை. ஹிரண்யனுடைய முருட்டு நெஞ்சை. 10.6.4-36. ஹிரண்யனுடைய முருட்டுடலை அநாயாஸேந கிழித்தான். 10.6.10-36.

முருடர் - கொடியவர். முருடரான ராவணாதிகளை. 2.7.10-36.

முலைச்சுவடு - தாய்ப்பாற் சுவை. இவன் முலைச்சுவடு. அறியாமையாலே போனபடி. 6.4.5-36.

முலைவரவு - தாய்ப் பாலூட்டல். முலைவரவு தாழ்த்துக் திருவடிகளை நிமிர்த்த மாத்ரத்திலே. 6.4.4-24.

முழஞ்சு - குகை. முழஞ்சிலே ஸிம்ஹங் கிடந்தது என்னுமா போலே. அம.4, பெரி.

முழிமுழித்தல் - விழிவிழித்தல் என்பதன் கொச்சை. நாச்சியார் முழிமுழிக்க ஒண்ணாதாப் போலே. பாவை, 4-6.

முழுக்காட்டல் - குளிக்கச் செய்தல். எங்களையும் அவனையுங் கூட முழுக்காட்ட வேணும். பாவை, 20-3.

முழுத்தல் - மூழ்கடித்தல். துதிக்கையை முழுத்தச் செய்தேயும் பூவுக்கு ஒரு வாட்டம் வாராதபடி எடுத்துப் பிடித்துக் கொண்டு நின்றது ஆயிற்று. 3.5.1-36.

முற்கூறு - முற்பகுதி. இப்பாட்டின் முற்கூற்றிலே. க.நு.சி. 6, அழகு.

முற்கொழுந்து - முன்வரிசை. பசுக்களின் முற்கொழுந்து வந்து தலைவைக்கச் செய்தே அவன்தன்னை வரக்காணாவிட்டால் ஆற்றப் போகாதிறே. அதாவது அவன்தான் முற்கொழுந்திலே வாராதே பிற்கூழையிலே நிற்கும் ஆய்த்து, நடுவுபடும் அலமாப்புக் காண்கைக்காக. 9.9.0-36.

முற்கோலி வருதல் - முந்திக்கொண்டு வருதல். மேமே தனித்தனியும் திரளவும் பாதகமானவை ஒன்றுக்கு ஒன்று முற்கோலி வந்து மேல் விழுந்து நலியாநின்றன என்கிறாள். 9.9.8-9.

முற்பாடர் - முன்னே வந்தவர்; நாம் முற்பாடராகப் பெற்றிலோம் என்று ஆசைப்படுகிறபடி. சி.மடல், கண்ணி, 42.

முற்பாடன்* - முன்னே வந்தவன். தான் முற்பாடனாய் அத்தைத் தவிர்ப்பிக்கைக்காக. தி.ச.வி.89.

முற்பாடு - முதலில். முற்பாடாக அது கண்ணிலே தோற்றிற்றாக வுமாம். தி.நெ.தா.21, பட்டர்.

முற்றூசி - படையின் முன்னணி. பாணயுத்தத்திலே ப்ரதாந முற்றூசியிலே வந்தான் இவனிறே. தி.நெ.தா.7.

முற்றூட்டு* - முழு அனுபவம். அப்புகரை எனக்கு முற்றூட்டாக்கித் தந்தவனை. 1.7.3-24. அவ் அழகை எனக்கு முற்றூட்டாகத் தந்தவனே. 3.2.8-24.

முறி - துண்டு. குளிர்ந்த வாடையை இரு முறியாக வெட்டி இனி வளையைக் காப்பவர் ஆர். தி.வி.13.

முறுக்கம் - உறுதிப்பாடு. எல்லாமவனே என்று இருக்கையாலே, கூறை சோறு இவை வேண்டுவது இல்லை என்றார் தமப்பனார்; இவள், அவரினும் உள்புக்கு இடைச்சியான முறுக்கத்தாலே நெய் உண்ணோம் பால் உண்ணோம் என்கிறாள். பாவை, 2-6.

முறுகடி - முதிர்ச்சி. விச்லேஷ வ்யஸநத்தினுடைய முறுகடியாலே அத்யந்தம் அவஸந்நையாய். 7.2.0-9.

முறுகல்தனம் - முறைகெட்ட செயல் செய்யும் தன்மை. முறுகல் தனத்தில் அவன் என்னைக் கொண்டு நடத்த. பாவை, 28-6.

முறை - முறைமை; மரியாதை. விஷயாந்தர ப்ராவண்யத்தையும் போக்கி விடுகையன்றியே நெஞ்சிலே புகுந்து முறை உணர்த்தினவனை. தி.நெ.தா.14. நீ 'சேஷி' நான் 'சேஷபூதன்' என்னும் முறையிலே நிற்கப் போமோ? இ.தி.56.

முன்கை மிடுக்கர் - வலிய கையையுடைய முருடர்; அதாவது எடுத்ததும் கைநீட்டித் தாக்குபவர். முன்கை மிடுக்கரான அஸுரர்கள் கம்ஸ ப்ரேரிதராய் ஸஞ்சரிக்கிற காட்டிலே; 10.3.10-36.

முன்கையுரவியர் - வலிய கையினையுடையவர். அதாவது எடுத்ததும் கைநீட்டித் தாக்குபவர். ஜந்மமே தண்ணியர்; அநேகர். முன்கையுரவியர். 10.3.10-24.

முன்புத்தை* - முன்னையது. முன்புத்தை வாடை போல் அன்றிக்கே. 1.4.9-24.

மூக்கல் - முதுமையடைதல். இத்தனை கழிய மூக்கலாம் ஆகாதே. பெ.தி.1.3.7.

மூக்கறைச்சி - மூக்கறுபட்டவள்; சூர்ப்பணகை. உன்னைத் தனித்து உகப்பாள் மூக்கறைச்சியன்றோ? 10.3.9-36.

மூட்டுதல் - செலுத்துதல். விஷயங்களிலே மநஸ்ஸை வலிய மூட்டிப் போந்தேன். பெ.தி.1.1.8.

மூட்டுவாய் - பொருத்து. ஸ்ருஷ்டி காலத்தில் மூட்டுவாய் அறியுமவனிறே. 1.5.5-24.

மூதலித்தல்[6] - நிறுவுதல். பண்டு திருவுலகளந்தருளின திருவடிகள் என்று மூதலிக்கலாம்படி செவ்வித் தாமரைப்பூப் போலே இராநின்றது. பெ.மடல், கண்ணி, 5.

மூரிநிமிர்தல் - திமிர் போம்படி நிமிர்தல். சாடி - அவன் மூரி நிமிர்ந்தான். இவர்க்குக் குவாலாய் இருக்கிறபடி. மு.தி.23.

மூலையடி - மூலைப்புறம். முன்னடி தோற்றாதே மூலையடியே வர்த்தித்த செருக்கை அழித்து. பெ.தி.10.9.6.

மெய்க்காட்டுக் கொளல் - இருத்தலை எண்ணிக்கொளல். ருத்ரன் ப்ராஹ்மணரைப் போலே ஓத்துச் சொல்லித் திரியும் ப்ரஹ்மா அப்ஸரஸ்ஸுக்களை மெய்க்காட்டுக் கொள்ளும் இந்த்ரன்...இவர்கள் அடங்கலும் நமக்கு எதிரோ என்றிருக்கும் கம்ஸனுடைய. பாவை, 11-6.

மெய் - சத்தியம்; உடல். மெய்யான குடல் துடக்கிறே. 4.9.2-36.

மெய்ப்பாடு* - உண்மை நிலை. இடையனாய்ப் பிறந்த மெய்ப்பாடு 1.8.8-36.

மெல்குதல் - இளகுதல்; தளர்தல். நாலிரண்டு பண்ணை (முறை) வலித்தாலும் மெல்காத வில். பெ.தி.2.8.3.

மெழுக்கு - பூச்சு. கைப்பாணியிட்டு மெழுக்கு வாசியிலே ப்ரமிக்கும்படி பண்ணின இத்தனை ஒழிய. 5.1.5-36.

மெள்ள - மெல்ல. மெள்ள இவனருகு நின்றும் எழுந்திருந்து விடப்போம். பெரி.தி.4.5.6.

மெனக்கிடல் - பேச்சு வழக்குச் சொல். ஒன்றை நோக்காகக் கொண்டு முயலுதல். பரமகாருணிகரான பெரியவாச்சான் பிள்ளை மெனக்கிட்ட ஸ்ரீ வைஷ்ணவருக்காக ஸாதித்தருளின வ்யாக்யாநம். திருவெழு. 0.

மேகர் - வழியினை ஆராய்பவர். ராஜாக்கள் போம்போது முன்னே மேகர் நீர்விடுமாபோலே. 10.1.1-36.

மேய்ச்சற்றலை - மேயும் இடம். கன்றுகளுக்கு மேய்ச்சற்றலை பார்க்கை. பெரி.தி.3.3.4.

மேல்விரி - படுக்கையின்மேல் பரப்பும் விரிப்பு. திருப்பாற்கடலிலே நீர் உறுத்தாதபடி திருவநந்தாழ்வானைப் படுக்கையாகக் கொண்டு, அதிலே நாநாவர்ணமாய் இருப்பது ஒரு மேல்விரியை விரித்தாப்போலே அவன் வாய்ந்தருள, மேலெழுந்தருளி இருக்கும் ஆயிற்றுப் பிராட்டி. 7.6.6-36.

மேலுற்றை - மேலுள்ளதற்கு. இது மேலுற்றைக்கு இட்ட மர்யாதையோ; கீழுற்றைக்கும் ஏதேனும் உண்டோ. 5.7.3-36.

மேற்சாத்து - மேலாடை. பசுமேய்த்து வரும்போது திருவரைக்குத் தகுதியாக முன்பு சாத்தின பரியட்டத்துடனே சாத்து கைக்குத் தகுதியான மேற்சாத்தையும். பெரி.தி.3.4.3.

மேன்மை - உயர்வு; பரத்வம். இன்னம் மேன்மை தரை காணலாம். 1.3.1-36; மேன்மைக்கு எல்லையான பரமபதம் அநுபவ ஸ்த்தாநம். 6.6.11-36.

மேனாணித்திருக்கை* - செருக்குடன் இருத்தல். ருஷபம் போலே மேனாணித்து இருக்கிற இருப்பு. 2.5.7-36.

மேனாணிப்பு - செருக்கு, பெருமிதம் அத்தால் வந்த மேனாணிப் பாலே செருக்கி இருக்கிறவனை. தி.கு.தா.2. மேனாணிப்புத் தோற்ற நின்றபடி. 9.9.1-36.

மைத்தல் - இருண்டிருத்தல், கறுத்திருத்தல். பரமபதத்திலே ஸ்வரூபம் மைத்துப் போலே இருப்பது. நா.தி.1.3.

மைதிலி - சீதை. மைதிலி, உன்னை அறிந்தாயே நம்மை அறிந்தாயே, கலக்கிற தேசம் அறிந்தாயே என்றாரிறே பெருமான். 2.6.0-36.

மொசுமொசுப்பு - அக்கறை; செருக்கும் முசுமுசுப்பு என்று குறிக்கப்படுகிறது. யசோதைப் பிராட்டி பிள்ளைமனம் கன்றாமல் தீம்பிலே கைவளரும்படி வளர்த்த மொசு மொசுப்பு எல்லாம் தோற்றியிருக்கும். தி.மா.18.

மொட்டித்தல் - இதழ்குவிதல்; கூம்புதல். ஆம்பல் மொட்டிக்கும் படி போது விடிந்தது. பாவை, 14-3.

மொண்டெழு பானை - ஏற்றப் பானை "கொள், கொள்" என்று மொண்டெழு பானை போலே கிளர்ந்து வருகிற நிரவதிக ஸம்பத்தானது. 4.9.4-36.

மொறாந்த - சொரசொரப்பான. நரஸிம்ஹத்தினுடைய மொறாந்த முகமும். அம.8,பெரி.

மோக்க - நுகர. புதுப்பூ மோக்க வேணும். பெரி.தி.3.9.3.

மோடு - வயிறு. ஊண் மல்கி மோடு பருத்து இருக்கிறபடி. அம.8, அழகு.

மோழை - மடு. வெண்ணெயும் பெண்களும் ஆழமோழையாய்ச் செல்லுகிற அமளியிலே நாம் புகுந்து இருப்பதே என்று இருந்தான். சி மடல், கண்ணி, 37.

வக்குரித்தல் - கெடுதல். இவற்றினுடைய நலிவு வாயால் சொல்லில் வாய் வக்குரிக்கும் படியாய் இருக்கையாலே சொல்லாது ஒழிந்ததாதல். 9.9.2-36.

வகுப்பழகு - அமைப்பழகு. வகுப்பழகையுடைய. 5.9.7-12.

வங்கு - வளை; பொந்து. சங்குகள், தான் கிடக்கிற வங்கு களினுடைய வாசலிலே முத்துக்களை ஈன்றன. பெ.தி.3.4.2. வங்குகளிலே நிறைந்துள்ள தேனிலே தோய்த்து. பெ.தி. 1.2.5.

வட்டக்கிடை - வட்டமாக இருத்தல். மண்டபங்களிலும் நாற்சந்தி களிலும் வட்டக்கிடை ஓதா நிற்பர்கள். பெ.தி.2-10.5.

வட்டணித்தல் - வட்டமாய் இருத்தல். வட்டணித்துப் பெருத்த கண்களையும். பெரி.தி.3.5.1.

வடக்குத் திருமலை - திருவேங்கடம். ஸம்ஸாரிகளும் வந்து ஆச்ரயிக்கலாம்படி இருக்கிற மேன்மையில் ஏற்றத்தையுடைய வடக்குத் திருமலையும். பெ. மடல், கண்ணி, 6.

வடிம்பு - தடி. அசேதநமான ரதத்தோபாதி வடிம்பாலே தாக்கி நடத்த வேணும் ஆயிற்று. 1.4.6-36.

வடிம்பிடுகை * - 1. வற்புறுத்தல், தூண்டுகை. அவ்வவ காலந் தோறும் மாம்வத, மாம்வத என்று வடிம்பிட்டு அடிமை செய்தாப் போலே. 9.2·3-36. 2. மயக்குதல். தன்னை வடிம்பிடும் பருவத்தில் தோற்றுச் சொல்லுகிறாள்' தி.நெ.தா. 16. 3. தோற்றுதல். கலந்த போதை அங்குத்தை போக்யதை இப்போது கூட நெஞ்சிலே வடிம்பிடுகிறபடி. பெ.தி.9.3.1. 4. வற்புறுத்தல். என்னை இங்கு வைக்கிறது என் என்று வடிம்பிட்டுக் கேட்க. 7.9.0-36. 5. தொடர்ந்து வருதல். உன் திருவடிகளை வடிம்பிட்டு ஆச்ரயிக்கக்ஷமன் ஆயிற்றிலேன். பெ.தி.1.9.5.

வடிவழகு - சௌந்தர்யம், தோற்றப் பொலிவு. உம்முடைய வடிவழகையும் சீலத்தையும் காட்டித் தேவரீர் பண்ணின க்ருஷி பலித்த பலமன்றோ என்கிறார். தி.ச.வி.119.

வந்தேறி * - வந்து சேர்ந்தது ஆகந்துகம். ஈச்வரத்வம் வந்தேறி யென்னும்படி ஸங்கஸ்வபாவன்காணென்கிறார். 1.2.6-24.

வம்பு - புதுமை. க்ருஷ்ணனோடே பழகிச் சேர்த்தியா யிருக்கிற உனக்குப் பொய் சொல்லுகை வம்போ. பாவை, 14-6.

வயிரவுருக்கு - வயிரம் (வஜ்ரம்) போன்ற கடினமானவற்றையும் உருக்கும் வலிமையுடைய பொருள். அந்த ஸௌந்தர்யமும் ஔதார்யமும் சீலமும் வயிரவுருக்கு ஆயிற்று, அபலைகள் படுமத்தை வன்னெஞ்சரையும் படுத்தவற்று ஆயிற்று. 5.3 6-36. வயிரமும் உருக்குங்காணும் வாயில் குழலோசை. பெ.தி.2.7.8. கடிநஸ்தலத்திலே வர்ஷித்தால் காடிந்யமடங்க நெகிழ்ச்சிக்கு உறுப்பாமாபோலே, விஷயாந்தரத்திலே மநஸ்ஸு அதிகடிநமானாலும் சிதலமாம்படி வயிரவுருக் காயிறே பகவத் ப்ரபாவம் இருப்பது. தி.மா.17.

வயிறுதாரித்தனம் - பெருந்தீனிக்காரனாய் இருக்கும் தன்மை. முற்றத்தான்-வயிறு தாரித்தனம். பெ. மடல், கண்ணி, 141.

வரவு - வருகை. அற்றை (யானைக்கு உதவின அற்றை) வரவு தமக்கு உதவினாற் போலே இருக்கிறது ஆய்த்து இவர்க்கு. தி.மா.28.

வரிசை - பெருமை. தன்னோடு ஒத்த வரிசையைக் கொடுப்பான் ஒருவனை. பெ.தி.2.5.8.

வரிசையறுத்தல் - பெருமை குறைத்தல். தன் பெருமையாலே அவன் இவளுக்கு ரூபகுண தோஷங்களைச் சொல்லி வரிசை யறுத்து ஆண்டிடுமோ. பெரி.தி.3.8.0.

வரை - எல்லை. வரையிடாத குண பூர்த்தியை உடையவர். க.நு.சி.6, அழகு.

வரைதல் - 1. மணத்தல். தன்னுடைமையைத் தான் கொண்டு போம்போது வரைந்து வெளிப்படக் கொண்டு போகலாய் இருக்க, இப்படி(க்) களவிலே கொண்டுபோனது. பெரி.தி. 3.8.2. 2. வரம்பு கட்டுதல். ரக்ஷ்ய வர்க்கத்தில் வரையாதே ரக்ஷிக்குமவன். பெ.தி.1.3.4.

வல்லடிக்காரர் - வலிந்து கொள்ளையடிப்பவர். வல்லடிக் காரர்க்கு விளக்கு ஏற்றிக் காட்டுமா போலே. 9.5.3-36.

வல்லாண்மை - பலம்; சக்தி. துர்மாநத்தையுடைய ராவண னுடைய வல்லாண்மையுடைய சரீரத்தை வில்லாலே வேண்டோம் என்ற என்னாயன். பெ.தி.6.10.4.

வல்லி - கால்விலங்கு. வல்லியை முறித்துக் கையிற்கொண்ட. ஆனை. இ.தி.13.

வலவருகு - வலப்பக்கம். திருவாழியை வலவருகே உடையவன். பெ.தி.1.5.3.

வவ்வல் - நடுக்கம். அதனால் வந்த வவ்வலை ஆற்றும் ஆதித்யனும். பெ.தி.4.5.7.

வவ்வலிடுதல் - குளிர்தல். மிக வெப்பதும் செய்யாது, மிக வவ்வலிடுவதுஞ் செய்யாது, நரகம் ஆகிற பெருநெருப்பையும் விலக்கவற்று. தி.வி 58.

வழக்கன் * - மட்டமானது; பலர்க்கும் வழங்குவதற்கு உரியது. வழக்கனான சாந்து என்னவுமாம். தி.பல்.8.

வழியடிக்காரர் - வழிபறிக்காரர். வழியடிக்காரரைத் தண்ணீர் வேண்டுமாபோலே. தி.வி.40.

வழுமூட்சி - குற்றத்தின் மறைவு. அதாவது மேற்பூச்சினால் குற்றத்தை மூடி மறைத்தல். அகவாயைப் பார்த்தால் காக்கை நோக்கும்படியாய் இருக்க, தோலின் கைப்பாணிப் புறத்தால் வந்த வழு மூட்சியைப் பார்த்து ஸ்ப்ருஹை பண்ணும்படியிறே பண்ணிவைத்தது. 5.1.5-24.

வளர்த்தல் - உறங்கவைத்தல். இரண்டு சகடத்தை இரண்டருகும் இழுத்து நடுவே தொட்டிலையிட்டு வளர்த்திப் போனாள் தாயார். 5.3.3-36.

வளர்த்தி - வளர்த்து. பத த்ரயாத்மகமான திருமந்த்ரத்தில் ப்ரதம பதம் ஆகையாலே இத்தோடே கூடி மேலிரண்டு பதத்தையுங் கூட்டி மூன்று பதமாக வளர்த்தி. பெரி.தி.4.7.10. 2. வளர்ச்சி. முலையினுடைய வளர்த்தியாலே நெருங்கி நொந்திருக்கிற இடை. பெரி.தி.3.8.5.

வளர்த்துக்கொள்ளி - செவிலித்தாய். வளர்த்துக் கொள்ளியான தாயைப் போலன்றியே பத்துமாஸம் வயிற்றிலே வைத்து நோக்கிப் பெற்ற தாயாய். 6.3.9-36.

வளையம் - முடியில் வட்டமாகச் சுற்றியணியும் மாலை. பிராட்டி பிரிந்திருக்கிலிறே வைத்த வளையம் சருகாவது. 3.1.6-36.

வளைப்பிடல் - சூழ்ந்து தடுத்து நிறுத்தல். இவன் எல்லாம் செய்தாலும் அவன் 'அல்லேன்' என்றவாறு ஸ்வதந்த்ரனை வளைப்பிட ஒண்ணாது. பாவை, 25-6

வற்று - வல்லது. பரிச்சேதிக்கவற்றோ என்கை. 2.8.8-24. சொல்லக்கூட வற்றே. 5 9.10-9.

வறள் - வற்றுதல். கடலை வறளாகப் பருகையாலே. பெரி.தி. 1.5.2.

வறமுறுகல் - கடினமானது, கருகிப்போனது. அவன் முற்சந்தையிடப் பின்னே நான் சொன்னேன். தான் சொன்னானாகில் ஸ்ரீகீதையோபாதி வறமுறுகலாய்ப் போமிறே. 7.9.2-36.

வன்னியம் - குறும்பு, பகை. வழியில் உண்டான வன்னியம் அறுத்துக் கொடுத்தபடியைச் சொல்லுகிறது. தி.நெ.தா.13. ஸ்ரீவிபீஷ்ணாழ்வானுக்கு வன்னியம் அறுத்து ராஜ்யத்தைக் கொடுத்து. தி.மா.19.

வன்னியஞ் செய்தல் - சிற்றரசர்களாய் இருந்துகொண்டு அரசாட்சி செய்தல். ப்ரஹ்மாதிகளுக்கு போக ஸ்த்தானமாய் ஈச்வரோஹம் என்று வன்னியம் செய்கிற தேசமாய் அத்விதீயமான வைலக்ஷண்யத்தை உடைத்தான அண்டமாகிற அரணினின்றும் புறப்படவிட்டு. 4.9.8-24.

வாசி - வேற்றுமை. ஸ்திரீ நபும்ஸகங்களோடு புருஷர்களோடு வாசியில்லை என்று தோற்றுகைக்காக. 2.5.10-9.

வாய்க்கரை - கரைவாய்; அதாவது கரையோரம். என் பெண் ஈடுபட்டுச் சொல்லுகிற வார்த்தைகளை வாய்க்கரையிலே நிற்கிற நான் எத்தைச் சொல்லுவது. 5.6.7-24.

வாய்கரை - வெளிப்புறம். இவன்றான் அவிவேகி யாகையாலே அகவாய் ஆராய மாட்டாதே வாய்கரையிலே அழுந்தி நோவுபடா நிற்கும். தி.மா.16. 2. கரையோரம். ஸமுத்ரத்திலே போய்ப் புகவேணும். அதிலும் வாய்கரையிலே ஆகவொண்ணாது நடுவே சென்று இழிய வேணும். பாவை, 4-3. வாய்கரையர் - மேலெழுந்த அறிவுடையவர். வாய்கரையர் நினைக்கவும் நிலமன்று என்கை. தி.மா.40.

வாய்த்தலை - 1. வாய்க்கால். பெருவெள்ளத்துக்குப் பல வாய்த்தலைகள் போலே. 2.6.5-36. 2. பிறப்பிடம். அல்லேன் என்கைக்கு வாய்த்தலையான நெஞ்சிலே வந்து புகுந்தான் ஆயிற்று. பெ.தி.3.5.1. 3. தோன்றுமிடம். ஜ்ஞாநேந்த்ரியங்களுக்கும் அறிவுக்கும் வாய்த்தலையான ஏற்றம். 2.7.10-36. நினைவுக்கு வாய்த்தலையிலே இருக்கிறவன் அறியானோ? 7.10.10-24.

வாய்புலத்தல் - வாய்விட்டுப் புலம்புதல். அவன் படிகளை அநுஸந்தித்து வாய்புலத்துகிறாள் ஒரு பிராட்டி தசையை அநுஸந்தித்து திருத்தாயார் பாசுரமாகச் செல்லுகிறது. பெ.தி.4.8.0.

வாய்மை - வாய்ச்சொல். வாய்மை - வாகிந்த்ரிய வ்யாபாரம். அதாகிறது வசநம். பெ.தி.5.8.7.

வார்த்தைப்பாடு - பேசப்படுவது. உஷைக்குப் பிதாவான வார்த்தைப் பாட்டாலுள்ள புகழையுடையவன் என்னுதல். 4.8.9-36. 2. பேச்சழகு. சக்ரவர்த்தித் திருமகன் வாய்புலத்தும்படியான வார்த்தைப்பாடு உடையவளிறே. தி.ச.வி.91. 3. புகழ். உஷையினுடைய பிதா என்னும் வார்த்தைப் பாட்டை உடையவன் என்னுதல். 4.8.9-24. விஷ்ணுராத்மா என்கிறபடியே ஆத்மதயா நின்று சென்று வார்த்தைப்பாட்டை அவனுக்கு ஆக்கினான். 7.6.7-24.

வாரம் - கூலி. இரண்டு தலை வாரமும் தம்மது. பெ.மடல், கண்ணி,116.

வாரிப்பிடி - மீளாதபிடி. ஒரு கோபாலர் அபிமாநத்தாலே மழைக்கு ஒதுங்கினால் வாரிப்பிடியாக அகப்படுமிறே. பாவை, 28-6.

வாழ்ச்சி - வாழ்வு. உன்னுடைய வாழ்ச்சிக்கு நான் கால்பிடிக்க வேண்டுகிறது என்? 10.4.8-36.

விசைப்பு - நட்புரிமை; மிடுக்கு. அர்த்தம் அதாயி இருக்கச் செய்தே விசைப்புக் கிடந்தபடி காணும். பெ.தி.2.3.6.

விடக்கு - பிணம். ஒரு விடக்கைப் பற்றி இரண்டு பதார்த்தம் விவாதம் பண்ணுமாபோலே. தி.மா.4.

விடர் - காமுகர். விடருடைய செயலைச் செய்து என்னுதல். 1.7.5-36.

விடாய் - வேட்கை. தன்னை அநுபவிக்கைக்கு ஈடான விடாயைப் பிறப்பித்துத் தன்னை அநுபவிப்பிக்கிறான். 1.9.0-36.

விடிதல் - நிகழ்தல். கீழ் இவர் அஞ்சினாப் போலே விடிந்தது. 1.10.7-36.

விடிவோறே - விடிவோரை என்பதன் சிதைவு. (ஒரை - நேரம்) விடியும் நேரம். அவைமேய்க்கப் போம் காலமான விடிவோறே 'மீள வரும் அளவும் உனக்குத் தாரகமாக வேணும்' என்று ஊட்டி அவற்றின் பின்னே போகவிட்டேன். பெரி.தி.3.3.2. உபாஸிப்பர்கள் என்றும் சொல்லப்படுகிறவர்கள் விடிவோறே ஒருக்கால் ஸமாராதநம் பண்ணி அல்லாதபோது பேசாதே இருப்பார்களோ? பாவை, 14-6.

விடுகாது - தோடு கழற்றிவைக்கப்பட்ட காது. விடுகாதாய்க் கிடந்தாலும் தோடிட்ட காது என்று தெரியுமாபோலே. 10.1.1-24.

விடுநகம் - கிட்டிக்கோல், விலங்கு. நலிவுபடுத்தி விடுநகங் கட்டு வாரை 'நெகிழக் கட்டினாய்' என்று உறுக்கிக் கட்டுவிப் பாரைப் போலே. 7.1.1-36.

விடுநாண் - சங்கிலி. திருக்கழுத்திற் சாத்தின விடுநாணாவது திருவுந்தியளவும் தாழ. பெரி.தி.2.10.1.

விண்டார் - பகைவர். விண்டாரை ஆயிற்று வெல்ல வல்லது. பெ.தி.2.6.4.

விம்முதல் - பெரிதாதல். ஆகாசாவகாசம் வெளி அடையும்படி விம்ம வளர்ந்தவன். பெ.தி.1.1.4.

விரகு - வழி (உபாயம்). திருத்தும் விரகு எங்ஙனே என்று பார்த்தருளி. 1.2.0-24. அஸுரரை முடிக்கும் விரகுகளே. 9.3.6-9.

விரகன் - வல்லவன். விரகனான ஸர்வேச்வரன். 4.8.6-9.

**விரைத்தல்** - விதைத்தல் என்பதன் கொச்சை. தினை விரைக்கைக் காக வெட்டி எடுத்த வேய்ங்கழைபோய் விண்ணைத் திறக்கும் திருமலை. மூ.தி.89.

விலக்கடி* - 1. புறநெறி. இவர்கள் ஸம்ஸாரத்துக்கு விலக்கடி தேடிக்கொண்டு போகிறபடி எங்ஙனேயோ? 1.2.8-36. பலாந்தரத்தில் போம் விலக்கடிகளைத் தள்ளி. 1.3.5-36. 2. ஒதுக்குதற்குரியவை (நிஷேதங்கள்). விலக்கடிகளில் போகாமே, ப்ராப்தமுமாய் போக்யமுமான உன் திருவடி களிலே வந்து கிட்டுவது ஒரு ப்ரகாரம். 4.9.1-36. 3. தடை கள். (ப்ரதிபந்தகங்கள்). அதுக்கு மேலே நீ பல விலக்கடி களையும் உண்டாக்கி வைத்தாய். 3.1.4-36. அதுக்கு மேலே விலக்கடிகளும் உண்டாயிற்று. 3.1.4-24.

விலங்கப் பார்த்தல் - சுற்றிலும் பார்த்தல். திருநாமம் செவிப் பட்டவாறே விலங்கப்பார்ப்பது மேலே பார்ப்பது கீழே பார்ப்பது ஆனாள். 2.4.1-36.

விலையோலை - விற்பனைப் பத்திரம். அடிமை விலையோலை எழுதும்போதும். தி.பல்.3.

விழுக்காடு - 1. விழுகை. 'ஜிதந்தே' என்று விழும் திருவடிகள், அவ்விழுக்காட்டுக்குத் தோற்று அவன்தான் 'ஜிதந்தே' என்று அணைக்கும் கை. 3.1.2-24. இவன்மேல் விழுக்காடும் அவர்கள் இறாய்ப்பும் தோற்றுகிறது. தி.நெ.தா.5. 2. தெய் வாதீனமாக. கோல் விழுக்காட்டிலே பரிஹாரமாயிருக்கை யன்றிக்கே ஒரு வ்யக்தியை நிர்த்தேசித்து அதுக்கு உத்கர்ஷத் தைப் பண்ணித்தர வேணும் என்று சொன்னவனும். 4.10.5-36. 3. தற்செயல். படைவீட்டிலிருந்தால் பலரும் உண்டாகையாலே விழுக்காட்டோபாதியிறே ஸித்திப்பது. க.நு.சி.0,பெரி. 4. விளைவு. கொடுமை செய்யும் இத்யாதி- விழுக்காடு அறியாதே வந்து கிட்டில் செய்வது என்னென்னில் தடவரை இத்யாதி-திருவாழியையிட்டுத் தோளைக் கழித்தல், ஓர் அம்பாலே தலையை உருட்டுதல் செய்யும் அத்தனை. 10.2.1-36. 5. பொருள். இந்தப் பதங்களுக்கு அர்த்தபேதம் இல்லையோ என்னில் ப்ரவ்ருத்தி நிமித்த பேதத்தாலே வரும் விசேஷம் உண்டானாலும் விழுக் காட்டில் ஆத்ம ஸ்பர்சியாய்த் தலைக்கட்டுகையாலே பர்யாயம் ஆகிறது. தி.பல்.1. 6. தன்மை. பாஹ்ய ஸமயங்களானாலும் விழுக்காட்டில் அவற்றோடு ஒத்திருக் கிற மற்றுள்ள குத்ருஷ்டிகளாலும். 4.10.9-9.

விளக்குப் பிணம் - இருட்டு. விளக்குப் பிணம் போலே காண ஒண்ணாதபடி. 5.7.4-36. துர்யோதநாதி ராஜாக்கள் விளக்குப் பிணம் போலே அவிந்து போகப் பண்ணி. பெரி.தி. 4.7.8.

விற்பிடி மாணிக்கம் - 1. ஒளியுடைய மாணிக்கம். தன் கைக் கடங்காத விற்பிடி மாணிக்கத்தைப் பெற்றவன். தி.பல்.0. 2. இராமன். தேவகீ புத்ரரத்நமும் அது தன்னிலும் விற்பிடி மாணிக்கமும் விலை செல்லும் தேசம். க.நு.சி.2, அழகு.

வினை - போர். இவன் ஆண்ட பரிகரம் அடங்கலும் வினைக்கு உடலாயிற்றது இல்லை. பெ.தி.8 1.1.

வினைத்தலை - போர் முகம். வினைத்தலையில் படையறுத்துக் கொள்வாரைப் போலே. 7.3.4-24.

வீசம் - குறைந்த மதிப்புள்ள நாணயம். கையில் வீசமும் போய் இவனோட்டை ஸம்பந்தம் நமக்கு அவத்யாஹம் என்று தோற்றும்படி பௌவநமும் போனவாறே...தொற்று அறச் சொல்லி பிணங்கா நிற்பர்கள். பெ.தி.1.3.7.

வீரப்பாடு* - வீரம். வீரப்பாட்டை ஆபரணமாக உடையராய். பெரி.தி.4.6.10. விரோதி மிகுந்தாலும் வெந்து விழப் பண்ணும் வீரப்பாட்டையும் அநுஸந்தித்து. 2.4.0-12.

வீறு* - பெருமை. பெரிய திருவடி மேலே ஏறி உன்னுடைய ஸர்வைச்வர்யத்தாலே வரும் வீறு தோற்றும்படி இருந் தவனே. 2.6.8-9.

வெக்காயம்* - 1. வெப்பம். ஸம்ஸார வெக்காயம் எல்லார்க்கும் ஒத்திருக்கையாலே. 1.2.1-36. 2. ஆற்றாமை. ஆற்றாமை யோடே முதலானாய் என்றார். அந்த வெக்காயத்தோடே ஆண்பெண்ணாய், அது தன்னிலும் தம் வாயாலே கூப்பிடு கைக்கு யோக்யதை இல்லாதபடி மோஹங்கதையாய் வேற்று வாயாலே கூப்பிடும்படியாய்ச் செல்லுகிறதுமேல். தி.நெ.தா.11.

வெக்கை - அனல், வெப்பம். வேரிலே வெக்கை தட்டினால் கொழுந்து முற்பட வாடுமா போலே. பெரி.தி.2.2.3.

வெச்சாப்பு - சிறிது வெம்மை. கண்டுதி சமிக்கும்படி வெச்சாப் போடே காதுகளிலே திரியை இடுவன் என்ற இடத்திலும் அவன் இசையாமையாலே. பெரி.தி.2.3.3.

வெஞ்சோறு - சுடுசோறு- தயிரும் பழஞ்சோறும், பாலும் வெஞ்சோறும் அவ்வவ காலங்களிலே தந்து திருநாமங் களைக் கற்பித்த அதுக்கு ப்ரத்யுபகாரம் பண்ணினிகோள். 9.5.8-36.

வெட்டித்தல் - கோபித்தல். தாம் என்னை இத்தனை போது படுத்தின சிறுமையாலே வெட்டித்து உபேக்ஷித்து இருக் கிறேனோ. தி.நெ.தா.21, பட்டர்.

வெட்டிது - வன்மையானது; கடுமையானது. ஒன்றும் கொடுப்ப தில்லை என்று வெட்டிதாக வார்த்தை சொல்ல. பெரி.தி. 2.6.5.

வெட்டிய - வன்மையான. கடுங்கால் மாரி இத்யாதி - வெட்டிய காற்றை யுடைத்தான மாரியானது. பெ.தி.6.10.8.

வெட்டிமை - கொடுமை. நங்கையீர் என்று உறவற்ற சொல்லாலே வெட்டிமை எல்லாஞ் சொல்லவில்லை என்னுமிடம் நாங்கள் இன்றாக அறிகிறோமோ. பாவை, 15-3.

வெட்டியகோள் - பலாத்காரம். கொடுங்கோளால் வெட்டிய கோளாலே யென்றபடி. 4.8.6-36.

வெட்டிய சொல் - கொடிய சொல். கொடுமையை உடையளான கைகேயி வாயில் இந்த வெட்டிய சொல்லைக் கேட்டு. பெரி.தி.4.8.4.

வெட்டியன் - கொடியவன். கம்ஸன் வெட்டியன். பாவை, 16-6. அறவெட்டியனான கபந்தன். தி.ச.வி.104.

வெடிவிளக்கு - விடிவிளக்கு என்பதன் சிதைவு. வெடி விளக்கெரித்துக் கொண்டிருந்து. பெ.தி.8.1.1.

வெங்நெஞ்சி - கொடிய நெஞ்சினள். வெந்நெஞ்சியான. பெ.தி. 11.4.9.

வெருவுதல்* - அஞ்சுதல். ஐச்வர்யம் கண்டு வெருவாதே சீலத்தை அநுஸந்தி என்கிறார். மு.தி.29.

வெள்ளம் - பல. நாம் உதவ எங்கே கண்டீர் என்ன ஒரு வெள்ள மன்றோ, என்று உதாஹரணம் காட்டுகிறார். 4.9.1-36.

வெள்ளாட்டி - வேலைக்காரி. பின்னை வெள்ளாட்டியை இட்டுப் பரிபவிப்பர்கள்; அதுக்கும் போகானே. 9.1.5-36.

வெள்ளோசை - பொருளற்ற ஓசை. வெள்ளோசையாய்க் கழியுண்பது இல்லை. 5.9.6-36.

வெளிச் சிறப்பு* - அறிவுத் தெளிவு; நீ பண்ணித் தந்த வெளிச் சிறப்பாலே த்ருப்தன் ஆகிறிலேன். 6.9.2-36. கண்ணழிவு அற்ற வெளிச் சிறப்பு உடையார்க்கு இங்ஙனேயிறே இருப்பது 5.9.1-36.

வெளிச் செறிப்பு* - 1. அறிவுத் தெளிவு. வேதம் போலன்றியே, அவன் காட்டின வெளிச் செறிப்பாலே அவனைக் கண்ட நான் அறிந்தேன். சி.மடல், கண்ணி. 24. 2. உணர்வு. கீழ் பொய்யில் வ்யவஸிதராய் நின்ற நிலையில் நின்று கால் வாங்கிய நாம் உஜ்ஜீவிக்கும் ப்ரகாரம் ஏதோ என்னும் வெளிச்செறுப்பை உடையவர்களுக்கு. தி.மா.15.

வெளிச் செறித்தல் - விளங்குதல். அநாத்யஜ்ஞாநாந்தகாரம் நீங்கி பகவத் விஷயம் வெளிச்செறித்த காலத்திலே. பாவை, 28-3.

வெளிச் செறிப்பிக்கை - விளக்குகை. உன்னுடைய நிரவதிக தேஜஸ்ஸாலே வெளிச்செறிப்பிக்கைக்காகவும் உன்னுடைய அழகு காண்கைக்காகவும் நீயே வந்து திற. பாவை, 7-3.

வெளியது - தாழ்ந்தது. இவருக்கு வெளியதாய்க் கழிகிறதிறே க.நு.சி.1, பெரி.

வெளிறு - தாழ்ந்தது. அவர் உத்தேச்யமாகப் பற்றுகிற. விஷயமிறே இவருக்கு இப்போது வெளிறாய்க் கழியுண்கிறது. க.நு.சி.1, நம்பிள்ளை.

வெறியோடல் - வெறுமையாக இருத்தல்; வெற்றிடமாகத் தோன்றல். இவள் போகையாலே தன் திருமாளிகை எல்லாம் அழகு அழிந்து வெறியோடிற்று என்றும். பெரி.தி.3.8.0.

வெறுந்தரை - எல்லாவற்றையும் இழந்த ஒன்றுமற்ற நிலை. அந்நோக்குக்கு இலக்காய், இன்று வெறுந்தரையான என் தூதாய். 1.4.2-24.

வெறும்புறம்* - 1. வெற்றுடம்பு. ஆரை மதித்து உடம்புக்கீடிட்டு வருவது என்று வெறும்புறத்திலே வந்து நலியாநின்றது. 9.9.2-24. 2. அடையின்றித் தனியாகச் சொல்லல். வெறும் புறத்திலே தென்றல் என்ன அமையும், மல்லிகை கமழ் தென்றல் என்ன வேண்டா. 9.9.2-36.

வெறுமன் - வீண். நீ நெடுநாள் பச்சையிட்டு ஆச்ரயித்தாய்; அவ் ஆச்ரயணம் வெறுமன் போயிற்றதாக ஒண்ணாது என்று அவனை அழைத்து. 4.10.8-36.

வெறுமை - ஒன்றுமற்ற நிலை (ஆகிஞ்சந்யம்). தம்முடைய வெறுமையைச் சொல்லி. பெ.தி.1.10.1. தங்கள் வெறுமையை முன்னிடும் அத்தனை. 10.1.4-36.

வெறுவியர் - ஒன்றுமில்லாதவர். வெறுவியருமாய் இருக்கிற ஸ்ரீஸுக்ரீவ மஹாராஜர். 9.1.2-9.

வேண்டப்பாடு* - பெருமை; சிறப்பு. வேண்டற்பாடு என்பதன் கொச்சை. நீ நினைத்ததை முடித்துக்கொண்ட வேண்டப் பாடும். 5.10.9-9. இத்தலையைத் தோற்பித்த வேண்டப்பாடு தோற்றும்படி. 6.1.5-36. முக்யமும் - வேண்டப்பாடும். 5.10.9-36.

வேண்டற்பாடு* - பெருமை; இன்றியமையாமை. உன் வேண்டற் பாடு தோற்றும்படி. 5.7.1-9. 2. விரும்பப்படுதல். க்ருஷ்ணனாலே வேண்டற்பாடுடையாள் ஒருத்தியை எழுப்பு கிறார்கள். பாவை, 8-3.

வேணும்* - வேண்டும் என்பதன் கொச்சை. இங்குத்தைக்குக் கிஞ்சித்கரித்தோமாக வேணும். 1.7.1-36.

வேதுகொள்ளல் - காய்ச்சி ஒற்றல். வேது கொண்டாள். 3.5.4-36.

வேப்பங் குடிநீர் - மருந்து நீர். இவ்வேப்பங்குடி நீரையன்றோ நான் உன்னைக் குடிக்கச் சொல்லுகிறது. 1.10.4-24.

வேர்ப்பற்று* - 1. வேர் உள்ள இடம். அதாவது அடிப்பகுதி. மலையினுடைய வேர்ப்பற்றிலே உறும்படியாக. பெரி.தி 3.5.4. 2. ஆதாரம். தனித்தனியே சொல்லில் ஒருவரல்லால் ஒருவர் பிழைக்கிலுமாம் என்று வேர்ப்பற்றிலே நலிய. மு.தி.93.

வேர்ப்பு - வேர்வை. வேர்ப்பு மணத்தோடே கூடின கூறை. பாவை, 27-6.

வேர் விழுதல் - ஆழப்பதிதல். நம்பியுடைய அழகு வெள்ளம் என்னுடைய நெஞ்சிலே வேர்விழுந்தது என்கிறாள். 5.5.6-36.

வேழ்க்கை - வேட்கை. களவிலே வேழ்க்கையுடையனாய், அபிநிவிஷ்டனாய் என்னவுமாம். 1.5.1-36.

வைப்பன் - கடைசியில் பயன்படுத்துதற்காக வைக்கப்பட்டது. இவ்வளவிலும் பலிக்கக் காணாமையாலே, வைப்பனாக வைத்த ப்ரஹ்மாஸ்த்ரம் வாய்மடிந்தது கிடீர் என்று கூப்பிடுகிறார். 7.1.0-36.

